# 18 புராண சுருக்கம்.

(முதல் பாகம்.)

ப்ராஹ்மம். ★ பாத்மம்.



ஸ்ரீ வேதவ்யாஸர்.

வைஷ்ணவம். ★ சைவம்.

(மாம்பலம் குருகுல வெளியீடு.)

|| ஸ்ரீ: ||

# பதினெட்டு புராண சுருக்கம்.

*[ப்ராஹ்மம், பாத்மம்; வைஷ்ணவம், சைவம் முதலிய புராணங்களின் தத்வங்களும், புராண சுலோகங்களும், இடைஇடையே சிறு சிறு கதைகளும் எல்லோரும் அறிந்து பயனடையக்கூடிய அரிய பெரிய விஷயங்களுடனும் கூடியது.]*

ஆசிரியர்:

**ஸ்ரீவத்ஸ, வெ: ஸோமதேவ சர்மா.**

**" மாம்பலம் குருகுல வெளியீடு "**

**2, ஸ்டேஷன் ரோடு, மேலமாம்பலம், T. நகர்,**

**சென்னை 17.**

**ஸ்ரீ மீனாக்ஷி பிரஸ், சீர்காழி.**

**மன்மத௵ மாசிமீ ]** —— **[ விலை ரூ. 2.**

ஸ்ரீ வேதவ்யாஸாய நம:

# ஆசிரியரின் விக்ஞாபனம்.

ஸ்ரீ ஜகத்குருவின் ஆக்ஞையாலும் பல ஆஸ்திகர்களது பிரார்த்தனையாலும் முதல்பாகம் முன் நினைத்தபடி சுருக்கமாயினும், மற்ற ஐந்து பாகங்களும் ரொம்பவும் விரிவாகவும், உயர்ந்த காகிதத்திலும் இருக்கும். எல்லா பாகங்களும் பூர்த்தியாக சுமார் ரூ. 10000 க்குமேல் ஆகின்றது.

தாராளமாக ஆஸ்திகர்கள் நன்கொடையளித்து பேருதவி புரிந்தால்தான் இதுவரை வெளிவராத பல அறிய விஷயங்களுடன் இது விரைவில் வெளியாகும். இத்தகைய பிரசுரங்களால் பலர் பலவகையான தர்மத்திலீடுபட்டு நன்மைபெற்றனர். பெருகின்றனர். இது ஆஸ்திகர்கள் கண்ட உண்மை. 6 பாகத்திற்கு ரூ. 15 நன்கொடையாக அளித்து சந்தாதாரராகச் சேர்ந்து உற்சாகம் அளியுங்கள். மிக ஸ்வல்ப கார்ப்பிகளே அச்சிடுகிறோம். உடனே உதவிசெய்து இதில் சேருங்கள்.

தங்கள்,

ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா,
18 புராண ஆசிரியர்.



ஸ்ரீ ஜகத்குரு

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி.

ஸ்ரீ:



**श्रीमत्परमहंस परिव्राजका चार्यवर्य**
**श्रीमच्छंकर भगवत्पाद प्रतिष्ठित**
**श्रीकांची कामकोटिपीठाधिप जगद्गुरु**
**श्रीमच्चन्द्रशेखरेन्द्र सरस्वती श्रीपादैः**

*ஸ்ரீ ஸ்ரீவத்ஸ. ஸோமதேவ ஶர்மணே க்ரியதே*
*நாராயணஸ்ம்ருதி:*

*தங்களால் தமிழ் பாஷையில் எழுதப்பட்டு நம் முன் வைக்கப்பட்டுள்ள பதினெண் புராண ஸங்க்ரஹ மென்னும் நூலின் ஒரு பாகத்தைப் பார்வை யிட்டோம்.*

*நமக்கு தர்மங்களைப் போதிக்கும் மூலப்ரமாணங் கள் வேதங்கள். அவைகளின் பொருள் எல்லோ ராலும் எளிதில் அறிய முடியாதது. ஸம்ஸ்கிருத பாஷையில் பாண்டித்ய முள்ளவர்களும் சீக்ஷை முதலிய அங்கங்களின் உதவியைக் கொண்டுதான் புரிந்துகொள்ளக்கூடும். ஆகவே அவ் வேதங்களின் பொருளை எல்லோரும் எளிதில் அறிந்துகொள்வதற் காக பதினெண் புராணங்கள் ஸ்ரீ வேதவ்யாஸ முனிவ ரால் இயற்றப்பட்டுள்ளன. இவைகளின் பொருளை ஸம்ஸ்கிருத ஞானமில்லாதவர்கள் ஓரளவாவது உணர்வதற்குத் தாங்கள் எழுதியுள்ள இந்நூல் மிக வும் உபகார கரமாகும். இத்தகைய உயர்ந்த நூலை எழுதியுள்ள தாங்களும் இந் நூலைப் படிக்கும் ஆஸ்தி கர்களும் ஸகலமான ச்ரேயஸ்களையும் அடையுமாறு ஸ்ரீ சந்த்ரமௌளீச்வரரை ப்ரார்த்திக்கிறோம்.*

*விஜய யாத்ராஸ்தாநம்,*
*ஸ்ரீ காஞ்சீ க்ஷேத்ரம்.*
*மன்மத மாக சுத்தாஷ்டமீ*

**நாராயண ஸ்ம்ருதி:**

## 28—2—56 வரை
## நன்கொடை அளித்த தார்மிகர்கள்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1 | ஸ்ரீமான் | ராமாமிருதம் அய்யர், டில்லி | ரூ. 50 | 0 |
| 2 | ,, | சுந்தரேசபந்த், டில்லி | 50 | 0 |
| 3 | ,, | நா. ஸ்ரீநிவாசன், டில்லி | 50 | 0 |
| 4 | ,, | A. ராமச்சந்த்ரய்யர், டில்லி | 50 | 0 |
| 5 | ,, | டி. பி. எஸ். அய்யர், டில்லி | 25 | 0 |
| 6 | ,, | ஜீ. வி. ராமன், கல்கத்தா | 100 | 0 |
| 7 | ,, | ஏ. எஸ். நாராயணய்யர், மதுரை | 25 | 0 |
| 8 | ,, | T. A. ஸ்ரீநிவாஸன், பாம்பே | 20 | 0 |
| 9 | ,, | பெயர் விரும்பாத தார்மிகர் | 20 | 0 |
| 10 | ,, | ந. பரசுராமன், டில்லி | 15 | 0 |
| 11 | ,, | S. கிருஷ்ணமூர்த்திஅய்யர், அரயபுரம் | 15 | 0 |
| 12 | ,, | V. R. ராமகிருஷ்ணன், கோயம்புத்தூர் | 15 | 0 |
| 13 | ,, | ப. சுப்ரமண்யம், பல்லாரி | 15 | 0 |
| 14 | ,, | V. D. சர்மா, டில்லி | 15 | 0 |
| 15 | ,, | T. N. சோமநாதராவ், பட்டுகோட்டை | 25 | 0 |
| 16 | ,, | C. S. சேஷாத்ரிசாஸ்திரி, கோயம்புத்தூர் | 20 | 0 |
| 17 | ,, | விஸ்வநாதன், கோலார் | 15 | 0 |
| 18 | ,, | பரசுராம் சர்மா, பீஹார் | 15 | 0 |
| 19 | ,, | V. அநந்தராமன், பாம்பே | 15 | 0 |
| 20 | ,, | M. R. சங்கரய்யர், மாத்தூர் | 15 | 0 |
| 21 | ,, | V. நடராஜன், கோஹதி | 15 | 0 |
| 22 | ,, | R. ஸ்ரீநிவாஸன், நன்னிலம் | 15 | 0 |
| 23 | ,, | S. ராஜம்மாள், திருவையாறு | 15 | 0 |
| 24 | ,, | S. பாலசுப்ரமண்யய்யர், கொடியாலம் | 15 | 0 |
| 25 | ,, | N. S. N. விச்வேச்வரய்யர், திருநெல்வேலி | 15 | 0 |
| 26 | ,, | குருபக்த குருராஜ், சென்னை | 20 | 0 |

குறிப்பு:— பின்னால் சேருகிறவர்கள் பெயர் அடுத்த இரண்டாம் பாகத்தில் வெளிவரும்.

# பதிப்புரை.

பல்லாண்டுகளாக பதினெண் புராணங்களையும் வெளியிட ஸங்கல்பித்தேன். ஒரு எழுத்துகூட விடாமல் தமிழ்ப்படுத்தி அச்சிடுவதானால் லக்ஷம் ரூபாய்க்குமேல் செலவாகும். அதை ஆஸ்திக அரசாங்கமோ செல்வம் நிறைந்த ஆஸ்திக மடாதிபதிகளோ செய்யலாமே தவிர என் போன்றவருக்கு ஸாத்யமில்லை. ஆங்கிலத்தில் பெரும்பாகம் மொழி பெயர்க்கப்பட்டுளது. தெலுங்கிலும் மலையாளத்திலும் சில புராணங்கள் மொழி பெயர்க்கப்பட்டிருக்கின்றன. பல்லாண்டுக்கு முன் நாட்டுக் கோட்டை நகரத்தாரும், சென்னை சிந்தாத்ரிபேட்டையிலிருந்த சில ஆஸ்திகர்களும், சில ஆகமங்களை க்ரந்த எழுத்தும் தமிழ்மொழி பெயர்ப்புமாக அச்சேற்றினர். இதுபோன்ற நூல்கள் நம்நாட்டு நிதிகள். அவைகளால் அருள் பெருகுமே அன்றி பொருள் பெருகாது. அருளை நாடிய ஆஸ்திகர் குறைந்து பொருளைத்தேடுபவர் நிறைந்த இக்காலத்திலே பதினெண் புராணங்களில் ஊக்கமில்லாதது ஸஹஜமே. எனினும் மிக மிக வருந்தத்தக்க விஷயமிது.

ஆரியர் த்ராவிடர் என்ற பேத புத்தியைக் கிளப்பி சுயநலம் பெற்ற ராஜ தந்திரிகள் நாட்டைவிட்டுப்போய் விட்டாலும் இந்த விஷவிருக்ஷம் வேரூன்றி சாக உபசாகைகளுடன் வளர்ந்து விட்டது. அதனால் ஆஸ்திகத் தமிழர் கூட முன்னவரைப்போல் வடமொழி நிதிகளைத் தமிழருக்கு வாரியளிக்க முன்வரவில்லை.

1. **கூர்மபுராணம்.** அதிவீரராம பாண்டியரால் ஆயிரத்து ஐநூற்று அறுபது செய்யுளாக பாடப்பட்டு, எண்பத்தெட்டு ஆண்டுகளுக்குமுன் சென்னை தண்டையார்பேட்டையில் அச்சிடப்பட்டுளது.

2. **மத்ஸ்ய புராணம்.** வடமலையப்பிள்ளை என்பவரால் ஐயாயிரத்தொன்பது பாடல்களாகப் பாடப்பட்டு நூறு ஆண்டுகளுக்குமுன் மினர்வா அச்சகத்தில் வெளியிடப்பட்டுளது.

3. **லிங்கபுராணம்.** குலசேகரபாண்டியரால் இரண்டாயிரத்து ஐநூற்றுறு பாடல்களாக எண்பது ஆண்டுகளுக்கு முன் சென்னை தண்டையார்பேட்டையில் அச்சிடப்பட்டது.

4. **தக்ஷிண தேச ஸ்காந்தம்.** கச்சியப்ப சிவாச்சாரியரால் பத்தாயிரத்து முன்னூற்று நாற்பத்தாறு பாக்களாகப் பாடப்பட்டு உரையுடனும் வெளியிடப்பட்டது.

5. **ஸ்காந்த காசீகண்டம்.** அதிவீரராமபாண்டியர் பலபாக்களால் மொழிபெயர்த்த உரையுடன் பல்லாண்டுகளுக்குமுன் வெளியானது.

6. **ப்ரும்மோத்தர கண்டம்.** ஸ்காந்தத்தைச்சார்ந்த இந்த பாகமும் தமிழ்படுத்தப்பட்டு பல்லாண்டுகளுக்கு முன் வெளிவந்தது.

இங்ஙனம் பண்டைய தமிழபிமானிகளால் பாடப்பட்டு தமிழரால் அச்சிடப்பட்டன. தற்கால தமிழ் வளர்ப்போர் தமிழபிமானி என்போர் புதிதாக நம் நாட்டு நூல் ஒன்றையும் தமிழ் படுத்தவில்லை. அச்சானவைகளைப் புதுப்பிக்கவுமில்லை.

**கச்சியப்ப சிவாச்சார்யர் ஸ்காந்தத்தை வெளியிட்டு இலவசமாக தரும் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடாதிபதிகளை மறக்கவில்லை. நன்றியும் செலுத்துகிறோம். தர்மபுரம் ஆதீனமும் பல நூறு நூல்களை வெளியிடுகிறது. ஆஸ்திகர், அவர்களுக்கு கடமைப்பட்டுளோம்.**

அன்னியபாஷையிலுள்ள வெட்டிக்கதைகளைத் தமிழ் படுத்துபவர், குடும்பச்சண்டை துர்மார்க்கம் செய்தவர் கற்பனைக்கதை முதலியவைகளை எழுதி, பாமர மக்களிடம் பணம்பறிக்கும் எழுத்தாளர் ஆகியவர் மனம் புராணக் களஞ்ஜியத்தில் புகவில்லை.

இந்நிலையில் சொந்த வருவாயிலிருந்து ப்ராஹ்மம் பாத்மம் வாமநம் மார்க்கண்டேயம் கூர்மம் ப்ரும்ம வைவர்த்தம் இவ்வாறையும் வசநநடையில் சுருக்கமாக வெளியிட்டேன். விற்பனை இல்லாததாலும் பலர் ஏமாற்றியதாலும் நஷ்டப்பட்டதுடன் அவைகளில் சில காபிகள் கூட கைவசமில்லாமல் போய்விட்டன.

பலர் தூண்டினுலும், பொருளுதவி கிடைக்காது முன் போல் நஷ்டப்படவேண்டாமென எண்ணி சும்மாஇருந்து விட்டேன். 1955 ஆண்டு டில்லி கரோல் பாக்கில் நவ ராத்ரி உபன்யாஸம் நடக்கும்போது ப்ரஸ் கண்ட்ரோலர் ஸ்ரீமான் ராமசந்த்ர அய்யரவர்கள் தானே முன்வந்து ''ஏதோ அச்சிட விரும்பினீர்களாமே அதென்ன?'' என்று கேட்டார். இதை இமயத்திலுள்ள சிரஜீவி ஸ்ரீ வேதவ்யாஸர் தூண்டியதாக எண்ணினேன். பேப்பர் அச்சு முதலியவைகளை தார்மிகரைக்கொண்டு ஏற்பாடு செய்யலாம் என்ருர். உடனே அதைக் கேட்டிருந்த ஸ்ரீ ராமாமிருதமய்யரவர்கள் ரூ. 50 நான் தருகிறேன் என்ருர். அங்ஙனமே ஷை ஸ்ரீ ராமசந்த்ரய்யர், ஸ்ரீ நா. ஸ்ரீநிவாஸய்யர், ஸ்ரீ சுந்தரேசபந்த் முதலியவர்கள் ஐம்பதுஐம்பதாக உதவினர். இதைக்கேட்ட் வால்காட் ஸ்ரீ ராகவன் தன்னையும் இதில் சேர்த்துக்கொள்ளச் சொன்னர். இது ஸ்ரீவேதவ்யாஸராணை. இது போல் பற்பல ஊர்களில் தார்மிகர் உதவமுன்வருவர் என நம்பி இதில் முனைந்தேன். மிகமிக சுருக்கமாக 20 புராணங்களையும் 5 புத்தகமாக ஸ்வல்ப விலையில் வெளியிட விரும்பினேன். முதல் 4 புராணச் சுருக்கம் எழுதி அச்சேற்றியவுடன் அது அட்டவணை போல் இருந்தது. என் மநதிற்கே பிடிக்க வில்லை. டில்லி ஸ்ரீமான் சுந்தரேசபந்த் அவர்களும் இது இன்னும் சிறிது விரிவாக இருக்கட்டும். 6 பாகமாகவும் 15 ரூபாய் விலையுள்ளதாகவும் இருக்கட்டும். அதற்கு நன்கொடை அல்லது முன்பணம் அல்லது சந்தாதாரர் போல் சிலரைச்சேர்த்து உபகரிக்கிறேன் என வாக்களித்து சிலரைச்சேர்த்தும் தொகை சிறிது அனுப்பினர். ஆதலால் தார்மிகர் ஸஹாயத்தை எதிர்பார்த்து இரண்டாவது பாகம்முதல் விரிவாகவே எழுதுகிறேன். **என்னைக் கைவிடாமல் நன்கொடை அளித்தவருக்கு த்ரோஹியாகாமல் செய்வது தார்மிகர் கடமை.**

இதுவரை எவரும் வெளியிடாதது! கேட்டே இராத பற்பல விஷயங்கள் உள்ளது! படிக்கப் படிக்கத் தெகட்டாத கதைகள். எண்ணிறந்த தர்மங்கள். வைதிக மதத்திற்கு ஆணிவேர். பெண்களும் குழந்தைகளும் படித்து தெரிந்துக் கொள்ளக் கூடியது. நாவல்போலல்லாமல் வாழ்க்கையைச் சுத்தப்படுத்துவது. புண்யந்தரத்தக்கது.

நன்மார்க்கத்திற்கு நற்றுணையானது. ஸதாசார்யனைப் போன்றது. மநதிற்கு சாந்தியைத்தருவது. உத்ஸாஹம் ஊட்டுவது. ஆநந்தத்தை அளிப்பது. அறிவை விசாலப் படுத்துவது. அநுஷ்டிக்கும் ஆசாரத்தின் தத்துவத்தை விளக்குவது. கவலைவந்தபோது படித்தால் உடனே கவலையை அகற்றுவது.

இந்த பேராநந்தத்தை பல்லாண்டுகள் அனுபவித்து இதைப் புஜிக்க சேரவாரும் ஜகத்தீரே என்ற ஒரே நோக்கத்துடன் தான் இதில் முயன்றேன். வருவாய்க்கல்ல! புகழுக்கல்ல! சென்னைக்குவந்து வாழ்க்கையை நடத்தி பல நண்பரையும் இங்குவாழ அழைத்தேன். இறைவனருளால் எல்லோரும் நல்ல நிலையிலிருக்கின்றனர். நன்கு பொருளும் தேடுகின்றனர். அவர்களது ஒத்துழைப்பிருந்தால் முன்னமே இவை வெளிவந்திருக்கும். தற்காலத்தவரைப் போல் தனிகரை அண்டவோ துதிக்கவோ யாசிக்கவோ தெரியாதவன்! விருப்புமில்லாதவன்! வயதும் அறுபதுக்குமேல் ஆகிவிட்டது. உடலில் பலஹீநமும் பல நோய்களும் தார்மிகதொண்டுக்கு இடமளிக்கவில்லை. நானே எழுதி ப்ரூபும் பார்த்து தபாலும் எழுதி புத்தகமு மனுப்ப வேண்டி யிருக்கிறது. இந்த சிரமங்களை உணர்ந்து தார்மிகர் புத்தக விலையையேனும் முன்பணமாக அனுப்பி தங்கள் நண்பர்களுக்கும் தெரிய படுத்தி இப்பெரும் தொண்டை என் ஆயுளுக்குள் நிறைவேற்றி வையுங்கள்.

ஸ்ரீ முகமளித்த ஸ்ரீ ஜகத்குருவிற்கு வந்தநம் பல ஸமர்ப்பிக்கிறேன். நன்கொடை அளித்த தார்மிக சிரோமணிகளுக்கு நன்றியுடன் பகவதநுக்ரஹமும் உண்டாகும்படி வேண்டுகிறேன். தர்மோரக்ஷதி ரக்ஷித:! யதோதர்ம: ததோஜய:

தர்மதொண்டன்,

**ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா.**

# பொருளடக்கம்.

ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சங்கரபகவத் பாதாளின் ஸ்ரீ முகமும் படமும்.

பக்கம்.

ஸ்ரீரஸ்து.

# முக உரை.

வ்யாஸாய பவநாசாய—ஸ்ரீசாய குணராசயே |
யோகீசாய முநீசாய—வாகீசாய நமோ நம: ||

பகவான் வேதவ்யாஸர் இயற்றிய பதினெண் புராணங்களைத் தற்கால உலகம் உதாஸீநம் செய்து விட்டது. பௌராணிகர்களும் ஆஸ்திகர்களும் ஸ்ரீமத் ராமாயணம் ஸ்ரீ மஹாபாரதம் ஸ்ரீ பாகவதம் இத்துடன் திருப்தி அடைந்து விடுகிறார்கள். புராணங்களின் பெயரையே பல பண்டிதர்களே அறிய மாட்டார்கள். உலக நன்மைக்காக உயர்ந்த புராணங்களை இயற்றிய வ்யாஸ பகவான் ஏழு சிரஜீவிகளில் ஒருவர். வித்வத் பரம்பரையில் தோன்றியவர். 4 லக்ஷம் சுலோகங்கொண்ட பதினெண் புராணங்களையும் மஹா பாரதத்தையும் ப்ரும்ம ஸூத்ரங்களையும் எழுதினார். வேதத்தை ரிக் யஜுஸ் ஸாம அதர்வ என்று நான்காக வகுத்து சிஷ்ய பரம்பரை மூலமாக ப்ரசாரம் செய்தார். இவ்வளவு பேருதவி புரிந்த வித்வத் சிரோமணியை உலகம் மறந்துவிட்டது. வ்யாஸருக்கு எங்கேனும் ஆலயம் உண்டா? வ்யாஸ ஜயந்தி கொண்டாடுபவர் உண்டா? வ்யாஸர் பெயரால் ஊர் உண்டா? தெருவுண்டா? மண்டப முண்டா? மடந்தானுண்டா? அவர் புனிதப் பெயரைத்தான் வைத்துக்கொள்கிறோமா? மத்வரில் சிலர் வ்யாஸர் பெயருள்ளதை மறக்கலாகாது.

என்னே! நன்றி கெட்ட உலகம்? புராணங்களை அச்சிடுபவர்தான் உண்டா? அச்சிட்டதைப் படிப்பவர் தான் உண்டா? மேடம் ப்ளாவஸ்கி என்ற மாது, வில்ஸன், பர்ஜிதன், க்ராம்நீச், மேக்ஸ் மில்லர் முதலிய அன்ய நாட்டினர் நமது புராணங்களின் மேன்மையை அறிந்து ஆங்கிலத்தில் வெளியிட்டனர். புனிதமான பாரத தேசத்தில் பிறந்த நாம் புராணங்களை அலக்ஷ்யம் செய்து வருகிறோம். வட நாட்டினர் அச்சேற்றுவிடில் புராணங்களின் பெயரே மறைந்திருக்கும். நம் நாட்டு ஓலைச் சுவடிகளில் பலவற்றைப் அன்ய நாட்டினர் அப

ஹரித்தனர். பலவற்றைப் பராமரிக்காமல் செல்லரித்து விட்டது. போதிய தந உதவியும் ஆதரவும் இன்றி ஸரஸ்வதி மால் போன்ற பல புத்தகசாலைகளில் உள்ள ஓலைச் சுவடிகள் அழிக்கப் படுகின்றன. பெரியோர் தேடிய பொக்கிஷத்தைப் பரிகொடுத்துவிட்டு என்ன நாகரீகம் ? என்ன வாழ்வு ? பேருக்கும் ப்ரதிஷ்டைக்கும் பணத்தை வாரி இறைக்கும் தனிகருக்கும் இதில் அக்கரையில்லை. வானளாவ இந்திய கலை ! பண்பாடு ! கலாசாரம் ! என எங்கும் முழக்கம் பலம் ! கானத்திலும் நாட்டியத்திலும் படங்களிலும் நாடகங்களிலும் அளவு கடந்த ஊக்கம் காட்டப்படுகிறது. தநம் செலவழிக்கப்படுகிறது. அதன் வேர் வெட்டப்படுகிறது. மாணிக்கத்தை மறந்து காக்கைப் பொன்னில் ஆசை செல்கிறது ! கஷ்டம்! கஷ்டம்! ஸ்வதந்த்ரம் பெற்ற இந்திய அரசாங்கமும் மாகாண அரசாங்கமும் இதைக் கவனிக்குமா ?

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளான ஸ்ரீ ஜகத்குருவின் அநுக்ரஹத்தால் சென்னை ஸ்ரீ சங்கர மடத்தில் 36 ஆண்டுகளாக 18 புராண ப்ரவசநம் செய்யும் பாக்யம் கிடைத்தது. ஒரே இடத்தில் ஒருவனே 18 புராண ப்ரவசநம் செய்த வேறொருவரைத் தக்ஷிண தேசத்தில் பார்க்கவில்லை என 18 புராண பூர்த்தி விழாவில் ஸ்ரீ ஜகத்குருவும் மற்றும் பலரும் கொண்டாடினார்கள். அங்கு கேட்பவர் சிலர்தானே ! பலரும் படித்துப் பயன்படும்படி தமிழில் வெளியிடு என்று ஸ்ரீ ஜகத்குரு அருள் புரிந்தார்கள். அங்ஙனமே சிறிது விரிவாக பாத்மம் பிரும்மம் பிரும்மவைவர்த்தம் கூர்மம் மார்க்கண்டேயம் வாமநம் என்ற ஆறு புராணங்களை வெளியிட்டோம். போதிய ஆதரவில்லாததாலும் பலர் விற்றுத் தருவதாகக் கூறி புத்தகத்தை வாங்கிச் சென்று விலையையும் புத்தகத்தையும் தராமல் இருந்துவிட்டதாலும் மற்றவைகளை அச்சிட முடியவில்லை.

"தாங்கள் ஒருவர்தான் 18 புராணங்களைப் படித்தவர். அதில் என்ன இருக்கிறதென்று சுருக்கமாகவாவது ஜீவித்திருப்பதற்குள் வெளியிடுங்கள்" என பலர் பலமுறை கூறுவதால் 5 பாகமாக்கி ஒவ்வொன்றிலும் நாலு நாலு புராணமாக வெளியிட உத்தேசம். பாகவதத்தில்

தேவீ பாகவதம் விஷ்னு பாகவதம் ஸ்காந்தத்தில் இரண்டு ஆக 20 புராணங்களும் வெளிவரலாம். ஒரு பாகம் ஆயிரம் காபி வெளியாக சுமார் 1000 ரூ. ஆகும். இத் தொகையை அளிக்கத்தக்க தனிகர் தக்ஷிண தேசத்தில் இல்லாமலில்லை. ஆனல் இதைப்போல் பல மடங்கு வேறு லௌகிக தர்மம் செய்வர் ! இப் புண்யம் செய்ய பாக்யம் வேண்டாமா? தேஹி எனக்கேட்க நம் நா எழவில்லை.

ஒரு பாகம் வெளியாகி அதன் மூல்யம் கைக்கு வந்த பின்பே மற்றொரு பாகம் வெளியிட முடியும். ஆதலின் ஆஸ்திகர் இதை ஆதரித்து அடுத்த பாகம் வெளிவரும்படிச் செய்ய வேண்டுகின்றேன்.

ஆஸ்திகர் பாதபாம்ஸு
**ஸ்ரீவத்ஸ. வெ. ஸோமதேவசர்மா.**



# அவதாரிகை.

புராணம் என்ற சொல்லுக்குப் பழமையானது, முன்னுக்குக் கொண்டு வருவது. பழயதாயினும் புதிதானது என பல பொருள்கள் உண்டு.

**புராண கர்த்தா வேதவ்யாஸர் :—** சென்ற த்வாபர யுகத்தின் முடிவில் ஸ்ரீமன் நாராயணன் ஸத்யவதியினிடம் பராசரர் மூலமாகத் தோன்றியவர். வித்வத் பரம்பரையில் தோன்றி வித்யை ப்ரசாரம் செய்தவர்.

வ்யாஸம் வஸிஷ்ட நப்தாரம்—சக்தே: பௌத்ரம் அகல்மஷம் | பராசர ஆத்மஜம் வந்தே-சுகதாதம்தபோநிதிம்: ॥ வஸிஷ்டரின் கொள்ளுப் பேரர். சக்தியின் பேரர். பராசரரின் புத்ரர். சுகரின் தந்தை. விஷ்ணுவின் அவதாரமிவர்.

வ்யாஸாய விஷ்ணு ரூபாய—வ்யாஸ ரூபாய விஷ்ணவே | நமோவை ப்ரும்ம நிதயே—வாஸிஷ்டாய நமோ நம: ॥ விஷ்ணுவே வ்யாஸராக அவதரித்தவர். வேதநிதி. வித்யைக் கடல். வஸிஷ்டர் மரபில் தோன்றியவர்.

அசதுர் வதநோ ப்ரும்மா — த்வி பாஹு: அபரோ ஹரி: | அபால லோசந: சம்பு: — பகவான் பாதராயண: ॥ வேதத்தை வகுத்து பிரசாரம் செய்தவர். ஆதலின் ஒரு முகமுள்ள ப்ரும்மா. உலகைக் கல்வியால் உஜ்ஜீவித்தவர். ஆதலால் இரு கரமுள்ள ஹரி: ஸர்வ வித்யைகளையும் வெளியிட்டு முக்தி அளிப்பவர். ஆதலால் நெற்றிக் கண்ணில்லாத ஈச்வரன். இவரது சரிதத்தை நன்கு கவனித்தால் ஒப்பற்ற பெருமையால் மும்மூர்த்திகளைப் போன்றவர் என தானே வெளியாகும்.

ஸர்வ மறிந்தவர். ஸர்வ சக்தி வாய்ந்தவர். ஸர்வ உபகாரி. வழியில் விரைந்து ஓடும் ஒரு புழுவைக் கண்டு ஏன் வேகமாக ஓடுகிறாய்? என்று வ்யாஸர் கேட்டார். அது வண்டி என் மீது ஏறி என்னைக் கொல்லாதா? என்றது. புழுதானே நீ! நீ இறந்தால் என்ன நஷ்டம்? என்றார். அவரவர் உடல் அவரவருக்கு ப்ரியமன்றோ?

என்றது புழு. இதைக் கேட்டு ஸந்தோஷமடைந்தார். மிருகப் பிறவியைத் தந்து அதனருகே சென்றார். அது அவர் அருளால் முற்பிறவியை அறிந்து அவரை வணங்கி நன்றி கூறியது. படிப்படியாக அரசனாக்கினார். அப்பொழுதும் அவன் இவரை வணங்கி நன்றி கூற மறு பிறவியில் அவனைத் துறவியாக்கி முக்திபெறச்செய்தார். இது வேறெந்த முனிவரால் முடியும்?

பாரதப்போர் முடிந்தபின் பாண்டவர், வநத்திலுள்ள குந்தியையும் காந்தாரியையும் த்ருதராஷ்டரனையும் காணச் சென்றனர். போரில் இறந்த வீரர்களது மனைவிகளும் வந்திருந்தனர். உங்களனைவர்க்கும் நான் என்ன உதவி செய்யலாம் என கேட்டார் வ்யாஸர். அவர் பெருமையை உணர்ந்த குந்தி இறந்த அனைவரையும் ஜீவனோடு வரவழியும் என்றாள். ஓரிரவு தவவலிமையால் அனைவரையும் அழைத்தார். என்னே தபஶ்ஶக்தி! வேத வநத்தில் புகுந்து பிரித்து அவர் வழிகாட்டி இராவிடில் வேதம் என்ற சொல்லே மறைந் திருக்கும். உபநிஷத்துகளில் உள்ள சிக்கை எடுத்து ப்ரும்ம ஸூத்ரங்களை அவர் கூறா திருந்தால் வேதாந்தம் அழிந்திருக்கும். கண்ணன் கூறிய கீதா உபதேசங்களை வகுத்து பகவத்கீதை எனும் அமிருதத்தை அவர் அளிக்காதிருந்தால், இருந்தும் இறந்தவராவோம். மிக ரஹஸ்யமான வேதத்தின் கருத்தைப் புராணவாயிலாக அவர் வெளியிடாதிருந்தால் தர்மத்திற்குத் தர்ப்பணம் செய்ய நேர்ந்திருக்கும்.

புராணம் எத்தனை ? யுகாதியில் ஒன்றாக ஒரு கோடியாக இருந்த புராணத்தை 18 ஆக வகுத்தார். ஜய என்றால் கடபயாதி கணக்கின்படி 18 என்று பொருள். புராண பாரதாதிகளில் முதலில்

நாராயணம் நமஸ்க்ருத்ய நரஞ்சைவ நரோத்தமம் |
தேவீம் ஸரஸ்வதீஞ்சைவ ததோ ஜயம் உதீரயேத் ||

என்ற மங்கள ச்லோகத்தைக் கூறுகிறார்.

ஆதலால் 18 என்ற எண்ணிக்கை உள்ளதெல்லாம் ஜயப்ரதமாகும் என இது பலரால் கைகொள்ளப்பட்டது. புராணம், உபபுராணம், ஸ்ம்ருதி, வித்யை, பாரத பர்வா, கீதை அத்யாயம், பாரதபோர், போரில்

கலந்த அக்ஷோஹிணீ ஸேனை, பாஷை, ஜாதி, வாத்யம், வாத்திமா் அக்ரஹாரம், பாலக்காட்டு அக்ரஹாரம், திருவநந்தபுரம் அக்ரஹாரம், ஐயப்பன் படி, காளிகரம், நமது வஸ்த்ரமுழம் இப்படி மற்றும்பல பதினெட்டாக அமைத்து ஜயம்பெற வழிகாட்டியவா் வ்யாஸா்.

வேதத்தில் பின்காலத்தவா் தன் இஷ்டப்படி ஒன்றை சோ்க்கவோ குறைக்கவோ கூடாவண்ணம் முத்ரை வைத்ததுபோல் காண்டம், ப்ரஶ்நம், அநுவாகம், பஞ்சாஶத், பதம் என்ற கணக்குகள் தோன்றின. ஆதலால் வேதம் வ்யாஸா் பிரித்தபடி அநேகமாக கலப்பின்றி சுத்தமாக இருக்கின்றது, உபநிஷத்துகளோ 12, 28, 32, 108, 1008 என தோன்றின. மேலும் இதர மதத்தின்தெய்வப் பெயரால்கூட எழுதி உபநிஷத் சோ்க்கப்படுகிறது. புராணத்திலும் அப்படி கலப்புகூடாதென புராணக்கணக்கு 18, சுலோகக் கணக்கு 4 லக்ஷம் என இவைகளை ஒவ்வொரு புராணத்திலும் அமைத்திருக்கிறாா். ஆனால் கலி முற்ற மநிதா் புத்தி மாறிவர, யந்த்ர ஸாதநங்கள் பெருக புராணங்களிலும் கலப்பு ஏற்பட்டது. சிக்ஷிக்கச் சட்டமிருந்தும் உணவுப் பொருளிலேயே கலப்பு உண்டாகும் கலியில் மற்றதில் ஆச்சா்யமில்லை. எது எதில் கலப்பென ஆராய அவகாசமேது ?

**புராணமஹிமை :** நான்கு வேதங்களிலும் உபநிஷத்துகளிலும் புராண மஹிமை கொண்டாடப்படுகிறது. ஸா்வதந்த்ர ஸ்வதந்தரராய், அத்வைதம் ஒன்றே ஸத்யம் என ஸ்தாபித்த ஆதிசங்கர பகவத்பாதா், ப்ரும்ம ஸூத்ர பாஷ்யம் தேவதாதி கரணத்தில் புராண ப்ரமாணத்தைக் காட்டி தேவா்களுக்கு உடல் உண்டென வாதிக்கிறாா். பதினான்கு வித்யைகளில் ஒன்றான இதற்கு அந்தணா் அன்றன்று அநுஷ்டிக்கவேண்டிய ப்ரும்மயக்ஞ தா்ப்பணத்தில் "இதிஹாஸ புராணம் தா்ப்பயாமி" என புராணங்களுக்கு தா்ப்பணம் செய்யப்படுகிறது. 'அபிச ஸ்மா்யதே' என்ற ப்ரும்ம ஸூத்ரங்களுக்குப் புராணங்களையே ப்ரமாணமாக ஆசாா்யாள் எடுத்துக் காட்டுகிறாா்கள். விஷ்ணு ஸஹஸ்ர நாம பாஷ்யத்தில் அவா் கையாண்டது எல்லாம் புராணமே. புராண மஹிமையை அறிந்த அரசா்கள் ஆலயங்களில் இதற்கென தனி மண்டபம்

அமைத்து புராணம் கூறுபவர்க்கு மான்யம் அளித்து ப்ரசாரம் செய்து வந்தனர். மடங்களிலும் நதிக்கரைகளிலும் புராணம் நடைபெற்று வந்தது.

புராணத்தால் யாது பயன்? வேதமே நமது தர்மத்திற்கு வேர். அது மிக ரஹஸ்யமானது. எல்லோராலும் எளிதில் அறிய முடியாதது. ஸம்ஸ்கிருத பாஷாக்ஞானம் உள்ளவர்கூட பொருள் காணமுடியாதது. சிக்ஷை முதலிய ஆறு அங்கங்களின் உதவியைக்கொண்டு பலர் பாஷ்யம் எழுதினர். பாஷ்யம் படித்தால்தான் வேத பொருள் விளங்கும். அறைகுறையாக படித்தவனைக்கண்டு வேதம் அஞ்சுகிறது. சரியான பொருள் கூறாது நம்மைக்கெடுப்பானோ என்றுதான் பயம். இதிஹாஸம், புராணம் இவை வேதப் பொருளை நன்கு விளக்குகின்றன.

பிபேதி அல்ப ச்ருதாத் வேத: மாம் அயம் ப்ரதரேத்இதி
இதிஹாஸ புராணப்யாம்-ச்ருதி அர்த்தம் உபப்ரும்ம
யேத் ॥

மிக ஸூக்ஷ்மமான வேதப்பொருளைப் பூதக்கண்ணாடி போல் விளக்கிக்காட்டுவது புராணம். அரசன் ஆணை போல் வேதம் மிகச் சுருக்கமாகக்கூறும். இது ப்ரபு ஸம்மிதை. நண்பனைப்போல் சிறிது விரிவாக உரைக்கும் தர்ம சாஸ்த்ரம் மித்ரஸம்மிதை. மனதிற்கினிய மனைவி போல் கதை ரூபமாகக்கூறும் புராணம் காந்தா ஸம்மிதையாம். 64 கலைகளுக்கும் பிறந்தவீடு புராணம். புராண ஶ்ரவணத்தால் புண்யம் உண்டாவது ஒருபாலிருக்க, பல நீதிகளைக்காட்டி நம்மை நல்வழிப் படுத்துகிறது அது.

முறைப்படி புராணம் படித்தவர் அல்லது கேட்டவர் ஸமூஹத்தில் ஒரு ஆதர்சபுருஷனாக விளங்குவார். சிவாஜி உத்தம வீரனாகவும் தார்மிகனாகவும் விளங்கியது புராணத்தால். குலசேகர ஆழ்வார் பரீக்ஷித் சௌநகர் முதலிய பலர் பெருமைபெற புராணமே காரணமாம். புராண ச்ரவணத்தை அன்றன்று அநுஷ்டிக்க வேண்டிய ஆந்ஹிக கர்மாவுடன் சேர்த்திருப்பதே அதன் முக்யத்தையும் பெருமையையும் காட்டுகிறது. அப்படிக் கேட்டு வந்த முன்னோர் நீண்ட ஆயுள் பெற்றனர். நல்வாழ்வு வாழ்ந்தனர். காமம், கோபம், பேராசை, த்ரோஹம்

முதலியன இல்லாமலிருந்தனர். ஜாதிச்சண்டை பாஷைச் சண்டை தேசச்சண்டை முதலியன இல்லாதிருந்தனர். சுயநலமின்றி பரோபகாரிகளாக இருந்தனர். போகத்தை த்ருணமாகக் கருதினர். தர்மத்திலே அதிகம் ஈடுபட்டனர். நாடுசெழித்திருந்தது. பொருளோ பொருளோ என பறக்கவில்லை! பணத்தை ஆட்கொல்லி என்பர். எளியவாழ்க்கை நடத்தினர். வாழ்க்கைக்கு வேண்டிய பொருளை மாத்ரம் தேடினர். இவ்வளவு பேருபகாரம் செய்தது புராணம். எல்லோர் அறிவையும் வளர்த்தது புராணம்.

**புராணம் பாரத பொக்கிஷம்.** சரித்ரம் பூகோளம் ககோளம், ஸங்கீதம், ந்ருத்யம், ஜோதிஷம், வைத்யம், மிருக சிகித்ஸை, உடல் தத்வம், செடி கொடிகளுக்கு சிகித்ஸை; விக்ஞானம், பாஷைகள், ஸாஹித்யம், காவ்ய நாடக அமைப்பு, தர்க்கம், வ்யாகரணம், வேதாந்தம், நிகண்டு, சகுநம், ஆலய அமைப்பு, விக்ரஹப்ரதிஷ்டை, மூலமந்த்ரம், தீக்ஷாவிதி, வர்ணம், ஆச்ரமம், ஆசாரம், ஆந்ஹிகம், நாற்பது ஸம்ஸ்காரங்கள், காயத்ரியின் மஹிமை, ஜபிக்கும் முறை, காயத்ரீ ஹோமத்தால் விரும்பிய பயனைப்பெறுவது, க்ஷத்ரிய தர்மம், குடியரசு, நியாயம்கூறல், வரிவிதிப்பது, க்ரமாதிகாரி முதலியவர்களைத் தேர்ந்தெடுப்பது, விருதங்கள் ஏகாதசி மஹிமை, தநத்தின் பெருமை, பக்தி பக்தர் சரிதம், யோகம், ஸாங்க்யம், ஸ்த்ரீகள் தர்மம், கற்பு, கற்பரசிகள் சரிதம், கற்பம் உண்டாகும் வகை, வளர்தல், ப்ரஸவம், மரணம், மரணத்திற்குப்பின் ஜீவனது கதி, அண்டம், பதினான்கு லோகங்கள், அங்குள்ளவர் சரிதம், நமது உடலில் எத்தனை எலும்பு? நரம்பு? எவ்வளவு மூச்சு நித்யம் விடுகிறோம்? பாம்பின் விஷ மகல் மந்திரம், மருந்து, பாம்பு முதலியவைகளின் ஆயுள் ப்ரமாணம், எப்போது கர்ப்பமுண்டாகும்? எவ்வளவு முட்டை ப்ரஸவம்! கோவின் பெருமை, கோதாந மஹிமை, பயிரிடுதல், சிருங்கார சாஸ்த்ரம் அகால மரணத்தை ஓஷதிகளாலும் மந்த்ரத்தாலும் தடுப்பது, முனிவர்களது சரிதம், கோத்ர ரிஷிகள், ப்ரவர ரிஷிகள், கல்பம் முதல் த்ருடிவரை உள்ளகாலம், காலத்திலை ஆயுஸ் உடல் தர்மம் பூமிஸாரம் குணம் முதலியன மாறுதல்,

காயகல்பம், மனிதர் ஸமூஹத்தில் நடக்கவேண்டிய முறை, நகர கிராம நிர்மாணம், பரிபாலநம், உத்யாநம், தடாகம் அமைத்தல், திருடர்களை சிக்ஷிப்பது ? வீதியைச் சுத்த மாக வைப்பது அசுத்தப்படுத்துவோரை எப்படி சிக்ஷிப் பது? பூதப்ரேத பிசாசங்கள், ப்ரேத பிறவியைத் தரும் பாபம், நரகம், புண்யம், புண்யலோகம், அதன் வழி, புண்ய க்ஷேத்ரங்கள், புண்ய தீர்தங்கள், யாத்ரை, காசி, ப்ரயாகை, கயா அங்கு செய்யவேண்டிய கர்மாக்கள், தேவாதி சரீர அமைப்பு, உடல் அளவு, அஸ்த்ரசஸ்த்ராதி கள், ரதம், ஆஹாய விமாநம், உலக ஸ்ருஷ்டி, ஸ்திதி, ப்ரளயம், சித்ரம், கூடுவிட்டு கூடுபாய்தல், அந்தந்த ஸ்தல மாஹாத்ம்யம் முதலிய எண்ணிறந்த ரத்னங்கள் அமைந்த பொக்கிஷம்.

**புராணதத்வம்:** முன் கூறியவைகளை மாத்ரம் கூறி நிற்கவில்லை. எந்த வகையிலாவது மனிதரைச் சீர்படுத்தி அடிக்கடி அவர் பிறவாமல் துக்கங்களை அனுபவிக்காமல் இறைவனிடம் இரண்டற ஒன்ருய்க் கலந்து ஆநந்தம் அளிப்பதே புராணங்களின் நோக்கம். நமது துன்பங்களு க்கு நாம் செய்யும் கர்மாவே காரணம் என்று காட்டி மனி தனைப் பிறர்க்குத் தீங்கு செய்யாமல் நல்வாழ்வு வாழ வழிகூறுகிறது. ஒரு தர்மத்தை அல்லது கடமையைச் செய்யும் போது பல இன்னல் தோன்றும். அதை எதிர்த் துப் போராடிஞல் முடிவில் இன்பம் கீர்த்தி உண்டாகும். ஸத்யம்வத என்ற ஸூத்ரம் போல் உள்ள வேதச்சொல்லை ஸத்ய ஹரிஸ்சந்தரன் கதைமூலமாக புராணம் கூறுகிறது. கதைகளே பசுமரத்தாணி போல் மனிதன் மநதில் இறங் கும். மறக்க முடியாமல் நின்று ஸங்கடம் வரும்போது நினைவூட்டும். வாழ்க்கை தனக்காக அல்ல! தூய வாழ் க்கை பலருக்குப் பலவகை நன்மை பயக்கும். எளிய மக் களும் ஏனையோரும் கசப்பான மருந்து போன்ற தர்மத் தை இனிப்பான சர்க்கரைபோன்ற கதை வாயிலாக் அறிய வேண்டும். வேதத்தை கற்பதும் பொருள் உணர் வதும் எல்லோருக்கும் எளிதல்ல! அதன் பொருளை பண் டிதர் பாமரர் அனைவரும் அறிந்து அநுஷ்டிக்கும்படி செய் வதே புராணத்தின் நோக்கமும் தத்வமுமாம்.

## புராணமும் உபபுராணமும்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1 ப்ராம்ம புராணம் | 10000 | 10 ப்ரும்மவைவர்த்தபுரா | | 18000 |
| 2 பாத்ம ,, | 55000 | 11 லிங்க | ,, | 11000 |
| 3 வைஷ்ணவ ,, | 23000 | 12 வாராஹ | ,, | 24000 |
| 4 சைவ ,, | 24000 | 13 ஸ்காந்த | } | 81100 |
| 5 பாகவத(விஷ்ணு) } | 23000 | 13A ஸ்காந்த | ,, } | |
| 5A தேவீபாகவத ,, } | | 14 வாமந | ,, | 10000 |
| 6 பவிஷ்ய ,, | 14000 | 15 கூர்ம | ,, | 17000 |
| 7 நாரதீய ,, | 25000 | 16 மாத்ஸ்ய | ,, | 14000 |
| 8 மார்க்கண்டேய ,, | 9000 | 17 காருட | ,, | 19000 |
| 9 ஆக்நேய ,, | 15400 | 18 ப்ரும்மாண்ட | ,, | 12000 |

### உப புராணங்கள் 18.

1. ஸநத்குமாரம், 2. நாரஸிம்மம், 3. ஸ்காந்தம், 4. சிவ தர்மம், 5. நந்தி, 6. தூர்வாஸ, 7. நாரத, 8. காபில, 9. மாநவ, 10. ஔசநஸ, 11. பிரும்மாண்ட, 12. வாருண, 13. காளி, 14. மாஹேச்வர, 15. ஸாம்ப, 16. ஸௌர, 17. பாராசர்ய, 18. மாரீச.

***இதில் சைவபுராணம் 10:*** 1. சைவ, 2. பவிஷ்ய, 3. மார்க்கண்டேய, 4. லிங்க, 5. வாராஹ, 6. ஸ்காந்த, 7. மாத்ஸ்ய, 8. கூர்ம, 9. வாமந, 10. ப்ரும்மாண்டம். ***வைஷ்ணவ புராணம் 4:*** 1. விஷ்ணு, 2. பாகவத, 3. நாரத, 4. காருட. ***ப்ராம்ம புராணம் 2:*** 1. ப்ராம்மம், 2. பாத்மம். ***அக்நி புராணம் 1:*** ஆக்நேயம். ***ஸௌர்யபுராணம் 1:*** ப்ரும்மவைவர்த்தம்.

***ஸாத்விகம் 6:***—1. வைஷ்ணவ, 2. நாரதீய, 3. பாகவத, 4. காருட, 5. பாத்ம, 6. வாராஹ.

***ராஜஸ 6:***— பிரும்மாண்ட, பிரும்மவைவர்த்த, மார்க்கண்டேய, பவிஷ்ய, வாமந, ப்ராம்ம.

***தாமஸம் 6:***— மாத்ஸ்ய, கூர்ம, லிங்க, சைவ, ஸ்காந்த, ஆக்நேயம்.

இவை தவிர உபபுராணங்களில் கணேச, மௌத்கல, தேவீ, கல்கி முதலிய சில புராணங்களும் இருக்கின்றன.

***புராணத்தில் சில குறிப்புகள்:***—ராமாயண பாரதம் போல் ஒரே நாயகநாயகியைப்பற்றி கதைகள் தொடர்ந்து இராது. கேட்பவருக்கு ஏற்றபடி துண்டு துண்டாகவே கதைகள் கூறப்படும். ஒவ்வொரு கல்பத்தில் நடந்ததைக் கூறுவதால் ஒரே கதை வெவ்வேறு புராணங்களில் வெவ்

வேருக காணப்படும். சிலவிடங்களில் கத்யம்போல் வசந நடையில் ஸ்துதிகள் காணப்படும். பெரும்பாலும் அநுஷ்டுப் என்ற சந்திஸ்ஸிலேயே சுலோகங்கள் உள. சிலவிடத்தில் காவ்யம்போல வஸந்ததிலகம் ஸ்ருக்தரா பஞ்சசாமர முதலிய விருத்தங்களில் அழகிய பலஸ்துதிகள் கூறப்படுகின்றன. அஷ்டோத்தரசதநாம, ஸஹஸ்ரநாமாக்கள் எல்லாம் புராணங்களின் சொத்துக்களே ஆகும். பற்பல மந்த்ரங்கள் வ்ரத ப்ரயோகங்கள் அறுபது ஆண்டுகளின் பெயர்கள் வ்யாஸர் தன் சரிதத்தை கூறுதல் ஸூத புராணிகர் மூலமாக புராண ப்ரச்சாரம் செய்தல் புராணங்களை யார் யார் கூறலாம், எந்த திக்கில் அமர்ந்து எப்படி கேட்பது என்பன சிறந்தமுறையில் அமைந்திருக்கின்றன.

**புராணங்கள் எங்கே கிடைக்கும்?** தக்ஷிண தேசத்தில் இரண்டொரு புராணங்களே கிரந்த லிபியில் வெளியிடப்பட்டு அவைகளும் தற்சமயம் அகப்படுவதில்லை. வடநாட்டிலும் சௌகாம்பா ப்ரஸ் பநாரிஸ், ஆநந்தாச்ரமம் பூனு, கோபால நாராயணு அண்ட்கோ பாம்பே, நிர்ணய ஸாகர் ப்ரஸ், பாம்பே இவைகள் சிற்சில புராணங்களை அச்சிட்டன. ஆனுல் பதினெட்டையும் உப புராணங்களையும் அச்சிட்டது, கேமராஜ் ஸ்ரீ க்ருஷ்ணதாஸ், வெங்கடேஶ்வர ஸ்டீம் ப்ரஸ் பம்பாய் என்ற அச்சகமேயாம். அவரிடம் 18 புராணங்களும் கிடைக்கும்.

**தமிழில் சில:** கூர்ம மத்ஸ்ய லிங்கம் முதலிய சில தமிழில் வெளியாயின. ஆனுல் தற்காலம் விலைக்கு அகப்படாது. ஸ்காந்தம், கச்சியப்பர் செய்யுளும் வசநமும் இப்போது கிடைக்கும்.

**ஆங்கிலத்தில் உள்ளவை சில;** பாகவதம், விஷ்ணு புராணம், காருடம், தேவீ பாகவதம், நாரதம், ப்ரும்ம வைவர்த்தம் மாத்ஸ்யம் மார்கண்டேயம்.

**18 புராண ப்ரவசநம் நடந்த இடம்:—** சென்னை, திருச்சி, பொள்ளாச்சி, கரூர், தஞ்சை, பாம்பே, புனு, ராமநாதபுரம், சின்னமனூர், மதுரை, திருவநந்தபுரம், புதுகோட் பாலக்காடு, சிதம்பரம், கோழிகோடு, ஈரோடு, அம்பத்தூர், மன்னார்குடி, மாயவரம், பட்டுக்கோட்டை, லலிதா ஸதநம், பழைய மாம்பலம், புது மாம்பலம், தண்டையார் பேட்டை, நாகை, கல்கத்தா, டில்லி முதலியவிடங்களில் நடந்தன.

**ஸ்ரீவத்ஸ. வெ. ஸோமதேவசர்மா.**

# ஸ்ரீ ப்ராஹ்ம புராணம்.

नारायणं नमस्कृत्य नरं चैव नरोत्तमम् ।
देवीं सरस्वतीं व्यासं ततो जयं उदीरयेत् ॥

[ப்ரும்மாவின் பெருமையை வர்ணிப்பதாலும் ப்ரும்மாவினுல் கூறப்பட்டதாலும் ப்ராஹ்மம் என்று பெயர். பத்தாயிரம் சுலோகமும் இருநூற்று நாற்பத்தி மூன்று அத்யாயங்களும் உத்தரபாகம் நூற்று ஐந்து அத்யாயமும் கௌதமீ மாஹாத்ம்யம் என்ற தீர்த்த மஹிமையும் உள்ளது.]

படைக்கும் தெய்வமான ப்ரும்மாவின் ஸ்ருஷ்டி முதலிலே வர்ணிக்கப்படுகிறது. முதலில் ப்ரும்மா தன் கார்யத்திற்கு ஸஹாயம் செய்ய பலரை மநதினுல் படைத்தார். ஆதியில் பகவான் ஜலத்தைப் படைத்து அதில் தனது வீர்யத்தை விட்டார். அது ஒரு அண்டம் போல் ஆனது. அதை மேலும் கீழுமாக இரண்டாகச்செய்ய அதே பதினான்கு லோகங்கள் ஆயின. மரீசி அத்ரி அங்கீரஸ் புலஸ்த்ய புலஹ க்ரது வஸிஷ்டர் என்ற ஸப்த ரிஷிகளேயும், அய, த்ருவ, ஸோம, தவ, அநில, அநல, ப்ரத்யூஷ, ப்ரபாஸ, என்ற அஷ்ட வஸுக்களேயும், அஜைகபாத், அஹிர்புத்ன்ய, த்வஷ்டா, ருத்ர, ஹர, பஹுரூப, த்ரியம்பக, அபராஜித, வ்ருஷாகபி, ஶம்பு, ரைவத் என்ற பதினேரு ருத்ரர்களேயும், விஷ்ணு, ஶக்ர, அர்யமா, தாதா, த்வஷ்டா, பூஷா, விவஸ்வான், ஸவிதா, மித்ர, வருண, அம்ஶ, பக, என்ற பனிரண்டு ஆதித்யர்களேயும் படைத்தார். ப்ரும்மாவின் வலதுகை கட்டை விரலிலிருந்து உண்டான தக்ஷ ப்ரஜாபதி தனது மநதினுல் ஆயிரக்கணக்கான புத்ரர்களேப் படைத்தார். அவர்கள் தக்ஷர் விரும்பியபடி ஸ்ருஷ்டி கார்யத்தில் ஈடுபடவில்லே. துறவிகளாகி ஞான மார்க்கத்தில் சென்றனர். உடலோடு உடல் சேர்ந்து ஶுக்ல ஶோணித ஸம்பந்தத்தால் பெண்களேப் படைத்து அவர்கள் மூலமாக ப்ரஜைகளேப் படைத்தார். அது முதற்கொண்டே உலகில் மைதுந கார்யம் தோன்றிற்று.

தேவஜாதி, ராக்ஷஸஜாதி, மநுஷ்யஜாதி, சந்த்ர ஸூர்யர்கள் மூலமாக ராஜவம்ஶம், கஶ்யபர் மூலமாக பக்ஷி ஸர்ப்பம் முதலியவைகளின் ஸ்ருஷ்டி முதலியன விரிவாக வர்ணிக்கப்படுகின்றன. உலக கார்யம் நடப்ப தற்கு ஒவ்வொரு கோஷ்டிக்கும் ஒவ்வொருவரைத் தலைவனாகச் செய்து பகவான் விதிப்படி அபிஷேகம் செய்தார். அத்ரிபுத்ரரான அங்கன் என்பவர் ஸுநீதா என்ற யம தர்மராஜனது புத்ரியை மணந்தார். அவ்விருவர்களுக்கும் ஜநித்த புத்ரன் வேநன். அவன் தனது செல்வாக்கைக் கொண்டு பூர்வ ஆசார அநுஷ்டானங்களை நிறுத்த ஆரம் பித்தான். யாகம் தாநம் முதலியவைகளைச் செய்யக் கூடாதென உத்தரவிட்டான். முநிவர்கள் "அப்படிச் செய்யாதே. உலக க்ஷேமத்திற்கும் அவரவர் நற்கதி பெறவும் யக்ஞம் தாநம் முதலியவைகள் அவஶ்யம்" என்றனர். அவன் அவர்கள் உபதேசத்தை ஏற்கவில்லை. தபோ பலத்தினால் பிணமாகி அவன் பூமியில் விழும்படி செய்தனர். அரசன் இல்லாமல் தர்மம் ஓங்காதென அவன் உடலைக் கடைந்தனர். அவனது பாபதோஷத் தால் நிஷாத ஜாதி உண்டாயிற்று. மறுபடியும் உடலைக் கடைய விஷ்ணுவின் அம்ஶமாக ப்ருதுசக்ரவர்த்தி தோன் றினார். அவர் மூலமாக ராஜவம்ஶம் வளர்ந்தது. கோ வடிவமான பூமியினிடம் எல்லாவற்றையும் கறந்தார்.

*மார்த்தாண்டன்* : கஶ்யபரது மனைவி கர்ப்பிணி யாக இருக்கும்பொழுது தர்ம தேவதை முநிவேஷங் கொண்டு பிக்ஷை எடுத்தார். கருவிற்குத் தீங்கு வரா வண்ணம் அவள் மெதுவாக நடந்துவந்தாள். முநிவரை விட கர்ப்பத்தில் அதிக கவனம் செலுத்தியதால் அண்டம் ம்ருதம் ஆகட்டும், அதாவது கரு இறகட்டும் என்றார். அவள் கதறி கீழே விழ, கஶ்யபர் க்ஞாநக் கண்ணால் உண்மையை அறிந்து உனக்கு ம்ருத அண்டத்தினிடம் மார்த் தாண்டன் என்ற குழந்தைப்பிறக்கும் என்றார். அங்ஙனமே ஸூர்யன் பிறந்து வளர்ந்து த்வஷ்டாவின் பெண்ணான ஸம்க்ஞையை மணந்தார். அவர்களுக்கு ஶ்ராத்த தேவர் என்ற வைவஸ்வத மநு யமன் யமுனை என்றவர் தோன்றி னர். புருஷனது ஶக்தியை பொறுக்க முடியாத ஸம்க்ஞை தனது நிழலை ஒரு பெண்ணாக்கி அவளிடம் தன் குழந்தை களை விட்டுவிட்டு தந்தை வீட்டிற்குச் சென்றாள்.

த்வஷ்டா அவள் செயலைக் கண்டித்து புருஷனிடம் செல் என்ருர். அவள் பெண்குதிரை வேடம் கொண்டு குருக்ஷேத்ரத்தில் தவம் செய்தாள். சாயாதேவி ஸாவர்ணி மநு, சனி என்ற இரு புத்ரர்களைப் பெற்ருள். மூத்தவளது புத்ரர்களை அலக்ஷ்யமாகவும் தன் புத்ரர்களைப்பக்ஷமாகவும் வளர்த்தாள் சாயை. இதைக்கண்டு யமன் அவளைக் கண்டித்தார். மறுபடியும் அவள் அதேமாதிரி செய்ததால் கோபங் கொண்டு காலைத் தூக்கினர். அவள், அந்த கால் அழுகி விழும்படி சபித்தாள். யமன் இதைச் சூர்யனிடம் முறையிட அவர் உண்மையை அறிந்து தாய் ஶாபம் வீணுகாது. காலில் உள்ள மாம்ஸத்தைப் புழுக்கள் பூமிக்குக் கொண்டு செல்லட்டும் என்று கூறி ஸம்க்ஞையைத் தேடி மாமனர் வீடு சென்ருர்.

த்வஷ்டா மார்த்தாண்டர் மண்டலத்தில் உள்ள உக்ரமான கடினமான அம்ஶங்களைச் சாணைப் பிடித்தார். அவைகளைக் கொண்டு ஆயுதங்களைச் செய்து தேவர்க்கு அளித்தார். சிந்திய பாகம் எருக்கஞ் செடியாகிற்று. ரதஸப்தமி எருக்க இலை ஸ்நாநம் விசேஷம். ஸூர்யன் குருக்ஷேத்ரம் சென்று பெண் உருவுடனிருக்கும் ஸம்க்ஞா தேவியைக் கண்டார். அவரும் ஆண் குதிரை ரூபங் கொண்டு அவளைப் பலாத்காரமாகச் சேர்ந்தார். "அன்யர் வீர்யம் தன் கருவில் சென்று புருஷன் கோத்ரத்தைக் கெடுக்கலாகாது" என்று அதை நாஸி வழியாக அப்புறப்படுத்தினுள். அதிலிருந்து நாஸத்யர் அல்லது அஶ்விநீகள் என்ற இருவர் தோன்றினர். அவர்தான் தேவ வைத்யர்.

இங்ஙனம் ஸூர்யன் சரிதமும் அவரது அஷ்டோத்தர சதநாமாவும் அதில் பனிரண்டு மிக முக்யமானதென்றும் ஒண்ட்ரதேசத்தில் கோணுநித்யம் என்ற திவ்ய ஸூர்ய க்ஷேத்ரம் ஸூர்யோபாஸனை, அதன் பலன் முதலியவைகளையும் விரிவாக வர்ணிக்கிருர். பதினான்கு மநுக்கள் துந்துமாரன் ஸத்யவ்ருதன், ஸகரன், யந்த்ரன், அமாவஸு ரஜியயாதி கார்த்த வீர்யன், க்ருஷ்ணன் ஶிவனருளால் ஜாம்பவதியிடம் ஸாம்பன் என்ற புத்ரனைப் பெற்றது ஶிவன் லிங்கமானது முதலியவைகளைக் கூறுகிருர்.

ருத்ரன் பரமாத்மா. அவர் நாம ரூபமற்றவர். எனினும் லோக கார்யத்திற்காக நாமரூபத்தை ஏற்கிறார். அதனால் ரூபம் இல்லாததும் ரூபம் உள்ளதுமான லிங்க வடிவமாகக் காணப்படுகிறார். மூன்று குணவடிவமான ப்ரக்ருதியைக்கொண்டு லோக கார்யத்தில் ஈடுபடுகிறார். அவர் அக்நி வடிவன். ப்ரக்ருதி ஜலவடிவம், அக்நி சிவப்பு அல்லது வெளுப்பு நிறமானது. எப்படி சாய்ச்சாலும் மேல் நோக்குமக்நி. மதுவர்ணம் அல்லது ஸ்படிகலிங்கமே சிறந்தது. லிங்கம் எப்போதும் அக்நிபோல் மேல்நோக்கியே இருக்கும். ப்ரக்ருதி பெண்வடிவமானது. பெண்போன்ற அழகு வாய்ந்த மஹாவிஷ்ணு ஜலம் போல் கறுத்த மேனி உள்ளவர். படுத்த அல்லது உட்கார்ந்த நிலையில் ரூபத்துடன் உள்ளவர். ஜலத்திலே படுப்பவர். ஶாந்த ரூபி. அக்நிவடிவமான ஶிவன்-ஸோம-ஜலவடிவமான ப்ரக்ருதி எனும் விஷ்ணுவுடன் சேர்ந்து ப்ரும்மாவைக் கொண்டு ஜகத்தைப் படைத்தும் பரிபாலித்தும் முடிவில் தனக்குள்ளே ஒடிக்கிக் கொள்கிறார். ஶிவனையும் விஷ்ணுவையும் மநதினாலும் வாக்காலும் உடலாலும் வழிபட வேண்டும். உலகம் அக்நி ஸோமவடிவமானது.

ப்ரும்மனையோ கர்ம காலத்தில் ப்ராம்மணரிடம் ஆவாஹநம் செய்துதான் பூஜிக்கவேண்டும். லக்ஷக்கணக்கான ஆலயம் அமைந்த பாரத தேசத்திலே, கண்டியூர் கொடிமுடி சிதம்பரம் முதலிய சில க்ஷேத்ரங்களைத் தவிர ப்ரும்மாவுக்கு ஆலயமில்லை. கோவிலில்லாமல் போனதற்குப் புராணம்—லிங்க வடிவமான ஶிவ ஶிரஸ்ஸைத் தான் பார்த்ததாகக் கூறிய குற்றமே காரணம் என்கின்றது. கர்மாவிலும் அவர் பெயரைக் கூறாமல் "ப்ரஜாபதிம் மநஸாத்யாயன், ஆகாரா வாகாரயதி" என்றும் பூர்புவஸ் ஸுவஸ்வாஹா என்று வ்யாஹ்ருதியால் ஹோமம் செய்து அதன் உத்தேச த்யாகத்தில் அதாவது, அந்த பொருளை அர்ப்பணம் செய்வதில், ப்ரஜாபதயே இதம் நமம என்றும் கூறப்படுகிறது. ப்ரும்மாவை மநதினால்தான் பூஜிக்கவேண்டும் என்பதை ஒரு கதை கூறுகிறது. வாக்கும் மநதும், நான்தான் உயர்ந்தவன் என வாதமிட்டு ப்ரும்மாவிடம் சென்றன. அவர் முதலில் மநதால் நினைத்து வாக்கால் கூறி உடலால்

ஒரு வேலையைச் செய்கிறோம். ஆதலால் மனதே சிறந்தது. அதன் தூதி வாக் என்றார். வாக்கானது, இனி வாக்கால் உமக்கு ஹோமம் இல்லை என்றதாம். மனதால் த்யானம் செய்யவேண்டும் என்பதைப் போஷிக்கின்றது கதை. நேரில் சொல்லியும் ஹோமம் உண்டு. அவ்விடத்திற்கு அந்த கதை பொருத்தமான தல்ல.

**க்ருஷ்ணனும் அர்ஜுநனும்;** பகவான் வைகுண்டம் சென்றபின் ஆயிரக்கணக்கான அவர் மனைவிகளைத் திருடர் கொள்ளையடித்தனர். கற்பையும் அழித்தனர். அவர்களைக் காக்க காண்டீபத்தாலும் அர்ஜுநனாலும் முடியவில்லை. வ்யாஸர் அதன் காரணத்தை விளக்கி பல நீதிகளைப் புகட்டுகிறார். முற்பிறவியில் அப்ஸரஸ்ஸுகளான அவர்கள் பூமியில் க்ருஷ்ணனாக அவதரித்த பகவானைப் பதியாக அடைய என்னவழி ? என்று அஷ்டாவக்ரரைக் கேட்டார்கள். அவர் காத்யாயநீ வ்ரதத்தைக் கூறிக் கொண்டே ஜலத்திலிருந்து கரை ஏறினார். அவர் உடலின் கோணலைக்கண்டு அப்ஸரஸ்ஸுகள் நகைக்க அவர் அப்படி சாபம் அளித்தார். சிறியது குற்றம். பெரியது ஶிக்ஷை. முனிவர்க்கும் குருவிற்கும் செய்யும் அபசாரம் அத்தகையது. நரநாராயண அவதாரமான அர்ஜுநனும் க்ருஷ்ணனும் சேர்ந்தபோதே அர்ஜுநனுக்குப் பலம் பெருமை. அவருடன் ஶக்தி சென்றதால் இவன் ஶக்தியற்றவனானான்.

**அக்ரூரர் ஸுபத்ரை:** காஶியின் மஹிமை, ஶங்குகர்ணன், ப்ரயாகம், புவநமண்டலம், மேரு, த்வீபங்கள், ஜம்பூத்வீபம், தேவாலயம், ககோளம், த்வீபமலை, த்வீபமரம், த்வீபநதி, ஏகாம்ர க்ஷேத்ரம், புருஷோத்தம க்ஷேத்ரம் முதலியவைகளைக் கூறுகிறார். சந்த்ரவம்ஶ வர்ணனையில் அக்ரூரர், ஸுபத்ரை இவர்களது பிறவி அபூர்வமானது. வ்ருஷ்ணியின் புத்ரரான ஶ்வபல்கர் மஹா புண்யஶீலன். அவர் உள்ளவிடத்தில் நோய்வராது. துர்பிக்ஷம் தோன்றாது. நன்கு மழை பொழியும். ஒரு ஸமயம் காஶீ க்ஷேத்ரத்தில் மழை இல்லாமல் போக அவ்வரசன் ஶ்வபல்கரை அங்கு அழைத்து வந்தான். உடனே நிறைய மழை பொழிந்தது. காஶிராஜன் தனது பெண்ணான காந்திநீ என்பவளை அவருக்கு அளித்து மணம் செய்வித்தான். காந்திநீ கர்ப்பிணி ஆனாள். ஏற்ற காலத்தில்

ப்ரஸவமாகவில்லை. வருஷங்கள் பல சென்றன. வைத்யரும், ஜோதிஷரும் மாந்த்ரிகரும் தங்களால் ஒன்றும் செய்ய முடியாதென கூறி கைவிட்டார்கள்.

வயிற்றில் உள்ளது யாதோ? எத்தினை வருஷம் சுமப்பது? பூதமோ பேயோ இது? என தம்பதிகள் வருந்தும் போது கற்பத்திலிருந்த குழந்தை கூறிற்று: நான் பூதமல்ல. நான் கூறியபடி செய்தால் இன்றே இப்பொழுதே வெளியில் வருவேன் என்றது. ஆச்சர்யமடைந்த தம்பதிகள் அப்படியே செய்வதாக வாக்களித்தனர். நான் வளர்ந்து தானம் செய்ய ஆரம்பிக்கும்வரை எனக்காக நித்யம் ஒரு கோதானம் செய்யவேண்டும் என்றது. உடனே அவர்கள் அதை ஏற்று கோதானம் செய்ய ஒரு ஆண்குழந்தை பிறந்தது. அதன் பெயரே அக்ரூரன். பரம ஶாந்தமானவர், க்ருஷ்ண பக்தி உள்ளவர். அவர் கூறிய ஶ்லோகமே வேதாந்த ஶாந்தி பாடத்தில் "ஸ்மிருதேஸகல" என்று கூறப்படுகிறது.

வஸுதேவருக்குப் பதிநான்கு மனைவிகள். ஸுபத்ரை என்ற க்ருஷ்ண ஸஹோதரி ஒரு அப்ஸரஸ். முநிவரது தவத்தைக் கலைத்த அப்ஸரஸ் கோஷ்டியைச் சார்ந்தவள். ஆதலால் பூமியில் பெண்ணாகும்படி சாபம் பெற்றாள். பிறகு இவளது ப்ரார்த்தனைக்கு இணங்கி நற்குலத்தில் உதித்து பிறந்தவுடன் உடலைவிட்டு தேவலோகம் செல்லும் படியும் வரம் பெற்றாள். அவள் வஸுதேவ தேவகிகளிடம் பிறந்து உடலைவிட்டு ஸ்வர்க்கம் சென்றாள். ஆங்குள்ள அப்ஸரஸ்ஸுகள் பகவானது லீலையைக்காண பலர் ஆயர்பாடியில் பிறக்கப்போகிறோம் என்றவுடன் அதிவேகமாக வந்து அந்த உடலில் புகுந்தாள். இறந்து பிழைத்த அவளை ஸுபத்ரா என்று அழைத்தார்கள்.

**ஶிவ ஸஹஸ்ர நாமம்:** தக்ஷப்ரஜாபதி ஶிவனில்லாமல் யாகம் செய்ய தாக்ஷாயணீ என்ற தேவி அங்கு சென்று தக்ஷனுக்கு நல்ல உபதேஶம் செய்தாள். அவனதை ஏற்காமல் போகவே தேவி அவன் யாகம் அழியும் என சாபமிட்டுத் தன் உடலையும் யோகாக்நியால் விட்டுவிட்டாள். இதை யறிந்த ஶிவனுடைய கோபாக்நியிலிருந்து வீரபத்ரர் கிளம்பினார். பத்ரகாளியுடன் மற்ற ஶிவகணங்களுடன் சேர்ந்து தக்ஷயக்ஞத்தை அழித்தார்.

மஹாவிஷ்ணு சொற்படி தக்ஷன் ஶிவனை ஸஹஸ்ர நாமங்களால் துதித்தார். மற்றவைகளைப் போல் அல்லாமல் நம: என்பதுடன் சேர்ந்து அர்ச்சனை வடிவமாக இருக்கிறது இந்த ஸஹஸ்ர நாமம். "நமஸ்தே தேவ தேவஶ— நமஸ்தே பலஸூதந, நமோ பவாய் ஶர்வாய—ருத்ராய வரதாயச ॥ 38 வது அத்யாயம் நூறு ஶ்லோகங்களால் கூறப்பட்டது இது.

ஶாந்தமான ஶிவன் தனது கோபத்தால் உண்டான ஜ்வரத்தைப் பலவிடங்களில் பகுத்து அளித்தார். யானைகளிடம் மதமாகவும் மலைகளிடம் ஶிலாஜத் என்ற தாதுவாகவும் ஸர்ப்பத்தினிடம் தோலாகவும் பூமியில் களர் மண்ணாகவும் கோகிலத்தினிடம் கண் நோயாகவும் கிளியினிடம் விக்கலாகவும் புலியினிடம் களைப்பாகவும் மனிதரிடம் ஜ்வரமாகவும் ஆனது அது.

ஏகாம்பர க்ஷேத்ர மென்ற சிவ காஞ்சியை வர்ணித்து பூரி ஜகன்நாதமெனும் புருஷோத்தம க்ஷேத்ரத்தை மிகவிரிவாக வர்ணிக்கிறார். இந்த்ரத்யும்நன் என்ற அரசனுக்கு ஸ்வப்நத்தில் தோன்றி இந்த மரத்தால் எனது விக்ரஹத்தை ப்ரதிஷ்டை செய் என்றார் பகவான். க்ருஷ்ணன் பலராமன் ஸுபத்ரை வடவிருக்ஷம் மார்க்கண்டேயர் இவர்களது தர்ஶநம் மிக விஶேஷம். மஹாகாளேஶ்வரம் என்ற சிவாலயம் அதனருகே இருக்கின்றது. இந்த்ரத்யும்நன் செய்த காருண்ய ஸ்தலம் மிக ரமணீயமானது. கருணை உண்டாகும்படி செய்வது.

**இந்த்ர பதவியிலும் பயம் உண்டு:** முநிவரையும் விஷயம் மயக்கும். பரமன் பரம கருணாமூர்த்தி என்பவைகளை விளக்கி ருசியான ஒரு கதை கூறுகிறார். கண்டு எனும் முநிவர் கௌதமீ கரையில் கடுந்தவம் செய்தார். நூறு அஶ்வமேதம் செய்தவரும் கடுந்தவம் புரிந்தவரும் இந்த்ர பதவியைப் பெறுவர். அதிகாரத்திலுள்ள ஶக்ரன் தன் பதவிக்குப் பங்கம் வருமோ என அஞ்சி அவைகளைச் செய்யவிடாமல் தடுப்பான். வஜ்ராயுதமும் பயன்படாவிடத்தில் அப்ஸரஸ்ஸுகளை அனுப்புவான். கண்ணைப் பறிக்கும் மின்னல் கொடிபோன்ற ப்ரம்லோசந்தியின் அழகும் இனிய கீதமும் கண்டு முநிவரது தவத்தைக்

கலேத்தது. காமவலேயில் சிக்கினர். அல்லும் பகலும் அவளுடன் ரமித்தார். நாட்கள் பல, மாதங்கள் பல, வருஷங்களும் பல சென்றன. முநிவர் போதுமென அதை விடவில்லே. பின்னலிது தனக்குத் தீமையை விளே விக்குமோ என்று அஞ்சினள் அப்ஸரஸ்.

நூருண்டுகளுக்குப் பின், தான் செல்ல விடை கேட்டாள். என்ன அவசரம்? இப்போதுதானே வந்தாய்? சற்று இரு, என மூன்று முறை கேட்டும் முநிவர் விடை அளிக்கவில்லே. திடீரென ஒரு ஸமயம் எழுந்து மடிஸஞ்சியை எடு ஸ்நாநத்திற்குப் போகவேண்டுமென்ருர். சிறித்தாளவள். ஏன் சிறிக்கிருய்? என்ருர். ஆண்டுகள் ஆயிரம் சென்றனவே! அஸ்தமனத்திற்குள் ஸந்த்யை செய்ய வேண்டுமென அவஸரப்படுகிறீரே என்ருள். விழித்துக்கொண்டார் தவஸி. ஐயோ! ஆயிரமாண்டா வீணுயின? அநுஷ்டாநம் போனதே! தவம் ஒழிந்ததே! என் செய்வேன்? என மநம் வருந்தினர். தன் நிலேயை நினேத்து நினேத்து துக்கித்தார். ஶாந்தமாக அப்ஸரஸை அனுப்பிவிட்டு தன் செயலே எண்ணி எண்ணி தவித்தார். பரமனேகதி! அச்சுடரில் இந்த பாபம் எந்த மூலேக்கு? என்று துணிந்து பரமனே நாடிப் பாடினர்.

"பாரம்பரம் விஷ்ணுர பாரபார:" என்ற அந்த மூன்று சுலோகம் மஹாமந்த்ர வடிவமானது. அதனல் பாப மகன்றது. பரமனருளேப் பெற்ருர்.

**ஸ்ரீ கிருஷ்ணன்:** 4 முதல் 104 வரை ஸ்ரீ க்ருஷ்ண சரிதம் வர்ணிக்கப்படுகிறது. பெரும்பாலும் ஸ்ரீ மத் பாகவதத்தைத் தழுவியதாகவே இருக்கிறது. தஶாவதார கதைகளேக்கூறி தத்தாத்ரேய அவதாரத்தால் நஷ்டமான வைதிக தர்மம் யாகயக்ஞம் வேத ஶாஸ்த்ரம் முதலியன வ்ருத்தியடைந்தன என்கிருர்.

**மரணமும் லோகாந்தரமும்:** எந்த நிலேயிலும் எந்த இடத்திலும் எந்த வயதிலும் எந்த பிராணிக்கும் மரணம் வந்தே தீரும். அதைத்தடுக்க எவராலும் முடியாது. ஜநந மரணம் இரண்டையும் கண்ணுக்கெட்டாத ஒரு ஶக்தி நடத்துகிறது. இது வேறு எதனுலும் செய்ய

முடியாதது. புண்ய பாபம் இரண்டினுல் அது ஸாதகமாக வும் பாதகமாகவும் ஆகும். புண்யம் செய்தவர் கஷ்ட மின்றி நல்ல மரணம் அடைவர். பாபிகள் துர்மரணம் அடைவதுடன் மிகக்கஷ்டப்பட்டு இறப்பர். அச்சமயம் தீவ்ரமான வாயு உடலில் உஷ்ணத்தை வ்ருத்தி செய்யும். கழுத்திலுள்ள உதாநன் என்ற வாயு அந்நபாநங்களை உள்ளே செல்லவிட்டாமல் தடுக்கும். அந்நபாந தாநம் செய்தவர்கள் அதனுல் அதிக கஷ்டப்படாமல் இறப்பர். தாநம் செய்யாதவரோ மரணதாஹ மெடுத்து வருந்துவர். உடலைவிட்டு வர மநமில்லாத ஜீவனை இரு யமகிங் கரர் கடின சொற்களைக்கூறி தடியாலடித்து மிறட்டி இழுத்துச் செல்கின்றனர்.

எண்ணூறு யோஜனை தூரம் உள்ள யமலோகத் திற்கு ஒரு முஹூர்த்த காலத்திற்குள் வாயு ஶரீரம் அளித்து அழைத்துச் செல்வர் யமதர்மனிடம். "இவனைத் தான் அழைத்து வரச்சொன்னீர்களா" என்று காட்டி மறுபடியும் பூலோகத்தில் கொண்டுவிடுவர். ஒவ்வொரு நாளைய கர்மாவினுலும் ப்ரேத ஶரீரம் உண்டாகின்றது. வ்ருஷோத் ஸர்ஜந கர்மாவாலும் மற்றவைகளாலும் ப்ரேத ஶரீரம் அகன்று யாதநா ஶரீரம் உண்டாகின்றது. இறந்தவருக்கு நாதனில்லாவிடில் அரசனேனும் ப்ரேத ஶரீரம் அகலுவதற்கேற்ற கர்மாவைச் செய்விக்க வேண் டும். இல்லையேல் அந்த குடும்பத்தவரையும் மற்றவரை யும் அந்த ப்ரேதம் துன்புருத்தும். யாதநா ஶரீரத்துடன் யமலோகம் செல்ல ஓராண்டாகும். அதுவரை மாஸ்ய ஶ்ராத்த கும்பங்களால் அந்த ஜீவனுக்கு அன்னபாநம் அளிக்கவேண்டும். பிறகு யமனுடைய ஸன்னிதியில் விசாரணை நடத்தி புண்ய பாபத்திற்கேற்ற இடத்திற்கு அனுப்பப்படுவர்.

பசுவைக் கொல்பவன் வஜ்ரகண்டகம் என்னும் நர கத்தில் லக்ஷ வர்ஷம் துன்பத்தை அனுபவித்தும் பூமியில் சண்டாளனுகப் பிறப்பான். ப்ராம்மணனைக் கொன்றவ னும் பூமியையும் நம்பி அளித்த பிறர் ஸொத்தையும் அப ஹரித்தவன் தாம்ப்ர கும்ப நரகத்தை ஒரு ப்ரளயம் வரும் வரை அனுபவித்துப் பூமியில் குஷ்டரோகியாகப் பிறப் பான். குஷ்டரோகியைப் பார்த்தால் உடனே ஸூர்யன்

அல்லது அக்நியைத் தர்ஶிக்கவேண்டும். பொய் ஸாக்ஷி கூறியவனைக் கரும்பு ஆலை நரகத்தில் தள்ளி கருப்பங் கழியைபோல் பிழிந்து எடுப்பார்கள். இங்ஙனம் அப்ர திஷ்டம் தப்ததாம்ரம் ஜ்வாலாமாலா தாமிஸ்ரம் மஹா தாமிஸ்ரம் வஜ்ரகபாடம் நிருச்வாஸம் கும்பீபாகம் அங்காரராசி லாலாபக்ஷம் க்ருமிபக்ஷம் முதலிய கொடிய நரகங்களில் தள்ளப்படுவர். அடுத்த பிறவிகளிலும் இந்த பாபஶேஷம் தொடர்ந்து பலனைத்தரும். தானம் பாபத்தை அகற்றும். அன்ன தானம் மிகச்சிறந்தது. பத்து ஸஹஸ்ர ப்ராமண போஜனம் செய்தவர் ஸகலபாபங்களிலிருந்தும் விடுபடுவார்.

ஶ்ராத்தம்:— ஶ்ரத்தையுடன் இறந்தவர்களை நாடி செய்யும் கர்மா ஶ்ராத்தமெனப்படும். இறந்தபின் ஜீவன் எந்த உலகில் எந்த பிறவியில் இருந்தாலும் அவர்களுக் கும் அன்னமளிப்பது இறைவன் கடமை. அதை நன்கு செய்ய வஸு ருத்ரர் ஆதித்யர் என்ற பித்ருகணங்களைப் படைத்திருக்கிறார். இறந்தவரை நாடி வேறொரு ப்ராம்ம ணனுக்கு விதிப்படி அன்னமிட்டு அக்நியில் ஹோமம் செய்து பிண்ட தர்பணமும் அளித்தால் வஸு ருத்ர ஆதித் தியர்கள் அவர்களைத் தேடி அவர்களுக்கேற்ற உணவாக மாற்றி அளிக்க வேண்டும். அந்த அறிவையும் அங்கு செல்லவும் உணவை மாற்றவும் பகவான் அவர்களுக்கு யோக சக்தியை கொடுத்து இருக்கிறார். இவர்கள் சந்த்ர னது பெண்ணான ஊர்ஜா என்பவளைக்கண்டு மோஹித்து தங்களுள் ஒருவரை மணக்கும்படி வேண்டினர். அதை அறிந்த ஸோமன் பித்ருக்களைப் பதவியைஇழக்கும்படியும் பெண்ணை நதியாகும்படியும் சபித்தார். இதைக்கண்டு மஹாவிஷ்ணு ஶ்ராத்த அதிகாரிகளான இவர்களை ஶ்ராத்தத்தின் மூலமாகவே ஶக்தி பெறும்படி செய்யக் கருதினார். தானே இவர்களை நாடி ஶ்ராத்தம் செய்தார். வராஹாவதாரம் செய்தபோது தன் ரோமத்திலிருந்து உண்டான தர்ப்பத்தையும் எள்ளையும் அதில் பயன் படுத்தினார். அதனால் இழந்த ஶக்தியைப் பெற்றனர் பித்ருக்கள். தர்ப்பம் ராக்ஷஸர் அல்லது ராக்ஷஸகுண மான கோபம் ஶாபம் முதலியவற்றை அருகில் வராதபடி தடுக்கும். எள்ளு மநதை ஏகாக்ரப் படுத்தி கர்மாதிகள்

உண்டாகாமல் செய்யும். இவர்கள் விரும்பிய. ஊர்ஜா என்ற சந்த்ரனது கன்யகையை ஸ்வதா என்ற பெண் ஆக்கி அவர்களிடம் அளித்தார். ஆதலால் ஶ்ராத்தத்தில் தர்ப்பம் எள்ளு ஸ்வதா என்பன உபயோகிக்கப்படு கின்றன.

ஶ்ராத்தம் நித்யம் நைமிதிகம் காம்யம் ஏகோத்திஷ்டம் ஸபிண்டீகரணம் பார்வணம் நாந்தி என பலவகையாம். சில ச்ராத்தங்களில் பூர்வ பித்ருக்களது பெயரும் விஶ்வதேவர் பெயரும் மாறும். இறந்த நமது பித்ருக்கள் "எட்டு வயதுள்ள கன்யகையை எந்த புத்ரனேனும் மணப்பானே? ஒருவனுவது கயைசென்று ஶ்ராத்தம் செய்யமாட்டானே? பல புத்ரர்கள் நம் ஸந்த்தியில் உண்டாகமாட்டார்களா" என தேவர்களை ப்ரார்த்திகின்றனர், கயா ஶ்ராத்ததிற்கு ஸமம் கன்யாவிவாஹம், இறந்தவனை மாத்ரம் நாடிச் செய்கிறது ஏகோதிஷ்டம். இறந்தவனை அவனது பிதாவுடனும், அவர் பிதாவுடனும் சேர்த்து ஸமமாகப் பிண்டமளிப்பது ஸபிண்டீகரண ஶ்ராத்தம். நியாயமாக பனிரண்டு மாஸம் சென்றபின் பதினாறு மாஸ்யமும் முடிந்தபின் செய்யவேண்டியது இது. அதுவரை கர்த்தா இருந்து செய்வது நிச்சயமில்லாததால் அவைகளை ஆகர்ஷித்து ஆமமாகச்செய்துவிட்டுப் பனிரண்டாவது நாளிலே இது செய்யப்படுகிறது. ஆண்டு தோறும் இறந்தவர் திதியில் செய்வது பார்வணம்.

க்ரஹண காலத்தில் செய்ய வேண்டியது நைமித்திகம். ஒரு பலனைக் கோரி செய்வது காம்யம். மஹாளயம் அமாவாஸ்யை மாஸ ஸங்க்ரமணம் அஷ்டகா அன்வஷ்டகா முதலிய தொண்ணூறு நித்யமாம். இது ஷட்நவதி ஶ்ராத்தம். இந்த திநங்களிலும் முக்யமாக மஹாளய பக்ஷத்திலும் பித்ருக்கள் புத்ரர் முதலியவர் இருப்பிடம் வருகிருர்கள். ஶ்ராத்தம் அல்லது தர்ப்பணத்தால் அவர் பசி தாஹத்தை அடக்கினல் ஸந்தோஷம் அடைந்து ஸந்ததி ஸம்பத் ஆயுஸ் ஆரோக்யம் க்ஞானம் முதலியவைகளைத் தருகின்றனர். தர்ப்பணம் கூட செய்யாதவரைச் சபித்துச் செல்வர். தானே உண்ணமுடியாத குழந்தைகளுக்கு ஸமயமறிந்து உணவளிப்பது போல் லோகாந்தரத்தில் தானே ஸம்பாதித்து உண்ண முடியாத

பித்ருக்களை நாடி அந்தந்த ஸமயத்தில் ஶ்ராத்தம் அல்லது தர்ப்பண மூலமாக உணவளிக்கவேண்டும். அதற்காகவே நம்மைப் பெற்று வளர்த்தனர். பொருளும் தந்தனர்.

குறிப்பிட்ட தாய் தந்தைக்குச் செய்யும் ஶ்ராத்தம் பலருக்கும் பயன்படுகிறது. ஶ்ராத்த ப்ராம்மணர் சாப்பிட்டபின் அவர் இலை எதிரில் வைக்கும் விகிரான்னத்தால் துர்மரணத்தால் இறந்து பிஶாச ரூபமாக இருக்கும் நமது வம்சத்தவர் ஸந்தோஷம் அடைவர். ப்ராம்மணர்களுக்கு அளிக்கும் சந்தநம் தேவ ஶரீரம் பெற்ற நம் குலத்தவரை ஆநந்தமடையச்செய்யும். பிண்டத்தின்மேல் வைக்கும் எள்ளு ம்ருகமானவர்க்கும் தர்ப்ப ஜலம் பல் முளைப்பதற்கு முன் இறந்தவர்க்கும் வஸ்த்ர ஜலம் மரமானவர்க்கும் இன்பந்தரும். வஸ்த்ர தாநம் செய்வது மிக அவச்யம். கன்றை அவிழ்த்து விட்டால் ஆயிரம் பசுக்கள் இருந்தாலும் தன் தாயினிடமே செல்லும். அதே போல் நாம் செய்யும் ஶ்ராத்தம் நமது பித்ருக்களிடமே செல்லும்.

வர்ண தர்மம் ஆச்ரம தர்மம் ஸதாசாரம் முதலியன மிக விஸ்தாரமாக வர்ணிக்கப்படுகின்றன.

**கைஶிக ஏகாதசியின் அபூர்வ விஷயம்:** மஹர்ஷிகள் முக்திக்கு ஸுலபமான வழி யாதென கேட்க பரமஶிவன் கூறினார்: ஏகாதசியில் உபவாஸமிருந்து கண் விழித்து இரவெலாம் பகவானைப் பாடி த்வாதசி பாரணை செய்வதே ஸுலபமான வழி. அவந்தி தேசத்தில் அப்படிப் பாடி வரும் சண்டாளனை ஒரு ப்ரம்மரக்ஷஸ் வழிமறித்து அவனைப் புஜிக்க ஆரம்பித்தது. அவன் இரவில் பகவானைப் பாடி காலையில் வருகிறேனென்று சென்றான். காலையில் அவன் வர அவனைக் கொல்லாமல் அது அவனிடம் புண்யத்தை யாசித்தது. அதனால் இருவரும் வைகுண்டம் சென்றனர். இருவர்களது முற்பிறவிதான் இங்கு விசேஷம்.

சண்டாளன் முன் ஜன்மாவில் வேத வேதாங்க வேதாந்தம் அறிந்த ப்ராம்மண ஸன்யாஸி. ஆஶ்ரம ஆசாரப்படி பிக்ஷை எடுத்த அன்னத்தைப் புஜிக்க ஆரம்பித்தார். அதிவேகமாக ஓடின பசுக்களது கால் புழுதி

அந்த அன்னத்தில் விழ்ந்தது. அது அஶுத்தமானதென நினைத்து அதைத் தூரே எறிந்துவிட்டார். கோவின் பாத தூளியைத் தலையால் வஹித்து கோபாலன் என க்ருஷ்ணன் பெருமை அடைந்தார். இவர் அதை அஶுத்தம் எனக் கருதிய பாபத்தால் அவர் சண்டாள ஜன்மாவை அடைந்தார். பூர்வ புண்ய வாஸனையால் ஏகாதசி உபவாஸம் பகவந்நாம கீர்த்தநம் முதலிய பாக்யத்தைப் பெற்றான். ப்ரும்ம ராக்ஷஸன் முற்பிறவியில் வைதிக குலத்தில் தோன்றியவன். ராஜபுரோஹிதரின் புத்ரன். வேத ஶாஸ்த்ரம் அறியாதவன். தந்தைக்குப் பின் ராஜ குருவானார். அபஸ்வரத்துடன் வேதத்தைக் கூறி அநேக தவறுதல்களுடன் கர்மா செய்துவைத்தார். அந்த பாபத்தால் மறுபிறவியில் ப்ரும்ம ராக்ஷஸ் ஆனார். அவர்களே ஏகாதசியால் ஸுலபமாக நற்கதி அடைந்தனர் எனில் மற்றவர் ஏகாதசியில் நாம கீர்த்தநம் செய்தால் நற்கதி பற்றி கூறவும் வேண்டுமா ?

**காமதமநனின் மாயா தர்ஶநம்:** காமதமநன் ஒரு மன்னன் மகன். காமத்தை அடக்கி காரணப் பெயர் பெற்றான். இளமையில் கல்வி பயின்றான். பெற்றோரிடமும் கற்றோரிடமும் அன்பு பூண்டவன். தானம் தயை தன்னடக்கம் முதலிய நற்குணம் படைத்தவன். தக்க வயதிலே தநயனுக்கு மணம் செய்விக்க விரும்பினார் தந்தை. காமதமநன் "எனக்கு மணம் வேண்டாம் நற்குணமே வேண்டும். மணந்து மக்களைப் பெற்று மனிதர் படும் துன்பமே அதிகம். துறவுபூண்டு ஆத்ம சிந்தனையில் அமர்ந்தால் ஆநந்தம். உலகம் மாயா வடிவமானது. மாயையை ஜயித்தவனே சிறந்தவன். இதற்கு முன் மூன்றாவது பிறவியில் நான் ஸுதபஸ் எனும் வித்யாதரனாக இருந்து தவம் செய்தேன். யாது வரம் வேண்டுமென்றார் பகவான். க்ஞானியையும் மயக்கும் மாயையைக் கண்ணால் காணவேணும் என்றேன். அது கடினம். அதை மாத்ரம் விரும்பாதே. நாரதர் அதனால் பெருந் துன்பம் அனுபவித்தார் என்றார் ப்ரபு. நான் பிடிவாதம் செய்தேன். ஆனால் அருகில் உள்ள தீர்த்தத்தில் முழுகு என்றார். முழுகினேன். எழுந்து என்னை ஒரு சண்டாளப் பெண்ணாகக் கண்டேன். விகாரமான உருவுள்ள பஞ்சமன் ஒருவன் என்னை மணந்தான். குருடான

இரு பிள்ளைகள் செவிடான ஒரு பெண் எங்களுக்குப் பிறந்தன. தரித்ரனும் குரூபியுமான பதி, குருடும் செவிடுமான குழந்தைகள். தீராத பசி, ஓயாத நோய். கதறினேன், பதறினேன். விதியை நொந்தேன். தற்செயலாக கோகா தீர்த்தத்தில் முழுகினேன். பழைய ஸுதபஸ் எனும் வித்யாதர சரீரம் பெற்றேன். கோ—(க: நான்) யார்? கா அந்த சண்டாள ஸ்த்ரீ யார்? என சிந்தித்தேன். அதனால்தான் அது கோகா எனப்பட்டது.

என் பதி, குழந்தைகளுடன் என்னைத் தேடிவந்து காணமல் கதறி நீரில் விழ ஆரம்பித்தார். நானே அந்த சண்டாள ஸ்த்ரீ என்ற ஞாபகம் வந்தது. அவர்களுக்கு எவ்வளவோ ஸமாதானம் சொன்னேன். அனைவரும் அதில் விழுந்து உயிரை விட்டனர். நானும் அதில் இறந்தேன். பிறகு ஒரு வைஶ்யனுகைப் பிறந்தேன். முற்பிறவியில் நடந்தது நினைவிற்கு வந்தது. அந்த கோகா நதியிலேயே அவ்வுடலை விட்டேன். இப்பொழுது உமது மகன் காமதமனனுக இருக்கிறேன். மாயை மிக மிகக் கொடியது. துன்பத்தையே தருவது. நிஸ்ஸாரமான ஸம்ஸாரத்தில் ஆசையை உண்டுபண்ணும். ஸாரம் உள்ளதும் ஆநந்த மயமுமான முக்தியில் புத்தியைச் செலுத்த விடாது. எத்தனையோ பிறவி! எத்தனையோ மணம்! எத்தனையோ தந்தை தாய்! எத்தனையோ மக்கள்! போதும்! போதும்! கோகா தீரம் சென்று மாயேசனை வராஹமூர்த்தியை வணங்கி மாயையை அறுப்பேன். பிறவிக் கடலைக் கடப்பேன்'' என்று சொன்னன் காமதமனன்

**கலியின் தோஷமும் குணமும்:** காலம் அநாதி. த்ருடி நிமிஷம் முஹூர்த்தம் யாமம் பகல் இரவு திநம் வாரம் பக்ஷம் மாஸம் ருது அயநம் வர்ஷம் யுகம் மன்வந்தரம் கல்பம் என பலவகைப்பட்டது. யுகம் நான்கு. க்ருத த்ரேதா த்வாபர கலி என்பனவாம். தர்மம் முறையே நான்கு மூன்று இரண்டு ஒரு பாதத்துடன் நான்கு யுகங்களிலுமிருக்கும். கலி மிகப் பாப யுகம். வர்ணாச்ரம தர்மத்தை வெறுப்பர். வேத ஶாஸ்த்ரம் வேண்டாம் என்பர். பித்ரு மாத்ரு குரு பக்தியைப் பரிஹஸிப்பர்.

கற்பை கனவிலும் கவனியார். விவாஹம் போகத்திற்கே என்பர். ஜாதியை கவனியார். இஷ்டமானபடி மணப்பர். காதல் காதல் என காமத்தில் முழுகுவர். விரைவில் வெறுப்புகொண்டு விலகுவர். அழகும் பொருளும் இன்பப் பேச்சுமே வரனுக்கு வேண்டிய குணம். பணமில்லாத பதியைக் கைவிடுவர். பெண்களே பணந்தேடக் கிளம்புவர். அச்சம் நாணம் அடக்கம் என்பதை ஏளநம்செய்வர்.

க்ஷத்ரியவம்சம் குறையும். அரசர் அரசாளமாட்டார். தநமும் செல்வாக்கும் உள்ளவனே தரணியை ஆள்வான். அவன் இஷ்டமே சட்டமாகும். அவன் கூறுவதே ஶாஸ்த்ரம். குடிகளும் தனக்கென்றே தநம் தேடுவர். பொருள் சேர்ப்பதே புருஷார்த்தமாம். அநியாயமாக அர்த்த ஆர்ஜநம் செய்ய அஞ்சார். அவரவர் இஷ்டப்படி திரிவர். தனக்குத் தோன்றியதே தெய்வம், தனக்குத் தோன்றியதே மதம். தன்னிஷ்டபடி ஆடை, ஆசாரம். சிகை பூணல் புண்ட்ரம் இவைகளை மதியார். பெண்களே அதிகம் உண்டாவர். அதிகாரம் செலுத்துவர். துர்பிக்ஷம் அடிக்கடி உண்டாகும். பலர் உணவின்றி மாள்வர். விசித்ரமான நோய்கள் தோன்றும். தாநம் குறையும். யாசகம் அதிகமாகும். அன்ன விக்ரயம் அதிகமாகும். ஆலய ஸேவை அகலும். வாயால் வேதாந்தம் பேசுவர். மநஶ் ஶுத்தி இராது. தர்ம ஸொத்தை துர்விநியோகம் செய்வர். காலத்தில் மழை இராது. அதிவ்ருஷ்டியும் உண்டாகும். சண்டை திருடு கொள்ளை அதிகரிக்கும்.

பெற்ற மாதா பிதாவுக்கு ஶ்ராத்தம் செய்யார். பஞ்சமருக்கு அந்நதாநம் செய்வர். தாழ்ந்தவரிடம் உபதேசம் பெறுவர், ஜாதித்வேஷம் தெய்வத்வேஷம் பாஷாத்வேஷம் தலைவிரித்தாடும். ஆயுளும் பலமும் குன்றும். பூஸாரம் குறையும். நாளுக்கு நாள் ராஜாங்க வரி அதிகரிக்கும். தாழ்ந்தவர் மேலானவரின் தர்மத்தைக் கைக்கொள்வர். துராசாரம் பரவும். துஷ்டருக்குப் பெருமையும் ஶிஷ்டருக்குக் கஷ்டமும் உண்டாகும். ஸங்கீதமும் நாட்யமும் ப்ரும்ம வித்யை போல் கொண்டாடப்படும். ஒரு ஸ்த்ரீ பல புருஷர்களை மணப்பது நாகரிகமாகும். எல்லோரும் தர்ம உபதேசம் செய்வர். எல்லோரும் கவியாவர். எல்லோரும் தர்மம் பேசுவர்.

"கலியின் செயலிது. ஆதலால் நாம் தர்மத்தை எப்படிச் செய்வது" என எண்ணி தர்ம ஆசாரங்களை விடக்கூடாது. இவ்வூரில் திருடர் அயோக்யர் அதிகம் என்றால் ஜாக்ரதையாக இரு என்று பொருளல்லவா? கூடியவரை அவரவர் தர்மததை விடாமல் சிறிதாவது அநுஷ்டிக்கவேண்டும்.

*கலியின் குணம்:* க்ருத யுகத்தில் பத்து ஆண்டுகளில் நற்கருமம் செய்துவரும் பலனைக் கலியில் ஒரே நாளில் செய்து பெறலாம். த்யாநத்திலும் தவத்திலும் யாகத்திலும் மற்ற யுகங்களில் உண்டாகும் புண்யத்தைக் கலியில் பகவந்நாமாவைக் கூறின மாத்ரத்தால் பெறலாம். அதிக ஆயாஸம் இல்லாமல் பக்தியிலும் தாநத்திலும் நற்கதி பெறலாம். பெண்மக்கள் தனது நற்கதிக்காக வேறொன்றும் செய்ய வேண்டாம். பதியைப் பரமனாகக்கருதி பணிவிடை செய்தால் போதும். ஸ்வல்பமான தபஸ், ஜபம் தாநம் ஸ்வதர்ம ஆசாரம் இவைகளால் பெரும் பலனைப் பெறலாம். மற்ற யுகத்தில் பிறந்தவர் நான் கலியில் பிறக்காமல் போய் விட்டேனே என வருந்துகின்றனர். இந்த யுகத்தில் உள்ளவர்களது ஆயுஸ் சரீர பலம் புத்திபலம் இவைகளை நாடி கருணாமூர்த்தியான காலவடிவனான பகவான் ஸ்வல்ப புண்யத்திற்கு பெரும் பலனைத் தர இசைந்தார்.

*ப்ரளயம்;* ப்ர—லயம் என்ற இரு சொல் சேர்ந்தது இது. காரண வஸ்துவுடன் கார்யம் ஒன்றாகச் சேருவது என்பது இதன் பொருள். மண்ணால் உண்டான பானை உடைந்தது மண்ணாவதைக் கண்ணால் காண்கிறோம். நித்யம் நைமித்திகம் ப்ராக்ருதம் ஆத்யந்திகம் என அது நால்வகை. நமது ஹ்ருதய கமலத்திலே நமக்குக் காரணமான பரமாத்மா இருக்கிறார். அவரது பிரதிபிம்பமே ஜீவனாகி அவருடன் இருக்கிறது. வீட்டிலிருந்து நாம் வெளியில் சென்று வீட்டிற்குத் திரும்புவது போல் ஜீவன் பகலில் பஹிர்முகமாக அலைந்து திரிந்து இரவிலே இறைவனிடம் சேர்ந்து, தன்னை மறக்கிறது. இதை ஸ்வாபம் என்பர். ஸ்வ—தன்னை, ஆப—அடைவது என்று பொருள். காரணப் பொருளான பரமனிடம் கார்யமான

ஜீவன் ஒடுங்குகிறது. இது நித்ய ப்ரளயம் அல்லது தைநந்தின ப்ரளயமாகும்.

**நைமித்திகம்:** நாலாயிரம் சதுர்யுகம் ப்ரும்மாவிற்கு ஒரு பகலாகும். அதே கல்பம் எனப்படும். பதிநான்கு மநுக்கள் தோன்றி மறையும் காலம் அதே. ப்ரும்மாவுக்கு இரவு காலம் நைமித்திக ப்ரளயமாம். அச்சமயம் நூறு ஆண்டு மழை பொழியாது. காலாக்நி ருத்ரன் ஏழு ஸூர்யனாகி ஏழு கிரணங்களால் உலகை உலர்த்துவார். பிறகு ஸம்வர்த்தகம் என்ற மேகம் மழைபொழிய உலகெலாம் ஜலமயமாகும். பின்னர் ப்ரும்மா எழுந்து உலகைப் படைப்பார்.

**ப்ராக்ரத ப்ரளயம்:** இதில் ப்ரும்மா உள்பட ஸகல லோகத்தவரும் உடலை விட்டு ப்ரக்ருதியிடம் லயிக்கும். உலகம் உண்டாவது ஸ்ருஷ்டி அல்லது அவரோஹக்ரமம். அதாவது: இறைவனிடமிருந்து இரங்குதலாம். ப்ரளய காலத்தில் அந்தந்த பூதங்களும் தன் தன் காரணத்தில் லயமாகும். இது ஆரோஹம். பூமி ஜலத்திலும் ஜலம் அக்நியிலும் அக்நி வாயுவிலும் வாயு ஆகாசத்திலும் ஆகாமம் ப்ரக்ருதியினிடமும் லயமாகும். உலகம் இருந்த காலம் எவ்வளவோ அவ்வளவு காலம் ப்ரளயமாகும். இது தங்கப் பொடிகள் மெழுக்கில் ஒத்தப்பட்டிருப்பது போலாகும். ப்ரக்ருதியும் பகவானிடம் லயமாகும்.

**ஆத்யந்திக லயம்:** பரமனிடமிருந்து அநாதியான அவித்யையால் பிரிந்து ஜீவனாகினான். அவன் காமபலனை அனுபவிப்பான். பலனை விரும்பாமல் ஸ்வதர்மத்தைச் செய்யச் செய்ய விவேக வைராக்யம் உண்டாகும். மோக்ஷ இச்சை உண்டாகும். ஸத்குருவை அடைந்து மஹாவாக்ய உபதேசம் பெறுவான். சாஸ்த்ர விசாரம் த்யாநம் முதலியவைகளால் ப்ரும்மத்தை அறிவான். அவித்யை என்ற ப்ரக்ருதியையும் அழிப்பான். அதே ஆத்யந்திக ப்ரளயமாம். மற்றவைகளில் மறுபடி ஸ்ருஷ்டி உண்டு. இதில் மறுபடி பிறப்பே கிடையாது. அந்த க்ஞானம் பெற பக்தியோகம் நிஷ்காம்ய கர்மா. ஆத்யாத்மிக ஆதிதைவிக ஆதிபௌதிக தாபங்களை அகற்றுதல், அதன் ஸ்வரூபம் முதலிய வர்ணனையுடன் ப்ரம்ம புராணத்தின் பூர்வபாகம் பூர்த்தி ஆகிறது.

## கௌதமீ மாஹாத்ம்யம்.

கௌதமீ என்பது கங்கையே. விந்த்ய மலைக்குத் தெற்கில் கௌதமீ என்றும் வடக்கே பாகீரதீ என்றும் பெயர். பொதுவாகவும் தீர்த்த மஹிமையை இங்கு வர்ணிக்கிறார். தீர்த்தங்களில் சிறந்தது கங்கை. அதற்கு கௌதமீ என்றொரு பெயர். அதனால் கௌதமீ மாஹாத்ம்யம் என்ற பெயரால் நூற்றைந்து அத்யாயம் கூறுகிறார். தர்சநத்தாலும் ஸ்நாநத்தாலும் பாபத்தை அகற்றுவதே புண்யதீர்த்தம். மநுஷ்ய ரிஷி தேவ அஸுர என்று தீர்த்தம் நால்வகை. தங்களது பூஜைக்காகவோ கீர்த்திக்காகவோ அம்பரீஷன் போன்ற அரசர் அமைத்தது மநுஷ்ய தீர்த்தம். வஸிஷ்டர் ப்ருகு போன்றவர் கல்பித்தது ரிஷி தீர்த்தம். முன்னதைவிட இது சிறந்தது. கயன் வ்ருத்ரன் முதலிய அஸுரர் ஏற்படுத்திய முன்னிரண்டுகளையும்விட சிறந்தது அஸுர தீர்த்தம். தேவர்களுக்கிருப்பிடமான மலைகளிலிருந்து கிளம்பி கடலில் கலப்பது தேவ தீர்த்தம். இது எல்லாவற்றிலும் சிறந்தது. எல்லாவற்றையும் விட மும்மூர்த்திகளால் உண்டான கங்கை மிக மிகச் சிறந்தது.

**கங்காவதாரம்:** பார்வதீ கல்யாணத்தில் ப்ரும்மா புரோஹிதர். அம்மி மிதிக்கும்பொழுது தேவியின்கால் அழகைக்கண்டு அவர் காமுகனாகி வீர்யத்தைச் சிந்தினார். அது பிறர் கண்ணில் படாதபடி மணலில் கலந்தார். அங்கிருந்து வாலகில்யர் எனும் ரிஷிகணம் தோன்றிற்று. ப்ரும்மா, ருத்ர கோபத்திற்கஞ்சி நடுங்கினார். கருணைகொண்ட ஶிவன் பூமியைக் கமண்டலுவாக்கி அதில் கொஞ்சம் தீர்த்தம் விட்டு, பவமாந ஸூக்தத்தை ஜபித்து, அவரிடம் தந்து இதனால் உனது பாபம் அகலும் என்றார். அதே கங்கையாம். அதைக் கொண்டு த்ரிவிக்ரமரின் பாதத்தை அபிஷேகம் செய்தார். அது மேரு மலைமீது விழுந்து நாலு முகமாக கிளம்பிற்று. அதில் ஒன்றை ஶிவன் ஜடையில் தரித்தார். அதில் ஒரு பகுதியைக் கௌதமரும் மற்றொரு பகுதியைப் பகீரதனும் பூமிக்குக் கொண்டு வந்தார்.

**கௌதமகங்கை:** பரமஶிவன்ஶிரஸிலிருந்த கங்கையை அப்புறப்படுத்த வேண்டுமென விரும்பினாள் பார்வதி.

அதற்காக விநாயகர், விஜயா என்ற தோழியுடன் கௌதம ஆஶ்ரமம் வந்தார். அச்சமயம் துர்பிக்ஷம். கௌதமர் தபோபலத்தால் எண்ணிறந்த முநிவர்களுக்கு அன்னம் அளித்து வந்தார். கணேஶரும் ஒரு ப்ராமணனுக இருந்து வந்தார். எல்லா முநிவரும் ஸுபிக்ஷமான காலத்தில் வெளியில் செல்ல விரும்பினர். கௌதமர் சிலநாள் தங்கி போகும்படி வேண்டினர். இங்ஙனம் மும்முறை அவர் தடுத்தார். விநாயக ப்ராமணர் விஜயையை ஒரு பசுவாக்கி கௌதமர் பயிரை மேயும்படிச் செய்தார். கௌதமர் அதைப் புல்லால் விரட்ட அது கீழே விழுந்து துடித்தது. கங்கையைப் பூமிக்கு அழைத்து வந்தால் தான் கோஹத்தி பாபம் அகலும் என்றனர். அங்ஙனமே கங்கையைக் கௌதமர் ஶிவனருளால் அழைத்துவர அது கௌதமீ என்ற பெயர் பெற்றது. பகீரதன் கொண்டுவந்ததால் பாகீரதீ யானுள்.

**பரஸ்த்ரீகளிடம் பார்வதி:** வீர ஸேநாபதி குஹன் தாரகனைக் கொன்று இந்த்ரனுக்கு ஸ்வர்க்கத்தை அளித்தார். தேவரனைவரும் கார்த்திகேயனைப் பூஜித்து வீடு வீடாக வரவேற்றுக் கொண்டாடினுர். உலகில் அனைவரும் பெண் வடிவமான ஜீவர். தான் பரமாத்மா, வீர புருஷன் எனக்காட்ட பரஸ்த்ரீகளிடம் காமனை கொண்ட புருஷனைப் போல் நடந்தார் ஶரவணபவன். தத்வமறியாத தேவர் பார்வதியிடம் சென்று, உன் மகன் பரஸ்த்ரீகளைக் கெடுக்கிறுன் என்றுர்கள். தேவியும் புத்ரனுக்கு பாபமோ அபகீர்த்தியோ வுரலாகாதென நினைத்தாள். ஸுப்ரமண்யன் எந்த ஸ்த்ரீயைக் கண்டாலும் அவள் பார்வதியாகத் தோற்றும்படிச் செய்தாள். முருகன் அன்று முதல் பரஸ்த்ரீகளை மாதாவாக எண்ணி அவர்களைக் கண்ணெடுத்தும் பார்ப்பதில்லை. மானிடர் மாதாவைப் போல் மற்றவர் மனைவியை மதிக்கவேண்டும் என்ற நீதி இதன் மூலம் விளங்குகிறது.

**ஏன் கருடா சுகமா?** என்றுேர் பழைமொழி உண்டல்லவா? ஆதிஸேஷன் மகன் மணிநாகன், ஶிவனை நாடித் தவம் செய்து அவருக்கு ஆபரணமாக இருந்தான். சிவனருளால் மற்ற ஸர்ப்பங்களைப் போல் கருடனைக் கண்டு அஞ்சுவதில்லை. ஒரு ஸமயம் கைலாஸநாதனை

ஸேவிக்கும்போது கருடனை மணிநாகன், ஏன் கருடா ஸுகமா? என்றது. தன்னைக் கண்டவுடன் நடுங்கி ஒடுங்கி இருக்கவேண்டிய ஸர்ப்பம் இப்படிக் கேட்பதைக் கண்டு பக்ஷிராஜன் ஆச்சர்யமடைந்தான். இருக்குமிடத்தில் இருந்தால் ஸுகந்தான் என்று கூறிச் சென்றான். மற்றொரு ஸமயம் மணிநாகன் ஶிவனை விட்டு விலகிவந்த போது கருடன் தன் கிங்கரன் மூலமாக கர்வங்கொண்ட அவனைச் சிறையிலடைத்தான். நந்தி இதைச் சிவனிடம் தெரிவிக்க நந்தியையே விஷ்ணுவிடம் அனுப்பி தன் பணியாளனை விடும்படி சொன்னார் சிவன். இதை அறிந்த கருடன் மகாவிஷ்ணுவை நோக்கி நான் சுமந்து வேகமாகச் செல்வதால் நீர் உலகைக் காக்கிறீர். என்னை அவமதித்த மணிநாகனை விடமாட்டேன் என்றார். கருட! உண்மை! நீ இல்லாவிடில் என்னால் என்ன முடியும்? இந்த சுண்டு விரலை உன் தலையால் சிறிது தாங்கு என அவன் தலைமீது வைத்தார். கருடன் தலை உள்ளே சென்று பேசவும் நடக்கவும் பறக்கவும் முடியாமல் தவித்தான். கருடனையும் மணிநாகனையும் ஶிவனிடம் அழைத்துச் செல் என்றார் நந்தியை. இருவரும் கர்வமகன்று சாந்தரானார்கள். கர்வம் கொள்ளாதே.

**ஆபஸ்தம்பர்:** தர்ம ஶாஸ்த்ரம் க்ருஹ்ய ஸூத்ரம் ஶ்ரௌத ஸூத்ரம் முதலியவைகளை எழுதியவரிவர். அக்ஷ ஸூத்ரை அவர் மனைவி. க்ருஹஸ்த தர்மத்தை நன்றாக நடத்திவந்தார். இவர் புதல்வன் கர்க்கர். ஜோதிஷ சாஸ்த்ரம் எழுதியவர். யாதவகுல குரு. க்ருஷ்ணனுக்கு ரஹஸ்யமாக ஜாதகாதி செய்தவர். கர்க்க ஸம்ஹிதை என்ற ராதா க்ருஷ்ண சரிதம் எழுதியவர். ஒரு ரிஷி ஶ்ராத்தத்தில் ப்ராம்மணரை வரிக்கும் பொழுது மிகக் கடுமையாக பூர்ண யோக்யதை உண்டா என பரீக்ஷிப்பர். அவருக்குப் பாடங் கற்பிக்க, ஆபஸ்தம்பர் அவர் ஶ்ராத்தத்தில் பிராம்மணனாக அமர்ந்தார். ஶ்ராத்தம் முடிந்தது. கர்த்தா திருப்தி கேட்கும் பொழுது ஆபஸ்தம்பர், கொஞ்சம் அன்னமும் தயிரும் கொண்டுவந்தால்தான் த்ருப்தி சொல்வேன் என்றார். ப்ராம்மணர் த்ருப்தாஸ்ம: என்று கூறாவிடில் ஶ்ராத்தம் நஷ்டமாகும். அதனால் கோபங் கொண்ட கர்த்தா இவரைச் சபிக்க ஜலத்தை எடுத்து

பூமியில் விட்டார். அது கீழே விழாமல் நடுவே புதர் போல் நின்றது. இவர் மஹிமையை உணர்ந்த முனிவர் இவர் காலில் விழுந்து ஆபஸ்தம்பர் என்று காரணப் பெயர் சூட்டி த்ருப்தி கேட்டார். த்ருப்தி கூறிய இவர், புஜித்தபின் ஒருமுறை அன்னம் கொண்டுவந்து விசாரிக்க வேண்டும் என்றார். நித்யமும் செய்யவேண்டியதிது.

தர்ம ஸூத்ரம் எழுதிய இவர் கூறியபடி நடக்கிறாரா என தர்மதேவதையே இவரைப் பரீக்ஷித்து ஆபஸ்தம்ப என்ற பட்டமளித்ததாக மற்றோர் கதை உண்டு. ''பாபி களுடன் உட்கார்ந்து புஜிக்காதே. வைஶ்வ தேவ முடிவில் வந்தவனை யோக்யதை விசாரிக்காமல் பகவானாகக் கருதி அன்னமளி'' என்பது தர்மம். ஆபஸ்தம்பர் எதிரில் பஶுவைக் கொன்ற பிராமணன் வைஶ்வதேவ முடிவில் அதிதியாக வந்தான். என் செய்வர்? அதிதிக்கு அன்னம் இட்டு பின்னர் தான் புஜிப்பதாகச் சொன்னார். அதிதி அவருடன் புஜிக்க நிர்ப்பந்தம் செய்தார். பங்க்தி பேதம் பாபத்தைத் தடுக்கும் என அதிதியை கூடத்தில் உட்கார வைத்துத் தான் தாவாரத்தில் உட்கார்ந்தார். அதிதி இலையுடன் இவரருகே உட்கார்ந்தார். கோலத்தால் பங்க்திபேதம் செய்ய இடையில் ஒரு கோலம் போட்டார். அதை அழித்துவிட்டார் அதிதி. என் செய்வர் இவர்? ஜலத்தினால் இடையில் ஒரு கோடு போட்டார். அந்த ஜலம் மஹர்ஷி விருப்பத்தின்படி கோஹத்திகாரன் கண்ணில் படாதபடி ஸ்தம்பம்போல் மறைத்தது. அதிதி தன்ஸ்வரூபத்தைக் காட்டி ஆபஸ்தம்பர் என்றழைத்தார். அதற்கு முந்திய பெயர் லோகாக்ஷியாம். சொன்னபடி நட.

**ததீசியும் பிப்பலாதரும்;** ததீசி எனும் மஹர்ஷி பரம ஶிவபக்தர். கபஸ்திநீ என்ற மனைவியுடன் பல்லாண்டு ஶிவனைப் பூஜித்து வந்தார். ஒருநாள் க்ஷுவது என்ற அரசன் இவரை வலுவிலே சண்டைக்கழைத்தார். பரிபாலிக்கும் தெய்வமான விஷ்ணுவே சிறந்தவர் என்றார். ததீசி ஆம் அவருக்கு மேலானவர் ஶிவன் என்றார். இருவருக்கும் போர் நேர்ந்தது. க்ஷுவதுக்குப் பரிந்துவந்த இந்த்ரன் இவர் மீது வஜ்ரத்தை விட்டான். அது இவர் உடலில் ஜீரணமாகிவிட்டது. ஆதலின் இவர் எலும்பைக் கொண்டு ஆயுதம் செய்யக் கருதினர். ஒரு ஸமயம்

அமரருடன் வந்து தங்கள் ஆயுதங்களைச் சிறிது காலம் தங்களிடம் வைத்துப் பிறகு எடுத்துக்கொள்கிறோம் என்றான். கபஸ்திநீ, இதை அறிந்தால் அஸுரர் நம்மைப் பகைப்பர். அதை ரக்ஷிக்காவிடில் அமரர் பகைப்பர். ஏனிந்த துன்பம்? என்றாள். முனிவர் தாக்ஷிண்யத்தால் அவைகளை ஏற்றுக்கொண்டார்.

பல நாட்களாகியும் தேவர் வரவில்லை. வெளியில் வைத்துக் காப்பது கஷ்டமாக இருந்தது. மந்த்ர பலத்தால் அவைகளை ஜலமாக்கி அருந்திவிட்டார். கபஸ்திநீ இல்லாத ஸமயம் தேவர்கள் வந்து ஆயுதங்களைக் கேட்டனர். நடந்ததைக் கூறி முனிவர் தனது எலும்புடன் கலந்த அவைகளை எடுத்துக்கொள்ளுங்கள் என்று கூறி யோகத்தால் உயிரை விட்டார். த்வஷ்டாவை அழைத்து அவர் எலும்பால் ஆயுதம் செய் என்றான் சக்ரன். முனிவர் உடலை நான் பிளக்கமாட்டேன். எலும்பை எடுத்தளித்தால் ஆயுதம் செய்கிறேன் என்றான். சக்ரன் கோவை அழைத்து உனக்கு யாகத்தில் ஒரு பாகம் தருகிறோம். ததீசியின் எலும்பை எடுத்துத் தா என்றான். கோ அறம் போன்ற நாவினால் நக்கி மாம்ஸத்தை அகற்றி எலும்பைத் தந்தது. தேவர் சென்றபின் கபஸ்திநீ வந்து அக்நியின் மூலமாக நடந்ததை அறிந்தாள். தேவர்களுக்கு ஸந்ததி இல்லாதபடியும் பசுவின் முகம் அசுத்தமாகும் படியும் சபித்து அவருடலுக்குத் தீயிட்டுத் தானும் அதில் நுழைந்தாள். கர்ப்பிணி தீயில் விழக்கூடாது என அசரீரி சொல்லிற்று. தன் வயிற்றிலிருந்த கருவை வெளியில் எடுத்து வநதேவதை இதை ரக்ஷிக்கட்டும் என்று கூறி தீயில் இறங்கினாள்.

பிப்பலம் என்ற வ்ருக்ஷம் அம்ருதத்தைக் கொண்டு வந்து அளித்து இக் கருவை வளர்த்தது. அதனால் பிப்பலாதர் என காரணப்பெயர் பெற்றார். வயது வந்தபின் தன் தாய் தந்தை கதியை அறிந்து தேவரிடம் சினம் கொண்டார். கடுந் தவம் செய்து சிவனிடமிருந்து தேவரைக் கொல்லும் ஒரு க்ருத்யா என்ற ஶக்தியைப் பெற்றார். அது முதலில் இவரைப் பக்ஷிக்க ஆரம்பித்தது. இது என்ன என்று அலறினார். நீ அம்ருதம் உண்டதால் தேவனென உன்னிடமும் வந்ததெனக்கூறி ஶிவனதை

விலக்கினர். அது அமரரைக் கொல்ல அனைவரும் மஹா தேவனைச் சரணமடைந்து அவர் உத்திரவுபடி காசியில் தங்கினர். சிவன் பிப்பலாதரை ஸமாதானப்படுத்தி அந்த க்ருத்தியையைக் கடலில் போகும்படிச் செய்தார். கடல் ஸ்நானம் செய்பவர் ஒரு பிடி மணலை அதற்கு ஆஹாரமாக அளித்துவிட்டு ஸ்நானம் செய்தால் அதன் ஹிம்ஸை இல்லாதிருக்கும். குற்றவாளியிடமும் அன்பு காட்டு.

இங்ஙனம் எண்ணிறந்த ருசியான கதைகளைக் கூறி கங்கையில் அதை ஸம்மந்தப் படுத்துகிறார். நூற்றுக் கணக்கான தீர்த்தம்—(கட்டம்) கௌதமியில் கூறப்படுகிறது.

பலஶ்ருதியுடன் ப்ராஹ்ம புராணம் பூர்த்தியாகிறது.

ப்ரும்மார்ப்பணம்

---

**சில மிக அபூர்வமான லலிதமான ப்ராஹ்ம புராண ஶ்லோகம்:**

1. நவநீதம் யதா தத்ந: காஷ்டாத் அக்நி: யதைவச |
ததைவச உத்ருதம் ஶாஸ்த்ராத் க்ஞானம்மோக்ஷாய கல்பதே ||

காணாததால் கடவுளில்லை என்பவரைப் பார்த்து தயிரில் நெய், அரணியில் தீ தெரியவில்லை அவைகளில்லையா? கடைந்தால் வரும், சாஸ்த்ர விசாரத்தால் கடவுள் தெரிவார் என்கிறது.

2. யோ ருத்ர: ஸ ஸ்வயம் விஷ்ணு: யோ விஷ்ணு: ஸமஹேஶ்வர: |
உபயோ: அந்தரம் நாஸ்தி பவந ஆகாச யோரிவ ||

ஆகாசமும் காற்றும்போல் அபேதமானவர் ஹரிஹரன்.

3. மனோ விசுத்தம் புருஷஸ்ய தீர்த்தம் வாசாம்ததாச இந்த்ரிய நிக்ரஹச்ச |
ஏதாநி தீர்த்தானி சரீரஜாநி, ஸ்வர்க்ஸ்ய மார்க்கம் ப்ரதிபோதயந்தி ||

மனஸ் வாக்கு இந்த்ரியம் இவைகளை அடக்கு. இதே புண்ய தீர்த்தம். ஸ்வர்க்கம் தரும்.

### ஸஹஸ்ரநாம பலனேயும், ஆரோக்யத்தையும் தரும் சூர்ய நாம:—

விகர்தநோ: விவஸ்வாம்ச மார்தாண்ட; பாஸ்கர: ரவி: |
லோக ப்ரகாசக: ஸ்ரீமான் லோக சக்ஷு: மஹேச்வர: ||
லோக ஸாக்ஷீ த்ரிலோகேச: கர்தா ஹர்தா தமிஸ்ரஹா: |
தபந: தாபந: சைவ சுசி: ஸப்தாச்வ வாஹந: ||
கபஸ்தி ஹஸ்த: ப்ரும்மண்ய: ஸர்வதேவ நமஸ்க்ருத: |
சரீர ஆரோக்ய தச்சைவ தநவ்ருத்தி: யசஸ்கர: ||
ஸ்தவ ராஜ இதிக்யாத: த்ரிஷு லோகேஷு விச்ருத: ||

---

## ப்ராஹ்ம புராண விஷய ஸூசிகா.

22 ஏகாம்ப்ர க்ஷேத்ரம், புருஷோத்தம க்ஷேத்ரம்.
23 மஹா காளேஶ்வரர் இந்த்ரத்யும்ந சரிதம்.
24 இந்த்ரத்யும்நன் புருஷோத்தம ஆலய பணி.
25 ப்ரளய காலத்தில் மார்கண்டேயர் ஆலமரத்தை தர்சித்தல்.
26 வடபத்ர விஷ்ணு. மார்க்கண்டேயர் விஷ்ணுவை சரணம்.
27 நரஸிம்ம பூஜாவிதி. இறந்த கௌதம புத்ரன் எழுந்தது.
28 ஶ்வேதராஜன், ஶ்வேதமாதவர், அஷ்டாக்ஷரீ.
29 நாராயண கவசம். விஷ்ணு பூஜா விதி.
30 ஸுபத்ரா, பலராம, க்ருஷ்ண மஹிமை, ஸமுத்ரஸ்நாந.
31 ஜ்யேஷ்டா மாஸவிசேஷம். பௌர்ணமியில் விஷ்ணு தர்சநம்.
32 வைகுண்ட வர்ணனம், புருஷோத்தம க்ஷேத்ர வர்ணனம்.
33 ராவணன் தேவரை ஜயித்து, வாஸுதேவ விக்ரஹ க்ரஹணம்.
34 ஈஶாநாவதாரம். நான்கு வ்யூஹம். க்ருஷ்ணவதாரம்.
35 க்ருஷ்ண லீலை, உஷா பரிணயம், ஸாம்பனுக்கு சாபம்.
36 தசாவதாரம். நரகயாதனை, கர்ப்ப உற்பத்தி, வ்ருத்தி.
37 அந்நதாந மஹிமை. ஶ்ராத்த விதி, ஸபிண்டீகரண.
38 ஶ்ராத்த விஸ்தாரம், வர்ணாஶ்ரம தர்மம், ஸதாசாரம்.
39 ஸ்வர்க்கத்தை தரும் கர்மா, ஸ்வதர்ம, அதர்ம.
40 க்ருஷ்ண பூஜையால் ஸத்கதி. ஏகாதசி மஹிமை.
41 சண்டாளன் ப்ரும்ம ரக்ஷஸ் இவர்களது பூர்வஜன்ம.
42 காமதஹநன், நாரத மாயா தர்சநம், மஹாப்ரலய.
43 தாபத்ரயம், யோக ஶாஸ்த்ரம், குணத்ரயம்.
44 யோகஸாங்ய மத, தயாதிகுணம், க்ஞாநம்.
45 வஸிஷ்ட, கராள ஜநக ஸம்வாதம்.
46 க்ஷர அக்ஷர ஸ்வரூபவர்ணநம். அர்த்தக்ஞாந மஹிமை.
47 வித்யா அவித்யா, அஜனன ப்ரும்மம் பல ரூபியாதல்
48 புராண ஶ்ரவண பலம்.

## கௌதமீ மாஹாத்ம்யம் 105 அத்யாயம்.

1 தீர்த்த லக்ஷணம், யாத்ரா விதி, யாத்ரா பலன்.
2 பார்வதீ விவாஹம், ப்ரும்ம வீர்யத்தால் வாலகில்யர் ஜநநம்.
3 ப்ரும்மா ஶிவனிடம் தீர்த்தம் பெறுதல். வாமநாவதாரம்.
4 ப்ரும்மா கமண்டலு தீர்த்தத்தால் விஷ்ணு பாதாபிஷேகம்.
5 ஶிவன் கங்கையை ஶிரஸில் தரித்தல், பார்வதி கோபம்.
6 கௌதமர் மூலமாக விநாயகர் சிவஶிரஸிலிருந்த கங்கையை பூமிக்குக் கொண்டுவருதல்.
7 கங்கை பதினைந்து ரூபமாதல், கோதாவரீ மஹிமை.
8 ஸகரர் பகீரதர், கபோத தீர்த்தம், குமார தீர்த்தம்.
9 குஹன் பரஸ்த்ரீகளிடம் பார்வதியை தர்சித்தல்.
10 இந்த்ரதீர்த்த, ஜநஸ்தாநதீர்த்த, சக்ரதீர்த்த, கணிகா தீர்த்த.
11 அஶ்வபாநு தீர்த்த, கருட தீர்த்த, கோவர்த்தநதீர்த்த.
12 விஶ்வாமித்ர தீர்த்த, ம்ருத்யு தீர்த்த, ஶுக்ர தீர்த்த.
13 குபேர தீர்த்த, அக்நி தீர்த்த, ரிணமோசந தீர்த்த.
14 வாலகில்யர் இந்த்ரனை ஜயிக்கும் பக்ஷீந்த்ரனை வேண்டல்.
15 பஞ்சதீர்த்த வர்ணநம், அம்ருதா ஸங்கதீர்த்தம்.
16 வ்ருத்த கௌதமியை மணர்ந்த கௌதமர் இலாதீர்த்த
17 ஶிவனருளால் விஷ்ணு இழந்த சக்ரத்தைப் பெறுதல்
18 பிப்பலேஶ்வரதீர்த்த,ஶௌநகஸேநனுக்கு ஸர்பகுழந்தை
19 மாத்ரு தீர்த்த, அவிக்ந தீர்த்த, கடர் குரு சொற்படி குரூபியான ரேவதியை மணர்தல். ஶிவனருளால் அவள் ரூபவதி யானது.
20 தசரதனது ப்ரும்மஹத்தியை அகற்ற ராமன் கங்கா ஸ்நாநம் செய்தல், ராமதீர்த்தம்.
21 புத்ர தீர்த்தம், சிவனே வேதத்தில் ஸர்வ தேவர்களிலும் சிறந்தவன் என ஆபஸ்தம்பர் கூறல்.
22 ஸரமா சாபமோசந தீர்த்தம், கங்கையில் சக்ரத்தை அலம்பி அஸுர ரத்தம் அகன்ற இடம் சக்ரதீர்த்தம்.

23 மௌத்கல்யருக்கு விஷ்ணு ஐஶ்வர்யம் தந்தது. லக்ஷ்மியும் தரித்ராதேவியும் வாதமிடுதல்.

24 மதுச்சந்தஸ் பைலூஷர் கவஷர் ஆத்ரேய தீர்த்தம். ஆத்ரேயர் ப்ரும்ம வரத்தால் இந்த்ர ரூபம்பெற்றது.

25 கபிலர் ப்ருது பருஷ்ணீ காலஞ்ஜர நாரஸிம்ஹ தீர்த்த

26 ராவணன் ஶிவாஷ்டோத்தர ஶதநாமாவை ப்ரும்ம னிடம் பெறுதல்.

27 ஶுநஶ்ஶேபனை விற்ற அஜீகர்தர் பேயானது. புத்ரன் அவரை கங்கா ஸ்நாநத்தால் வைகுண்டமனுப்பியது.

28 ஆங்கீரஸர் தாய் உத்தரவில்லாமல் தவத்திற்குச் சென்று தவம் கைகூடாமல் வருந்தியது. அவர் அடுத்த கல்பத்தில் வ்யாஸராக வருதல்.

29 ஶிவனிடமிருந்து தேவர் மன்யுதேவரைப் பெற்று வெற்றி அடைந்தது.

30 ப்ரகு எனும் ராக்ஷஸன் ரிஷிவேஷம் பூண்டு ஶாகல்யரை பக்ஷிக்கவர அவனுக்கு ரிஷி விருந்தளித்து பரலோகமும் தந்தது.

31 அபிஷ்டுத அரசனது அஶ்வமேத யாகத்தில் தைத்யர் ப்ராம்மண வேஷத்துடன் வந்தது. த்வஷ்டா அவர்களை விரட்டியது.

32 தேவரெனும் வைதிகர் பூஜித்த லிங்கத்தை ஒரு வேடன் பூஜிக்க இருவருக்கும் யுத்தம் நேர ஶிவன் இருவருக்கும் கைலாஸம் தந்தது.

33 குண்டலனெனும் வைஶ்யன் தர்மத்தைக் குறைத்து அதர்மத்தையே போற்றியதால் கண் இழந்தது, விபீஷணனின் புத்ரன் வைத்திருந்த ஸஞ்ஜீவநீ என்ற கொடியால் கண்ணைப் பெற்று பிறவிக்குருடான ஒரு ராஜகன்யகைக்கு அதனுல் கண்ணைத் தந்து அவளையே மணந்தது.

34 கங்கா ஸாகர ஸங்கம வர்ணநம். பல ஶ்ருதி.

**ப்ராஹ்ம, கௌதமீ மஹாத்ம்யம் முற்றிற்று.**

† இதுபோன்ற பல அரிய விஷயங்கள் உள. நம் சுருக்கத்தில் இதிலும் சிலதே உள.

# பாத்மபுராண விஷய ஸூசிகா.

## 1. ஸ்ருஷ்டி கண்டம்.

17 புண்யஶேஷம் பாபஶேஷம் இவைகளுடன் வந்தவரது லக்ஷணம், மூக சரிதம், ஶ்ராத்தம், ஶ்ராத்தம் செய்யமுடியாதவர் கடமை.

18 பதிவ்ரதை மஹிமை, ஶைப்யா மாண்டவ்யர், விதவா தர்மம், தகாதவருக்கு கன்யாதாநம் செய்வது பாபம்.

19 துலாதார சரிதம், காமா க்ஷேமங்கரீ, ஜலதாநம், அஶ்வத்தம் வைத்தல், அணைகட்டுதல், வீதி அமைத்தல், கோக்கள் மேய இடமளித்தல், நெல்லி மஹிமை.

20 துளஸீ ஸ்துதி, கணேசருக்கு ஏன் முதல் பூஜை, சித்ரரதன் காலேயனைக் கொன்றது. அஸுரவதம்.

21 ப்ரஹ்லாதன் பூர்வஜன்மா, அவனால் அவன் முன்னோருக்கு நற்கதி, வராஹாவதாரம்.

22 ஸூர்ய பூஜை மஹிமை ஸ்தோத்ரம், ஶிவனிடமிருந்து அங்காரக ஜநநம், அங்காரக சதுர்த்தி.

23 நவக்ரஹங்களின் உற்பத்தி, பூஜை, மந்த்ரம்.

## 2. பூமிகண்டம்.

1 ப்ரஹ்லாதனது முன்பிறவி, ராக்ஷஸ பிறவி காரணம்.

2 கஶ்யபர் திதிக்கு வேதாந்த தத்வம் கூறியது. கொடுத்த பொருளை திருப்பாவிடில் அதை வசூல் செய்ய அவன் புத்ரனாக பிறப்பது, கடனைத் தரு விடில் அதைப் பெற புத்ரனாவது, சத்ரு புத்ரனாவது. உதாஸீநன் புத்ரனாவது. இப்படி நால்வகை புத்ரன்.

3 பாபிகள் எப்படி இறப்பர் ?

4 ஸுவ்ரதன் அவனது முற்பிறவி, அவன் இந்த்ரனானதல், பலன். வ்ருத்ரன் ரம்பையிடம் ஆசைகொண்டு மது பாநம் செய்தல், வ்ருத்ரனை இந்த்ரன் கொல்லுதல்.

5 திதி தபஸ்செய்து ஶக்ரனைக் கொல்ல கர்ப்பம் தரித்தல், இந்த்ரன் கருவைஅழித்து மருத்துக்களானது.

6 ப்ருது சரிதம், பூமியை கறப்பது, அங்கன் இந்த்ர ஸமமான புத்ரனை வேண்டியது, வேநன், ஸுநீதா சரிதம், அங்க விவாஹம்.

7 ஸுதேவா ஸதி. பத்மாவதி கோபிலன் உக்ரஸேந வேஷம் பூண்டு அவள் கற்பை கெடுத்தது, கம்ஸன் பிறந்தது, ஸுகலா சரிதம்.

8 ஸுகலேயிடம் ஶக்ரன் மோஹம் கற்பைக் கெடுக்கும் முயற்சி வீணுனது.

9 க்ருகல வைஶ்யன் புத்ரன் செய்த ஶ்ராத்தத்தால் நற்கதி பெற்றது, ஶரீர உற்பத்தி அதன் தோஷம்.

10 யயாதி குடிகளே விஷ்ணு பக்தியில் ஈடுபடுத்தியது, அதனுல் யயாதி கிழத்தனம் மரணமில்லாதிருத்தல், நாடகத்தைப் பார்க்கும்போது ஜல விஸர்ஜநம் செய்து சௌசம் செய்துகொள்ளாததால் கிழத்தனம் பெற்றது.

11 சர்மிஷ்டா தேவயாநீ சரிதம், அஶ்ருபிந்துமதீ யயாதியை ஸ்வர்க்க மழைத்தது.

12 குஞ்ஜலன் எனும் கிளி தன் புத்ரர் கூறும் கதைகளே கேட்டது, க்ருஷ்ண அஷ்டோத்ர நாம.

13 திவ்யாதேவீ அஶோகஸுந்தரீ இந்துமதீ, ஹிண்ட விஹுண்ட காமோதா.

## 3. ஸ்வர்க்க கண்டம்.

1 அண்டோத்பத்தி, த்வீபம், மேருபர்வதம், தீர்த்த மாஹாத்ம்யம், த்ரிபுர தஹநம், நர்மதா, யமுநா, கங்கா, கயா, ப்ரயாக, விஷ்ணுபக்தி, வர்ண ஆஶ்ரம தர்மம் முதலியன.

## 4. ப்ரும்மகண்ட.

1 ஆலய ஸேவை, எதனுல் புத்ரபாக்யம் உண்டாவதில்லே, த்வாதசியில் லக்ஷ்மி உண்டானது.

2 ஜ்யேஷ்டா தேவியை உத்தாலகர் மணந்தது, தீநநாத சரிதம், ப்ராம்மண பாதோதக மஹிமை.

3 ஏகாதசி மஹிமை, பாபங்களுக்கு ப்ராயஶ்சித்தம்.

4 கார்த்திகை மாத மஹிமை, துலஸீ நெல்லி மஹிமை, தானபலன், நாமமஹிமை, நாமாபராதம், ராதாஷ்டமி.

### 5. பாதாள கண்டம்.

1 ராமாயண கதை, ஸுகன்யாச்யவநர், கண்டகீ, ஸாலக்ராமம், ராமாஸ்வமேதம், ரிதம்பர ரிதுபர்ணன்.

2 வீரமணி, ஸுரத குசலவர்களுடன் யுத்தம்.

3 ராமன் தொட்டவுடன் அஸ்வமேத குதிரை இறந்தது, கற்பூரத்தை ஏற்றி அஸ்வமேத யாகத்தைப் பூர்த்தி செய்தது.

4 ஸ்ரீ க்ருஷ்ணாவதார கதை, வைஸாக மாஹாத்ம்யம், பஸ்ம மஹிமை, ஸிவநாம மஹிமை, ஜாம்பவான் கூறிய முன் கல்ப ராமாயணம்.

### 6. உத்தர கண்டம்.

1 ஜாலந்தர சரிதம், ஸிவ ஜாலந்தர யுத்தம், ஸ்ரீசைல மஹிமை, ஹிரித்வாரமஹிமை, துலஸீ த்ரிராத்ரவ்ரத, தசரதன் மழைக்காக ஸனைஸ்சரனுடன் பத்துதிக்கும் சென்றது, இருபத்தைந்து ஏகாதசி சரிதம்.

2 விஷ்ணு ஸஹஸ்ரநாம மஹிமை, ராம ரக்ஷாஸ்தோத்ரம், ரிஷிபஞ்சமி வ்ரதம், ப்ருந்தைசரிதம், ஸாலக்ராம மூர்த்திபேதம், ஸௌபரி.

3 மாகமாஸ மாஹாத்ம்யம், ஸகல வ்ரதங்கள், ஸகல தீர்த்தங்கள், பகவத் கீதையின் 18 அத்யாயங்களுக்கும் தனித்தனிகதை. காஞ்சநமாலினி, புஷ்கரம், பதரீ.

4 பாகவத மஹிமை, கோகர்ண கதை, திலீபன், கோ பூஜையால் ரகுவைப் பெற்றது.

5 ஸரபாவதாரம், ஊர்த்வ புண்ட்ர மஹிமை, தாமஸ ஸாஸ்த்ராதி, ஆந்ஹிக தர்மம், பதிவ்ரதா தர்மம். ஸிவராத்ரீ மாகஸ்நாநம். தசாவதாரம், ஸமாஸ்ரயண விதி. புராண ஸ்ரவண பலன்.

† இதுபோன்ற பல விஷயங்கள் உள. சுருக்கமான இதில் சிலவைகளே இருக்கின்றன.

# ஸ்ரீ பாத்ம புராண ஸாரம்.

*[ப்ரும்மாவின் பெருமையைக் கூறுவது. 6 கண்டங்களும் 628 அத்யாயங்களும் 55 ஆயிரம் ஸ்லோகமும் உள்ளது.]*

*பாத்ம கல்பத்தில் பூமி ஸ்வர்ண தாமரைப்பூ போல் இருந்தது. அதைப்பற்றி கூறியதால் பாத்மம் எனப்படும். ப்ரும்மாவின் பெருமையைக் கூறும் புராணம் என்றாலும் ஹரிஹரர் பெருமையையும் நன்கு வர்ணிக்கிறது. ப்ரஹ்லாதன் ருக்மணி ஸத்யபாமை கௌஸல்யை போன்றவர்களது பூர்வ ஜன்ம கதை. கதை வடிவமான வேதாந்தம் மோதகத்தின் தத்வம் கற்பூரம் ஏற்றுவதின் கருத்து 25 ஏகாதசிகளின் பெயரும் அதை அனுஷ்டித்துப் பயனடைந்தவர் சரிதமும் ஸ்ரீ பகவத்கீதை 18 அத்யாயங்களுக்குத் தனித்தனி கதை, ஸப்தாஹமுறை அதை அநுஷ்டித்தவர் சரிதம் முதலிய பல அரிய விஷயங்கள் பாத்மத்திற்குச் தனிச் சிறப்பைத் தருவன. ப்ரபோத சந்த்ரோதய நாடகத்திற்கும் ரகுவம்ச காவ்யத்திற்கும் இதே மூலநூல். கதை மாத்ரமல்ல. கருத்தையும் சிறந்த பத அமைப்பையும் உபமாநத்தையும் காளிதாஸன் பாத்மத்திலிருந்தே எடுத்துக் கையாளுகிறான். "சாயேவ தாம்பூபதிரன்வ கச்சத்" என்ற பாதத்தை பாத்மத்திலிருந்து அப்படியே எடுத்து ரகுவம்சகாவ்யத்தைச் சிறப்பிக்கிறான். லவகுஶ சரிதத்தைப் பவபூதி இங்கிருந்தே எடுத்து உத்தர ராம சரித நாடகம் இயற்றினார். கதைக் களஞ்சியம்! தர்ம நிதி! தத்வக்கடல்! ஞாநபாநு! பல அம்சங்களால் உயர்ந்த புராணமிது.*

*இந்த புராணம் மூன்றிடங்களில் அச்சிடப்பட்டது. அநேகமாக எல்லா விஷயங்களும் ஒற்றிருந்தாலும் சிற்சில இடங்களில் விஶேஷ மாறுதல்கள் இருக்கின்றன. தக்ஷிண தேச நூலில் ஸ்ருஷ்டி பூமி பாதாள புஷ்கர உத்தர என்ற 5 கண்டங்கள். வட தேச நூலிலோ ஸ்ருஷ்டி பூமி ஸ்வர்க்க பாதாள உத்தர என்றும் மற்றொன்றில் ஆதி பூமி ப்ரும்ம பாதாள ஸ்ருஷ்டி உத்தர என ஆறு கண்டமாகவும் இருக்கின்றது. சிலவிடத்தில் ஸ்ரீ ராமாநுஜா*

சார்ய மதம் ஸமாச்ரயணுதிகள் அத்வைத மதகண்டநம் "மாயாவாதம் அஸத் ஶாஸ்த்ரம் ப்ரச்சன்னம் பௌத்த உச்யதே" என்பது போன்றவை இருக்கின்றன. இதைப் பிற்காலத்தவர் சேர்த்திருப்பர் என்பர் சிலர். கேமராஜ்ஜீ க்ருஷ்ணதாஸ், வெங்கடேச்வர ஸ்டீம் ப்ரஸ், பாம்பே அச்சிட்டதைத் தழுவியே இதை எழுதுகிறோம்.

**ஸ்ருஷ்டி கண்டம் :** மஹத் தந்மாத்ரை பஞ்சபூதம் ஸ்தாவரம் திர்யக்ஜந்து தேவ அர்வாக் தாமஸ கௌமார என்ற ஒன்பது வகை ஸ்ருஷ்டிகளைக் கூறி அவைகளின் பலாபலத்தை வர்ணிக்கிறார்.

**ப்ருகு ஶாபம் :** தேவகுரு ப்ருஹஸ்பதி, அஸுரகுரு சுக்ரர். விஷ்ணுவின் பலத்தால் அமரர் அமரராகவே இருந்தனர். தோல்வியுற்றாலும் அவர் இறப்பதில்லை. வெற்றிபெற்றாலும் அரக்கர் இறப்பர். இதைக் கண்டார் அஸுரகுரு. ஶிவனிடமிருந்து ம்ருத ஸஞ்ஜீவினியைப் பெற கடுந்தவம் செய்யச் சென்றார். சிஷ்யர்களை தான் வருமளவும் வைதிக கர்மாவைச் செய்யச் சொன்னார். இதை அறிந்த தேவகுரு சக்ரன் பெண்ணை ஜயந்தியைச் சுக்ரருக்குப் பணிவிடை செய்து பல்லாண்டு அவருடன் ரமிக்கும்படி அனுப்பினார். ஆயுதமின்றி குருவுமின்றி சாந்தராக இருக்கும் அரக்கர் மீது படை எடுக்கச் சொன்னார். அஸுரர் சுக்ரரின் தாயான ப்ருகுபத்நியைச் சரணம் அடைந்தனர். அங்கும் பலாத்காரம் செய்த தேவரை நீண்டகாலம் தூங்கும்படி செய்தாளவள். மஹாவிஷ்ணு அவளது சிரத்தை அறுத்து அமரரை எழுப்பினார். ப்ருகு தன் மனைவியைக் கொன்றதால் "பூமியில் நரனாகி மனைவியை இழக்கவேண்டும். மத்ஸ்ய கூர்மாதி பத்து பிறவி எடுக்கவேண்டும்" என விஷ்ணுவைச் சபித்தார். தன் தவ வலிமையால் மனைவியை எழுப்பினார். என்ற கதையின் மூலம் ரிஷியின் தவ மஹிமை கற்பரசியின் பெருமை விஷ்ணு தேவரிடமும் பூஸுரரிடமும் காட்டிய அன்பு முதலியவைகளை விளக்குகிறார் வ்யாஸர்.

**பார்க்கவியும் ப்ருகு ஶாபமும் :** ப்ருகு நர்மதா தீரத்தில் மஹாலக்ஷ்மி தனக்குப் பெண்ணாகத் தோன்ற வேண்டுமென தவம் புரிந்தார். ஸ்ரீதேவி ஸ்ரீயபதியின்

உத்திரவு பெற்று ப்ருகு புத்ரியானள். தன்னுடன் லக்ஷ்மீ புரம் என்ற நவரத்நம் இழைத்த நகரத்தையும் கொண்டு வந்தாள். நவநிதியும் அஷ்டலக்ஷ்மியும் நிறைந்த நகரத்திலே முநிவர் நாரணனை அழைத்து கன்யாதாநம் செய்து களித்தார். தேவி தேவனுடன் வைகுண்டம் போகும் போது இந்நகர லக்ஷ்மியையும் அழைத்துச் சென்ருள். வாஸனை பலத்தால் ப்ருகு முநிவர், செல்வத்தைவிட மந மில்லாமல் மறுத்தார். விஷ்ணு, அது தர்மமல்ல, என்று கூற; மனைவிக்குப் பரிந்து வந்த நீ மாநிலத்தில் மானிடனுவாய் என்று சபித்தார். பகவான் ராம க்ருஷ்ணுதிகளாக அவதரித்தார். தந ஆசை எவ்வரையும் விடாது. ஆசை கெடின் கோபம் உண்டாகும். கோபத்தால் பந்து என்பதையும் மறந்து சாபம் கொடுப்பர் எனப் புகட்டுகிருர் புராண முநி.

நாஸ்திகத்தைப்ருஹஸ்பதி ஏன் கற்பித்தார்? ப்ருகுவின் ஆதரவில் அஸுரர், வைதிக மார்க்கத்தைக் கடைபிடித்து பலமுள்ளவரானுர்கள். அவர் பலத்தை அகற்ற ஸுரகுரு, அஸுரகுரு வேடம் பூண்டார். "ஸ்வர்க்கம் நரகம் என்பது பொய். ஸ்வர்க்க ஸாதநமென கர்மாக்கள் சில மேதாவிகளால் பிழைப்புக்காகக் கல்பிக்கப்பட்டவை.

இறந்தவருக்கு ஶ்ராத்தம் செய்வது வீண். இங்கு வேறு ஒருவன் உண்ட அன்னம் இறந்து வேறிடத்திலுள்ள நம் பெற்ருேருக்கு எப்படிச் செல்லும்? மூன்ரும்மாடி அல்லது தேசாந்தரத்திலுள்ள பெற்ருேரை நாடி வேருெருவருக்கு உணவளித்துப் பெற்ருேர் வயிறு நிறைந்ததா கேள்! இங்கு ஸுகத்தை அனுபவிப்பதே ஸ்வர்க்கம், கஷ்டப்படுவதே நரகம்" என்று சுக்ரரைப் போலிருந்து சிவனிடம் தான் பெற்ற உபதேசம் இது எனக் கூறினர். இதனிடையில் சுக்ரர் ம்ருத ஸஞ்ஜீவிநியைப் பெற்று ஜயந்தியின் இஷ்டப்படிப் பல்லாண்டு ரமித்துவிட்டு சிஷ்யர்களிடம் வந்தார். ஆங்கொரு சுக்ரரைக் கண்டு திடுக்கிட்டார். சிஷ்யர்களே! ஏமாருதீர்கள்! அவர் அமர குரு! அவரைச் சிறைப்படுத்துங்கள்! என்ருர். ப்ருஹஸ்பதி தான் சுக்ரவேடம் பூண்டு உபதேசிப்பதற்கு முந்தியே "ஸுர குரு சுக்ரர் வேடம் பூண்டு வருவர். அவரைக் கட்டி அடியுங்கள்" என்று கூறினர். நாஸ்திகம்

கேட்டதனுலும் தன் குருவை ஸுரகுரு என எண்ணி அவர் சொல்லே மறுத்து அவரை ஹிம்ஸிக்கவும் ஆரம்பித்தனர். "நீங்கள் எனது சாபத்தால் பலத்தை இழப்பீர். தோல்வி அடைவீர்" எனக் கூறி மறைந்தார் சுக்ரர். கபட சுக்ரரும் தன் பணி முடிந்ததென வெளியில் சென்ருர்.

சுயநல முள்ளவர் பொய் கூறுவர். மாறு வேஷம் அணிவர். அதர்மம் செய்ய அஞ்சார். நாஸ்திகம் பேசுபவர் இங்கும் பரலோகத்திலும் பலத்தை இழப்பர் என்ற நீதியை நாடகம் போன்ற கதையால் விளக்குகிருர் புராணகர்த்தா.

**ஶ்ராத்தம் வீணு? ஸப்த ஸித்தர் :** ஶ்ராத்தம் செய்வது வீண் என ப்ருஹஸ்பதி அஸுரருக்கு உபதேசித்தாரல்லவா? அதைக் கண்டித்து உடனே ஶ்ராத்த மஹிமையை வர்ணிக்கிருர். அனைவர்க்கும் அன்னமளிப்பது பகவான் கடமை. நாம் ஶ்ராத்தத்தில் பிதா பிதாமஹன் ப்ரபிதாமஹன் என்ற மூவரை வரித்து ஹோமம் செய்து அன்னமளித்து பிண்டம் தந்து தர்ப்பணமும் செய்கிரேம். இது அவர்களிடம் போய்ச்சேர வஸு ருத்ர ஆதித்யர் விச்வே தேவர், ஶ்ராத்த ஸம்ரக்ஷக விஷ்ணு இவர்களைப் பகவான் நியமித்திருக்கிருர். மந்த்ர பலத்தால் அவர்கள் நமது மூதாதைகள் எந்த ஜன்மம் எடுத்திருக்கிருர்களோ அதற்கேற்ற உணவாக மாற்றி அளிப்பர். பித்ருக்களுக்கு அளிக்கும் ஶ்ராத்தம் பித்ருக்களுக்கு இன்பமளிப்பது மாத்திரமல்ல. அதைச் செய்பவனுக்கும் செல்வம் ஸந்ததி க்ஞானம் மோக்ஷம் முதலியவைகளைத் தருகின்றன. உதாரணம் :

குருக்ஷேத்ரத்தில் ஸ்வஸ்வரூபன், க்ரோதநன், ஹிம்ஸ்ரன், பிசுநன், கலி, வாக்துஷ்டன், பித்ருவர்த்தி என்று கௌசிகருக்கு ஏழு புத்ரர் இருந்தனர். அவர்கள் கர்க்கரிடம் கல்வி பயின்றனர். ஒரு துர்பிக்ஷ காலத்தில் குருவின் பசுவைக் கொன்று உண்பதென நினைத்தனர். பித்ருவர்த்தி பித்ருக்களுக்கு ஶ்ராத்தமாகச் செய்து புஜிக்கலாம் என்ருன். அவனே ஶ்ராத்தம் செய்தான். இருவர் விச்வேதேவர். மூவர் பித்ருவர்க்கம், ஒருவர் அதிதி என ஶ்ராத்தம் செய்து வயிருர புஜித்தனர். குருவினிடம் அந்த

பசுவைப் புலி கொன்றது என்றனர். அவர்கள் இறந்த பின் தசார்ண தேசத்தில் வேடர்களாகப் பிறந்தனர். ஸ்ராத்த மஹிமையால் பூர்வ ஜன்ம அறிவைப் பெற்றார்கள். தங்கள் தவறை உணர்ந்து உண்ணா வ்ரதமிருந்து உடலை விட்டனர்.

காளாஞ்ஜந மலையில் ம்ருகங்களாகப் பிறந்தனர். முற்பிறவி ஞ்யாபகம் அங்கும் தொடர அவ்வுடலையும் விட்டனர். சரத்வீபத்தில் சக்ரவாகங்களாகப் பிறந்து உடலை விட்டனர். மாநஸஸரஸ்ஸில் ஹம்ஸங்களாகத் தோன்றி அவ்வுடலையும் விட்டு ப்ராயோபவேசம் செய்தனர். இதில் மூவர், அணுஹன் என்ற பாஞ்சால ராஜன் பெண்களுடன் விளையாடிக் கொண்டிருப்பதைக் கண்டு அதை நினைக்க வண்ணம் உடலை விட்டனர். சிக்ருவர்த்தி ப்ரும்மதத்தன் என்ற ராஜ குமாரனாகவும் மற்றிருவர் புண்டரீகன் சுபாலகன் என்ற மந்த்ரிகளாகவும் பிறந்தனர். அந்த பசு ஸந்நதி என்ற ராஜ குமாரியாகப் பிறந்து பிரும்மதத்தனை மணந்தாள். இவ்விருவரும் பூந்தோட்டத்தில் உலவும் போது ஒரு புருஷ எரும்பு சிநங் கொண்ட தன் மனைவியை ஸமாதாநப் படுத்தியதைக் கண்டு அரசன் நகைத்தான். ஸந்நதி, ஏன் சிரித்தீர்? எனக் கேட்க "ஒரு முநிவர் ஸகல ஜீவராசிகளின் பேச்சும் எனக்குத் தெரியும்படியும் அதைக் கூறினால் நான் இறப்பேன்" என்றும் கூறினார். ஆதலால் அதைக் கூற முடியாதென்றான்.

அவ்வரசனால் கொல்லப்பட்ட பசு ராணியாகி வந்து "அதைச் சொல்லிவிட்டு இறந்துபோ" என்றாள். வேந்தன் ஒரு வாரத்தில் சொல்வதாகக் கூறி சிந்தை கொண்டான். நாளைக் காலை வரும் கிழவரால் கஷ்டம் நீங்கும் என கனவு கண்டார். மற்ற நால்வரும் ஏழை ப்ராம்மணனுக்குப் புத்ரர்களாகித் தவம்செய்ய அவரை உத்திரவு கேட்டனர். ஏழை கிழவரான என்னைக் காப்பது உங்கள் கடமை யல்லவா? என்றார். உடனே அவர்கள் ஒரு ஓலையை மன்னனிடம் தரும்படிக் கூறி வெளிக்கிளம்பினர். மன்னன் அதை ஆதரவுடன் வாங்கிப்படித்து ஏராளமான தநத்தை அவருக் களித்தான். விஷ்வக்ஸேநன் என்ற புத்ரனிடம் ராஜ்யத்தை அளித்து மந்த்ரிகளுடன் சேர்ந்து

அந் நால்வரையும் பின்தொடர்ந்து முக்திபெற்ருன். அவ்வோலையில் தங்களது முன் வரலாறும் தாங்கள் துறவு பூண்டு செல்வதும் விரும்பினுல் நீயும் வா என்றும் இருந்தது. அந்த ச்லோகத்தை இன்றும் ஶ்ராத்தத்தில் கூறுகிறோம். இதில் எத்தனை நீதி? எத்தனை தர்மம்? எவ்வளவு ருசி? மறக்க முடியுமா?

ஸப்தவ்யாதா: தசார்ணேஷூம்ருகா: காளாஞ்ஜநேகிரௌ
சக்ரவாகா: சரத்வீபே ஹம்ஸா: ஸரஸி மாநஸே. ॥

யேஸ்மஜாதா: குருக்ஷேத்ரே ப்ராம்மணு வேத பாரகா:
ப்ரஸ்திதா தீர்க்கம் அத்வாநம் யூயம் கிம் அவஸீதத. ॥

அபிச்ரவண ஆரம்பத்தில் இதைக்கூறினுல் பித்ருக்கள் அக்ஷய்யமான ஸந்தோஷம் அடைவர்.

**கர்ணார்ஜுனர்களின் முற்பிறவிகள் :** மஹா தேவன் ப்ரும்மாவின் ஐந்தாந்தலையைக் கிள்ளியபோது கோபத்திலும் துக்கத்திலும் அவர் நெற்றியில் வியர்வை உண்டானது. அதை அவர் பூமியில் வழித்தெரிய அது ஆயிரம் கவசமுள்ள ஒரு உக்ர புருஷனைத் தோன்றிற்று. இதைக் கண்ட பரமசிவன் வைகுண்டம் சென்று விஷ்ணுவுடன் யோசித்தார். சிவனைப் பின் தொடர்ந்து வந்த அவனை விஷ்ணு ஹுங்காரத்தால் அசைவற்று விழும்படிச் செய்தார். சம்பு பிக்ஷாடந மூர்த்தியாக வந்திருப்பதைக் கண்டு அவர் கபாலத்தில் தனது கரத்திலிருந்து ஆயிரம் ஆண்டு ரத்தம் பெருகும்படிச் செய்தார். பரமசிவத்தின் கடாக்ஷ வீக்ஷணத்தால் அது ஒரு நரனுனது. ஸ்தம்பித்தவனையும் இவனையும்பார்த்து நீங்கள் நரநாராயணர்களாக இருந்து துஷ்டர்களைச் சிக்ஷித்து சிஷ்டர்களை ரக்ஷியுங்கள் என்ருர் விஷ்ணு. நரன் பிரும்மாவின் வியர்வையால் உண்டான ஸ்வேதஜனுடன் போர் புரிந்து கவசங்களை அறுத்தெரிந்தான். இதைக்கண்டு ப்ரும்மா வருந்த, "இவன் இந்த்ர புத்ரனைத் தோன்றி ரக்தஜனை வெல்வான்" என்ருர் பகவான். ஆதலால் அவன் இந்த்ர புத்ரனை வாலியாகப் பிறந்தான். ரக்தஜன் சூர்ய புத்ரனை சுக்ரீவனைத் தோன்றினுன். அப்பொழுதும் போர் புரிந்தனர். இந்த்ரன் தன் புத்ரன் தோற்றனதைக் கண்டு வருந்த அடுத்த பிறவியில் உனது புத்ரனை

அர்ஜுநன், ஸூர்ய புத்ரனை கர்ணனை ஜயிப்பான் என்றார். ஒவ்வொரு பிறவியிலும் காம க்ரோதங்கள் நம்மைத் தொடர்ந்து வருகின்றன. 1. ஸ்வேதஜன்—ரக்தஜன், 2. வாலி—ஸுக்ரீவன், 3. அர்ஜுநன்—கர்ணன்.

ஸமுத்ர மதநம், தக்ஷ யக்ஞம், கர்ப்பிணி தர்மம், பதிநான்கு மநு, ப்ருது, ப்ரேத கர்மா, ஶ்ராத்தம், சந்த்ர வம்சம், வஸுதேவ, தேவகீ, யசோதை, நந்தன் இவர்களின் பூர்வஜன்ம ப்ரபஞ்ஜந சரிதம் இளன் பெண்ணானது, விஷ்ணு, ஜிநரூபியாகி த்ரிபுரனுக்கு ஆர்ஹதமதம் கற்பித்தது, பக்திலக்ஷணம், ப்ராம்மண லக்ஷணம், கோப கன்யகையான காயத்ரி ப்ரும்மாவை மணந்தது, மங்கணர் சரிதம், வ்ருத்ரவதம், ததீசி, அகஸ்தியர் முதலிய சரிதங்களை வர்ணிக்கிறார்.

*காயத்ரீ மஹிமை :* காயத்ரீ என்ற சந்தஸ்ஸில் அமைந்த மஹா மந்த்ர மிது. வேதத்திற்குத் தாய் இது. மூன்று வேதங்களிலிருந்து மூன்று பாதமாக அமைந்தது. வேதஸாரமானது. தேவராலும் மூவராலும் உபாஸிக்கப் படுவது. இருபத்து நான்கு அக்ஷரங்களால் ஆகியது. ப்ரும்ம ஸ்வரூபத்தை விளக்குவது. காயத்ரீ உபதேசமில்லாதவருக்கு வைதிக கர்மாவில் அதிகாரம் இல்லை. ஐந்து இடத்தில் நிறுத்தி ஆசாரத்துடன் ஜபிப்பவருக்கு ஸகல பாபத்தையும் அகற்றி ஸகல ஸித்திகளையும் தரும். அதிலுள்ள ஒவ்வொரு எழுத்தும் மஹாமஹிமை வாய்ந்தது. ஒவ்வொன்றிற்கும் தனித்தனி ரிஷி சந்தஸ் தேவதை பலன் முதலியன உண்டு. இதை நமது ஸந்த்யா நூலில் காண்க. உயர் குலத்தில் உதித்த ஓர் அந்தணன் சண்டாள ஸ்த்ரீயை மணந்து குழந்தைகளைப் பெற்றான். ஒரு நாள் அவள் அந்தணனுக்குக் கள்ளைக் கொடுத்தாள். பழக்க மில்லாததால் அவனதை மறுத்தான். அவள் பலாத்காரமாக அவன் வாயில் ஸுரையை விட அங்கிருந்து ஒரு தீ ஜ்வாலை கிளம்பி சண்டாள ஸ்த்ரீ அவள் குழந்தை அனைவரையும் எரித்தது. துக்கத்தால் வாடி ஒரு முநிவரை ஏனப்படி நேர்ந்தது எனக் கேட்டான். காயத்ரியால் உனது உடலில் உண்டான தேஜஸ், ஸுரை சென்றவுடன் வெளிக் கிளம்பிற்று. அவர்களையும் எரித்

தது. மறுபடி நீ அதைப் பெற விரும்பினால் நதி ஸ்நாநம் சாந்தராயண தபஸ் புநருபநயநம் முதலியவைகளைச் செய்துகொள் என்றார். என்னே காயத்ரியின் மஹிமை!

கருடன் தனது தாயை அடிமைத் தனத்திலிருந்து விடுவிக்க கத்ரு சொற்படி அம்ருதம் கொண்டுவர ஸ்வர்க்கம் சென்றார். பசிக்கு உணவு வேண்டுமென தாயை வேண்ட "ப்ரஷ்டனாக இருந்தாலும் ப்ராம்மணனை உண்ணாதே. நிஷாதரைச் சாப்பிடு" என்றாள். அங்ஙனம் அவர்களை உண்ணும்போது அவர் தொண்டையில் சூடு தோன்றிற்று. அவனைக் கக்கி நீ யார்? என்றார். அவர் தான் ப்ராம்மணன் என்று கூற அவரை வணங்கி அவர் பந்துவுடன் வெளியில் அனுப்பி மற்றவரைப் புஜித்தார். மறுவேளை உணவிற்கு தந்தை சொற்படி ஒரு யானையையும் ஆமையையும் கால்களால் தூக்கி ஒரு மரத்தில் அமர்ந்தார். அந்த பாரத்தால் கிளை முறிந்து, அதில் பல்லாயிரம் வாலகில்யர் என்ற முநிவரிருக்க அக்கிளையை மூக்கில் தூக்கி ஜாக்கிரதையாக வைத்து அவர்களைக் காப்பாற்றினர்.

இந்த ப்ராம்மண பக்தியைக் கண்டு மகிழ்ந்த மஹாவிஷ்ணு, கருட! உனக்கு வேண்டிய வர்த்தைக் கேள் தருகிறோம், என்றார். ஐயா! நான் பிறரிடம் பிச்சை வாங்கும் துர்பலனல்ல. நாம் தருகிறோம், வேண்டுமானால் நீர் கேளும் என்றார் கருடன். அப்படியானால் நீ எனக்கு வாஹநமாயிரு என்று கூறி அவனைக் கைக்கொண்டார். காயத்ரியைச் செய்த ப்ராம்மணனைக் காப்பாற்றியதற்காக ஸந்தோஷம் அடைந்து வரம்தர முன்வந்தார் பகவான். ாயத்ரியைச் செய்பவரிடம் எவ்வளவு அன்பு கொள்வார் எனக் கூறவேண்டுமா?

**பித்ரு பக்தனுக்கே பகவத் தர்சநம் :** நரோத்தமன் எனும் அந்தணன் ஸகல தர்மங்களையும் அநுஷ்டித்தான். பெற்றோரிடம் மாத்திரம் அன்பில்லை. அவர் சொல்லை மீறி தீர்த்த யாத்ரை சென்றான். ஈரமான வஸ்த்ரம் அவன் போகும் இடமெல்லாம் தலைமீது குடைபோல் வரும். ஒருநாள் அவன் வாயைத் திறந்து ஆகாசத்தைப்

பார்த்தான். தற்செயலாக ஆங்கு பறந்து சென்ற கொக்கு அவன் வாயில் எச்சமிட்டது. கோபத்துடன் அதை எரித்தான். தனக்குத் தவம் சித்தியாகிவிட்டதென கர்வங்கொண்டான். அன்றுமுதல் ஈரவஸ்த்ரம் அவன் தலைமீது வருவதில்லை. வருந்தினான். மூகன் எனும் சண்டாளனிடம் சென்று தர்மத்தைக் கேள் என்ற ஓர் அசரீரி தோன்றிற்று. அவனிருப்பிடம் தெரியாமலிவன் தவிக்க ஒரு கிழ ப்ராம்மணன் வழி காட்டினார். பெற்றோர் பணிவிடை செய்யும் மூகனைக் கண்டு தர்மத்தைக் கூறென்றான். பெற்றோர் பணிவிடை முடிந்தபின் கூறுகிறேன் என்றான். பூஸுரனும் தவஸியுமான என்னைவிட பெற்றோர் பூஜை பெரியதோ என்றான் நரோத்தமன். ஐயா! நீர் குடை போன்ற ஈரவஸ்த்ரம் தலை மீது வரும் பாக்யத்தை இழந்தீர். அசரீரியின் தூண்டுதலாலிங்கு வந்தீர். பெற்றோர் பணிவிடையே எனக்கு முக்யம். அதை முடித்து வரும்வரை இஷ்டமிருந்தால் காத்திரும் என்றான் சண்டாளன். அங்கிருந்து மஹாவிஷ்ணு கிளம்பி வருவதைக் கண்டு பிராம்மணன் ஆச்சர்யமடைந்தான். சுத்தனை எனக்கில்லையா? அவர் தர்சநம்! என ஏங்கினான்.

உன் சித்தம் சுத்தமாகவில்லை. பதிவ்ரதையிடம் தர்மம் கேட்டுவா. தர்சநம் கிடைக்கும் என்றார் விஷ்ணு. பதி பணிவிடையில் ஈடுபட்ட ஸதியைக்கண்டார். தனக்கு தர்மம் கூறாவிடில் சபிப்பேன் என்றார். அவள் தர்ம துலாதாரனிடம் போம் என்றாள். கிழப்ராமணன் அவரை அங்கும் அழைத்துச் சென்றார். அவன் எனக்கு வ்யாபாரம் பலமாக இருப்பதால் தர்மாகரன் என்ற வைச்யரிடம் போய்க் கேளும் என்றான். அவன் ஸத்யஸந்தன். நெறி தவறாதவன். ஒரு ராஜகுமாரன் மிக அழகான இளம் மனைவியை அவனிடம் விட்டுச் சென்றான். அவள் கற்பைக் காக்கவேண்டுமானால் தனக்கும் தன் மனைவிக்கும் இடையில் அவள் படுத்திருக்க வேண்டும் என்றானவன். ராஜகுமாரன் அதற்கிசைந்தான். தூக்கத்தில் புரண்டு அவள் தன்மீது படும்போது தாய்போல் நினைத்தான். சிறிதும் சித்தம் மாறவில்லை. உலகம் பல்வகை. சிலரிதை நம்பமுடியாமல் தூஷித்தனர்.

இதைக் கேட்ட தர்மாகரன் தீயில் உடலை விட்டான். தேவர்கள் அவனை எழுப்பி நீ சுத்தன் என்றனர். அபவாதம் சொன்னவர் குஷ்டிகளானூர். ராஜ குமாரன் வந்து வியந்து மனைவியை அழைத்துச் சென்றுன். அத் தகைய வைச்யனிடம் சென்று தர்மத்தைக் கூறென்றுன் வேதியன். அவன் எனக்கு ஒழிவில்லை. அபாயை என்ற ஸதியிடம் செல் என்றுன். அங்கு வீற்றிருக்கும் மஹா விஷ்ணுவை வணங்கி இத்துணை நாள் எனக்கு தர்சநம் தராதது ஏன் என்றுர். "நீ ஸ்வதர்மமான பெற்றேர் பணிவிடையை மறந்து மற்ற புண்யம் செய்தாய். நானே அசரீரியாக இருந்து கூறி அந்தணனுகி வழியும் காட்டினேன். ஸ்வதர்மம் செய்தவரைத் தர்சநம் செய்த தால் உன் பாபம் அகன்றது. எனது ப்ரீதியும் உண் டானது. அவர்களைப்போல் நீயும் கடமையைச் செய்து எனது ஸான்னித்யம் பெறு" என்றுர் விஷ்ணு.

**கற்பு :** புருஷர்களுக்கு காயத்ரீ ஜபம்போல் பெண் களுக்குக் கற்பே நற்கதி அளிக்க வல்லது. இயற்கை யில் இந்த்ரியங்கள் வெளியிலேயே செல்வது போல் பெண்களுக்கு காமத்திலும் வம்பிலும் மநம் செல்வது இயற்கை. புலனை அடக்குபவன் மநம் ஒருமைப் பட்டு நற்கதி பெறுவான். காமாதிகளை அடக்கி பணிவிடை எனும் தவம் செய்யும் பெண், பேய் என்றுல் மழை பொழியும். காய் என்றுல் கதிரவன் காய்வான். அத் தகைய கற்பைக் காத்தால் தர்மத்தைக் காத்ததாகும். அதற்கேற்றமுறையில் ஆண் பெண்கள் நடக்கவேண்டும். பெண், மநதை உருக்கக் கூடிய நெருப்புக் குடம். ஆண், எளிதில் எரியக்கூடிய நெய்க் குடம். இரண்டையும் தனித்து ஓரிடத்தில் வைத்தால் ஆபத்தே. இருவரும் வ்யபிசாரமின்றி வாழவேண்டும். ஸ்த்ரீ, கற்பைஇழந்தால் புருஷன் குலம் கெடும். கோத்ரம் அழியும். சரிவர ஶ்ராத்தம் பலனைத் தராது. புத்ரன் செய்யும் ஶ்ராத்தத் தில் சொந்த தந்தை வ்யபிசார தந்தை இருவரும் பயன் பெறுர்.

**கற்பரசி ஸைப்யை அநஸூயை:** பண்டித கௌசிகர் எனும் முனிவர் முன்வினையால் குஷ்டரோகியாகி துன் புற்றுர். சைப்யாஸதி என்ற அவர் மனைவி மஹா பதி

வ்ரதை. குஷ்டரோகியை ஸுந்தர புருஷன் என மதித்து அவர் நினைத்ததை எல்லாம் செய்துவந்தாள். அவர் ஒரு தாஸியை விரும்பினர். வேசி இவரை விரும்புவளா? சைப்யை அவளிடம் சென்று கெஞ்சிக் கூத்தாடி அவள் இசையும்படிச் செய்தாள். ஒருவரு மறியாதபடி வந்து போகும்படி அவள் கூறினள். நோயாளியான பதியைத் தோளில் சுமந்து நள்ளிரவிலே கிளம்பினள். நாச்சந்தியிலே கழுவேற்றப்பட்ட மாண்டவ்யர் தவித்துக்கொண்டிருந்தார். கௌஶிகர் காலில் புழு கடிக்க, அவர் காலை உதறினர். அது மாண்டவ்யர் தலைமீது பட்டது. கழுவு துன்பம் போதாதா? புழுத்த காலால் உதையும் படவோ என க்ஞானக்கண்ணுல் கவனித்தார். ஆஹா! சைப்யையின் வேலை இது! ஸூர்யன் உதயமாகும் போது இவள் மாங்கல்யத்தை இழப்பாள் என சபித்தார். அவள் பல முறை வேண்டியும் பயனில்லை. நான் கற்புள்ளவளானல் கதிரவன் உதிக்காமலே இருக்கட்டும் என்ருள். நாட்கள் பல வாரங்கள் பல சென்றன. பானு உதிக்கவில்லை. ஹோமமில்லை. தேவர்க்கு உண வில்லை. ஸூர்ய காந்தி இன்றி உலகம் நாறிற்று. அவனை உதிக்கும்படிச்செய்ய அமரராலும் முடியவில்லை. மற்ருெரு கற்பரசி மூலமே ஸூர்யன் உதிப்பான் என அநஸூயை என்ற அத்ரி மனைவியை அழைத்து வந்தனர். ஸைப்யைக்குத் தைர்யம் கூறி திநகரனை உதிக்கச் செய்தாள். கௌகிகர் கீழே விழுந்து உயிரிழந்தார். எனக்குக் கற்பிருந்தால் முனிவர் நோயற்ற மன்மதனுக எழுந்திருக்கட்டும் என்ருள் அநஸூயை. முனிவர் எழுந்து அனைவரையும் வரவேற்று உபசரித்தார். கற்புக்கீடான தவம் வேறுண்டோ?

ஆசை இன்மை, தீர்த்த ராஜன், ருத்ராக்ஷம், கணேச பூஜை முதலியவைகளை ரஸமான கதைகளால் விளக்கி ஸ்ருஷ்டிகண்டத்தை முடித்தார் முனிச்ரேஷ்டர்.

**பூமி கண்டம், ப்ரஹ்லாதன் முற்பிறவி:** குணத்தாலும் கர்மாவினுலுமே ஜாதி அமைக்கப்படுகிறது. ஆனல் ஒரு பிறவியில் எவ்வளவு நல்ல குணமிருந்தாலும் ஜாதி மாறுவதில்லை. அரக்கர் குலத்திலே பிறந்தான் பிரஹ்லாதன். ஆனல் பரம பாகவத உத்தமனுக இருந்தான். கர்மாவும் குணமும் ஒருபாலிருக்க கடைசியில்

எதை நினைத்து உயிரை விடுகிறேமோ அதே கிடைக்கும் என்பது விதி. ப்ரஹ்லாதன் முற்பிறவியில் சிவசர்மா வின் ஐந்தாம் புத்ரன். ஸோமசர்மா என்ற ப்ராம்மணேத் தமன், தந்தை புத்ரர்களுக்குப் பித்ருபக்தி எவ்வளவென கண்டறிய பல அடாத கார்யங்களைச் செய்தார். அதைக் குற்றமாகக் கொள்ளாமல் புத்ரர் தம் கடமையைச் செய்தனர். தாஸியுடன் தான் தீர்த்தயாத்ரை செல்வ தால் மற்றோர் புத்ரன் கொண்டுவந்த அம்ருதத்தை ரக்ஷி என ஸோமசர்மாவிற்கு உத்திரவிட்டார். தபோ பலத்தால் அதை மறைத்துவிட்டு உடனே அம்ருதத்தைத் தா என்றார். அதைக் காணவில்லை. என் செய்வான்? கதறினன். சிந்தை நொந்தான். உண்மையாக யான் பித்ருபக்தனுக இருந்தால் அம்ருதத்துடன் அதை அப ஹரித்தவர் என் முன்னே வரட்டும் என்றான். அந்த ஸத்யம் பிதாவை அம்ருதத்துடன் அவன் எதிரே நிருத்திற்று.

பக்தியைக் கண்டு களித்தார். தழுவி ஆசீர்வதித் தார். தந்தை நற்கதி அடைந்தார். ஸோமசர்மா இல் லறத்தை வெறுத்தான். காட்டிலே சென்று கடுந்தவம் புரிந்தான். உடலை விடும் ஸமயம் நேர்ந்தது. அரக்கன் அரக்கன் என அருகில் உள்ளோர் உறக்கக் கூவினர். ராக்ஷஸன் என்று நினைத்து வாயாலும் கூறிக்கொண்டே உயிரை விட்டார். "யம்யம்வாபி" என்ற கீதை சொற் படி ராக்ஷஸனை நினைத்து இறந்ததால் ராக்ஷஸ வம்சத் திலே பிறந்தார். இறக்கும்பொழுது பகவன் நாமாவைக் கூறவேண்டும். நினைக்கவேண்டும். அருகில் உள்ளோர் கூறினல் அது காதில் விழும். இறப்பவருக்கு ப்ரக்ஞை இருந்து கூறினலும் நினைத்தாலும் அஜாமிளனைப்போல் நற்கதிபெறலாம்.

**வேதாந்த கதை:** நீதி கர்மா பக்தி ஆசாரம் முதலியவைகளைக் கதை மூலமாக விளக்குவது போல் கடினமான வேதாந்தத்தையும் விளக்குகிறது புராணம். புதல்வர்களைப் பரிகொடுத்த திதிக்குக் கச்யபர் கூறினர். ஆத்மா அழிவற்றது. அது புகுந்த உடல் இறக்கும். ஆத்மா என்ற அரசனுக்கு க்ஞாநம் த்யாநம் என்ற இரு மந்திரிகள். ஒரு ஸமயம் ஐவர் கூடி பேசுவதைக் கண்டு

அவர்கள் யார் என விசாரிக்க அமைச்சருக்கு ஆக்ஞை இட்டான். அதைப்பற்றி உமக்கென்ன? அவருடன் சேர்ந்தால் மோஹன் எனும் பகைவன் உடல் எனும் பந்தத்துடன் கர்ப்ப சிறையில் தள்ளுவான். த்யாநம் எனும் நண்பனுடன் சேர்ந்து பேசாமலிரு என்றான் க்ஞாநன். அந்த ஐவரும் புத்தி எனும் தூதியை அனுப்பி க்ஞாந த்யாநர்களை விட்டுத் தம்முடன் சேரும்படி வேண்டினர். ஆத்மராஜன் மந்த்ரிகள் சொல்லை மதியாமல் அவர்களுடன் சேர்ந்தான். பஞ்சபூத சரீரமெனும் அழகிய வீடும் இந்த்ரிய த்வாரமெனும் ஜன்னல்களும் கர்மேந்த்ரிய மெனும் கிங்கரரு மிருக்கக் கண்டான்.

அதில் ஆசை தோன்றிற்று. அரசே! சிறுகக் கட்டிப் பெருக வாழவேண்டும். சுக்ல சோணித வழியாக தாயின் கருவெனும் சிறிய வீட்டிற்கு வாரும் என்றனர். மோஹ வலையில் சிக்கிய ஆத்மா அங்கு புகுந்தான். மலமூத்ர நாற்றம் ஜாடராக்நி புழுக்கள் கடி இந்த துன்பம் ஸஹிக்க முடியவில்லை. நண்பர் சொல்லை மறுத்தேனே என வருந்தினன். ப்ரஸவவாயு கருவைத் தலைகீழாகக் கவிழ்த்தது. இவனுக்குக் கிடைத்த உடலெனும் வீடு இருபத்தைந்து அங்குல முள்ளது. இவன் வரும் வழியோ இருபத்தி நான்கே அங்குலம். வாயு தள்ள வாயற்படி நெருக்க மிகத் துன்பம் அடைந்தான். பூமியில் விழுந்தான். காமம் கோபம் லோபம் மதம் மாத்ஸர்யம் என்ற வீரருடன் மோஹன் இவரைச் சூழ்ந்துகொண்டான். நான் என்னுடையது என்ற பாசத்தால் கட்டி ஸம்ஸார சிறையில் அடைத்தான். புத்ரசோகம், நோய், கவலை, பசி, தாஹம், கிழத்தனம் முதலியவைகளை அனுபவித்தான். விடுபட வழி தெரியவில்லை. கடவுளை நாடிக் கதறினன். தற்செயலாக வஸ்த்ர மணியாத ஒரு புருஷனைக் கண்டு காலில் விழுந்து கரை ஏற்ற வேண்டினன். வைராக்ய மென்ற அவர் தன் ஸோதரனை விவேகனை இவரிடம் அனுப்பினன். அவர் ஶாந்தி எனும் மனைவி, ஸ்வதர்ம மென்ற புதல்வன், தாரணை புத்தி என்ற கன்யகை இவர்களுடனும் மோக்ஷ மெனும் குருவுடனும் ஆத்மாவிடம் வந்தார். அவர் அருளால் சமதமாதி வீரரும் க்ஞாந த்யாந மந்த்ரிகளும் இவரிடம் வர, ஆத்மராஜன் தர்ம

ஸேனையுடன் கிளம்பி அக்ஞான மோஹாதி பகைவரை வென்று மோக்ஷ ஸாம்ராஜ்யத்தைப் பெற்றார். இதை ப்ரபோத சந்த்ர உதய நாடகமாக எழுதினர் ஒரு கவி.

யயாதி, ச்யவனர் குஞ்ஜலன், ரேவாஸங்கம், ஸுபாகு, அசோக ஸுந்தரி, விஹுண்டன், தானபலன், இக்ஷ்வாகு, பன்றி யுத்தம், பன்றியின் பூர்வஜன்ம கோபிலன், கம்ஸன், தீர்த்த மஹிமை, அசூன்ய சயன வ்ரதம், க்ருஷ்ண அஷ்டோத்ர சதநாம, நஹுஷ, ஹுண்டாஸுர யுத்தம், காமோதா இது முதலியவைகளுடன் பூமிகண்டம் பூர்ணமாகிறது.

**ப்ரும்ம கண்டம், புராண பலன் :** ஸ்ரீ தரன் என்ற அரசன் முற்பிறவியில் பற்பல புண்யங்களைச் செய்து ராஜ்யத்தைப் பெற்றான். ஜலத்தில் வீழ்ந்து இறந்த ஒரு குழந்தையைக் காப்பாற்றாத பாபத்தினால் புத்ர பாக்யம் இல்லை, வ்யாஸர் சொற்படி புராண ச்ரவணம் செய்து புத்ர பாக்யம் பெற்றான். க்ருஷ்ணன் அவதரித்தது ஆவணிமாத க்ருஷ்ணாஷ்டமி. ராதாதேவி மார்கழி சுக்ல அஷ்டமியில் அவதரித்தாள். இரண்டு அஷ்டமிகளிலும் உபவாஸமிருந்து பகவானை ஆராதிப்பவர் வைகுண்டம் செல்வர்.

**மூதேவி விவாஹம் :** பாற்கடலில் முதல் தோன்றியவள் மூதேவி. அவளுக்கு ஜ்யேஷ்டா என்று பெயர். லக்ஷ்மியைப் பகவான் மணக்கும் பொழுது அவள் ஓ என்று ஓலமிட்டாள். யாது காரணமென அனைவரும் வினவ, மூத்தவளிருக்க இளையவள் மணப்பது முறையோ என்றாள். அந்தமில்லா அணங்கை ஆரே விரும்புவர் ? தவப்பயனைத் தக்ஷிணையாகத் தந்து உத்தாலக முனிவருக்கு அவளை மணம் செய்வித்தார் பகவான். அவளை அழைத்துக்கொண்டு ஆச்ரம வழியாகச் சென்றார் முனிவர். வேத த்வனியைக் கேட்டு வீரிட்டு அழுதாள். ஏனழுகிறாய் என்றாரவர்.

வேதத்வனி தேவபித்ருபூஜை ஔபாஸனம் வைச்வதேவம் முதலியவை தனக்குப் பிடிக்காதவை என்றாள் மூதேவி. உனக்குப் பிடித்த இடத்தைக் கூறு என, சாணமிட்டு கோலம்போடாதவீடு மணிசப்தம் கேட்காத இடம்

ஸதிபதிகள் சண்டையிடும் இடம் ஈறவஸ்த்ரத்துடன் நெற்றிக்கிடாமல் தலையை விரித்திருப்பவர் நகத்தைப் பல்லால் கடிப்பவர் மணல் உப்பு இவைகளால் பல்தேய்பவர் இத்தகைய இடமே எனக்குப் பிரியமான இடம் என்றாள். ஆனால் அரசமரத்திலிரு. உனக்கேற்ற இடம் தேடி வருகிறேன் என்று சென்ற உத்தாலகர் இன்னும் திரும்பவில்லை. ஆண்டுகள் பலசென்றன. மறுபடியும் வைகுண்டம்வரை கேட்கும்படி ஜ்யேஷ்டை அழுதாள். லக்ஷ்மீபதி அங்குவந்து நாங்களிங்குவந்த திநமான சனிக்கிழமை தவிர மற்றதிநங்களில் அச்வத்த மரத்தைத் தீண்டுபவரைப் பிடித்துக் கொள். அவர் புண்யமே உனக்கு உணவாகும் என்று ஸமாதாநம் செய்து சென்றார். ஆதலால் சனிக்கிழமைத்தான் தொட்டுபூஜிக்கலாம். குறைந்தது ஏழு ப்ரதக்ஷிணம் செய்யவேண்டும் அச்வத்த மரத்தை.

**வரலக்ஷ்மீ வ்ரதம்:** த்வாதசி யன்று வெள்ளிக்கிழமை லக்ஷ்மி அவதரித்தாள். அன்று அவளைப் பூஜிப்போர் லக்ஷ்மீ கடாக்ஷம் பெறுவர். விஷ்ணு பக்தனை பத்ரச்ரவஸின் மனைவி உத்தமபதிவ்ரதை. ஸுரசந்த்ரிகா என்ற அவள் கற்புக்கு மஹிழ்ந்தாள் கமலாஸநீ. கிழ்வி வேஷம் பூண்டு லக்ஷ்மி விரதத்தை அவளுக்குக் கூற வந்தாள். முற்கர்ம வினையால் அவளை அலக்ஷ்யம் செய்து கன்னத்திலும் அடித்தாளவள். சியாமபாலா என்ற ராஜகுமாரி அவளை ஸமாதாநப் படுத்தி விரத உபதேசம் பெற்றாள். லக்ஷ்மியைப் பூஜிக்காத அரசனும் ராணியும் விரைவில் ராஜ்யத்தை இழந்து ஏழையாயினர். மாலாதரன் எனும் சக்ரவர்த்தியை மணந்த சியாமபாலா விரத மஹிமையால் சிறந்த செல்வம் பெற்றாள். பெற்றோர் நிலையை உணர்ந்து ஒரு குடம் நிறைய ஸுவர்ணம் தந்தாள். அது அனைத்தும் கரியாகிவிட்டது. இதை அறிந்த மகள் தாயை வரலக்ஷ்மீ பூஜை செய்யும்படி கூற, அவளும் அதனால் முன்போல் ராஜ்யத்தைப் பெற்றாள்.

ப்ராம்மண பாத மஹிமை: ஸாளக்ராம தீர்த்த மஹிமை கார்த்திகை மஹிமை துளஸீ நெல்லி மஹிமை பகவன் நாம மஹிமை, நாமா பராதம் ஸுந்தரனெனும் பஞ்சமன் ஸுதர்சநன் சுநச்சேபன் இவர்களது சரிதம் முதலியன ப்ரும்ம கண்டத்தின் கடைசி பாகங்களாம்.

**பாதாள கண்டம்:** இதில் பெரும் பாகம் ஸ்ரீ ராம் அச்வமேதமாம். அச்வமேத மென்பது சக்ரவர்த்தி செய்யவேண்டிய யாகம். ப்ரும்மஹத்தி முதலிய பாபங் களை அகற்ற வல்லது. சிவபக்தனும் ப்ரும்ம குலத்தில் உதித்தவனுமான ராவணனைக் கொன்ற பாபம் அகல ஸ்ரீராமர் அச்வமேதயாகம்செய்தார். அதில் யாகக்குதிரை பூப்ரதக்ஷிணம் செய்துவந்தது. காவலாளிகள் கர்த்தாவின் பெருமையைக்கூறி காணிக்கை அளியுங்கள். சக்தி இருந் தால் குதிரையைக்கட்டி போருக்கு வாருங்கள் என்றனர்.

**ச்யவநர்:** ப்ருகு முனிவரின் மனைவி கர்ப்பிணியாக இருந்தபோது தமனன் எனும் அரக்கன் அவளைத் தூக்கிச் செல்ல ஆரம்பித்தான். வயிற்றிலுள்ள குழந்தை நழுவி விழுந்து தவ வலிமையால் தமநனை எரித்தது. நழுவி விழுந்ததால் அவருக்கு ச்யவநர் என்று பெயர். அவர் ஆழ்ந்த தவத்தில் அமர்ந்தார். அவர் மீது புத்து தோன் றிற்று. வேட்டையாட கானகம் சென்ற சர்யாதியின் மகள் புத்து சந்தின் வழியாகக் கொம்பை விட்டு முநிவர் கண்ணைக் குத்திவிட்டாள். அரசனைச் சார்ந்த அனைவர்க்கும் ஜல மலம் தடைபட்டது. வயிறு பெருத்தது. நோய் பொருக்க முடியவில்லை.

முநிவர்க்குச் செய்த அபசாரமே காரணம் என உணர்ந்தனர். முநிவர் திருவடியைச் சரணமடைந்தனர். என் கண்ணுக்குப் பதில் உன் பெண்ணைத் தா என்றார். ராஜ கன்யகையை ஏழைக் குருட்டுக் கிழவனுக் களிக்க அரசன் விரும்பவில்லை. நோயோ பொருக்கமுடிய வில்லை. பெண்ணைத் தந்தார். நோய் அகன்றது. யாதொரு இன்பத்தையும் விரும்பாமல் முநிவர்க்கு முக் கரணங்களாலும் பணிவிடை செய்தாள். இவள் கற்பை விளக்க அச்விநீ தேவர்கள் ச்யவநரைத் தங்களைப் போல் செய்து மூவரும் ஒன்றாக நின்றனர். உன் பதியை அழைத்துக்கொள் என்றனர். நான் கற்புள்ளவளானால் என் பதிமீது இம்மாலை விழட்டும் என்று மாலையை எறிந் தாள். கணவன் கழுத்தில் விழுந்தது. எங்களைப் போன்ற அழகும் இளமையும் ஸ்திரமாக இருக்கட்டும் என்று அச்விநி தேவர் கூறினர். அதற்குக் கைம்மாறு யாது செய்வதென வினவினார் முநிவர். யாகத்திலே ஒரு பாகம்

தந்தருளும் என்றனர். சர்யாதியை ஒரு வேள்வி செய்வித்து அதில் அச்விநிகளுக்கும் ஸோமரஸம் தந்தார். கோபங்கொண்ட இந்த்ரன் வஜ்ராயுதத்தைத் தூக்கினான். கை அசையாது நிற்கும்படிச் செய்தார் ச்யவநர். அவர் சக்தியைக்கண்ட அமராதிபன் வணங்கி அவரிஷ்டத்திற்கு இணங்கினான்.

அத்தகைய ச்யவநர் ராம பக்தியிலீடுபட்டு யாகத்திற்குச் செல்ல விரும்பினார். ராமபக்த சிகாமணியான அநுமான் ச்யவநரைத் தோளில் தூக்கிச் சென்று ராமனிடம் விட்டு குதிரையைக் காக்க வந்துவிட்டார். ஸுரதன் என்ற அரசனது குமாரன் சம்பகன். அவன் அச்வமேதக் குதிரையைக் கட்டிவிட்டான். இவன் பக்தியினால் பரமசிவனைப் பரவசப்படுத்தி தன் நகர் ரக்ஷகனாக்ச் செய்தவன். ராமனது குதிரையைக் காணிக்கையுடன் அனுப்பு என்றார் சிவன். ஸ்வதர்மத்தால் அவரை அர்ச்சிப்போம். அதனால் ஸந்தோஷமுள்ள ப்ரபு இங்குவந்து தர்சநம் தரட்டும். பின்னர் ராம தாஸனாவோம் என்று ராம கிங்கரருடன் பல நாள் கடும்போர் செய்தான். சிவனும் போரில் கலந்து பனிரண்டு நாள் யுத்தம் செய்தார். சம்பகன் ராமநாம பலத்தால் அனைவரையும் மூர்ச்சிக்கும்படிச் செய்தான். இதை அறிந்த ராகவன் ரணகளம் வந்து வெற்றி வீரனை ராஜகுமாரனைக் கண்டார். மஹா வீர! உன் தாய் யார்? ராமன் என் தாய்! உன் பிதா? ராமசந்த்ரன். ப்ராதா? ராமன். உன் தோழன்? ராகவேசன். எல்லாம் ராமனா? ஆம். ராமனைத் தவிர வேறொன்றையும் அறியேன் என்ற இருவர் வாதமே "மாதா ராமோ" என்ற சுலோகமாயிற்று. காணிக்கையுடன் குதிரையை அளித்து சம்பகன் தாஸனாக வந்தான். இங்ஙனம் பற்பல விசித்ரமான கதைகள் உண்டு.

குசலவர்கள் வால்மீகி ஆச்ரமத்தில் வந்த ராமர் குதிரையைக் கட்டி எல்லோரும் வியக்கும்படி மஹா வீரர்களையும் தோற்கடித்தனர். மூர்ச்சையாகிக் கிடந்த ஆஞ்ஜநேயர் பரத சத்ருக்ந புத்ரர் அனைவரையும் ஸீதாதேவி தன் கற்பினால் எழுப்பினாள். இந்த கதையையே பவபூதி உத்தர ராமசரித நாடகமாக எழுதினார். வால்மீகி இயற்றிய ஸ்ரீராம சரிதத்தை லவகுசர் ஆங்காங்கு பாடி

எல்லோரையும் மகிழ்வித்தனர். ஸ்ரீ ராமனது அச்வமேத மஹா மண்டபத்திலும் பாடினர். ஸ்ரீ ராமன் இவர்கள் யார் என்று கேட்டார். கர்ப்பிணியான ஸீதையை நீ வநத்தில் விட்டபோது, நான் அவளை ரக்ஷித்தேன். இவர்கள் உனது குமாரர்கள். வேத விதிப்படி ஸகல கர்மாக்களையும்செய்து ராமாயணத்தைக்கற்பித்தேன். வருணன் இவர்களைத் தன்னிடம் அழைத்துச் சென்று ஆநந்தித்தான். பல நாட்களாகியும் அவர்களை அனுப்பாததால் நானங்கு சென்றேன். இந்த்ராதி தேவர், "ஸீதை உத்தம பதிவ்ரதை. அவள் கர்ப்பிணியான பெண் கிளியைக் கூண்டிலடைத்து ராமநாமத்தைக் கேட்டாள். ஆண்கிளி, கர்ப்பிணியான் உன்னைக் கணவன் த்யாகம்செய்வான் என்று கூறி தீயில் வீழ்ந் திறந்தது. அதே வண்ணுகை வந்து அபவாதம் கூறிற்று. உத்தமி ஸீதையையும் லவகுசர்களையும் ராமன் ஏற்கட்டும்" என்று கூறினுர்கள் என்ருர் ராமாயண கவி.

ஸ்வர்ண ஸீதையை விட்டு நிஜ ஸீதையை ஏற்று அச்வமேதம் ஆரம்பித்தார் ஸீதாபதி. அவர் கை பட்டவுடன் குதிரை வீழ்ந்தது. திவ்ய புருஷன் எழுந்து "ராம! நான் வேதியன். கண்மூடி மௌனியாகி கபடமாகத் தவம் செய்தேன். அருகில் வந்த தூர்வாஸரை வரவேற்காததால் அவர் என்னை அச்வமாக்கினுர். பணிந்து வேண்டிய பின் "ராமர் கரம் பட்டவுடன் நற்கதி" என்று சென்ருர். இதைக்கூறி ஸ்வர்க்கம் சென்ருன். இறந்த குதிரையால் வேள்வி நடவாது. மறுபடி குதிரை பூ ப்ரதக்ஷிணம் செய்வதா? என்று எல்லோரும் திகைத்தனர். அதர்வ வேத நிபுணரான வஸிஷ்டர், அச்வத்தின் வபைக்குப் பதில் கற்பூரம் ஏற்றும்படி கூறினுர். அமரர் அனைவரும் ஆநந்தமாக அதை ஏற்க யாகம் பூர்த்தியானது.

அச்வமேத பலனைத் தரத்தக்கது கற்பூரம் ஏற்றுதல், என்று அன்றுமுதல் இன்றளவும் ஆலயங்களிலும் வீடுகளிலும் அந்த பழக்கம் கை கொள்ளப்பட்டது.

கிருஷ்ணன் மஹிமை, பூஜை பலன், வைசாக ஸ்நாநம், மஹீரதன், விபீஷணன் சரிதம், பஸ்பமஹிமை, சிவ ஸ்தோத்ரத்தைப் பூஜித்த ப்ராம்மணன் நாயாகி பஸ்மாவால் நற்கதிபெற்றது. பஞ்சமேட்ரன், இக்ஷ்வாகு ப்ராம்மணன்,

அக்கிசிகன், விரத்ருதன், சோணன், சங்கராத்மா, ஸ்ரீசைலம் இந்தகதைகள் ரஸமானவை. ஸ்ரீராமர், புராணம்கேட்கும்போது சாகாவரம் பெற்ற அஸுரன் படையுடன் போருக்கு வந்தான். புராணம் கூறும் வஸிஷ்டர் மற்றோர் உடலெடுத்து அஸுரனுடன் போரிட்டார். அவனை ஜலத்தில் தள்ள ஆங்குள்ள பூதம் அவனை விழுங்கிற்று. இந்த கதையால் புராணம் படித்தவர் பெருமையும் கேட்பவர் நலமும் விளக்கப்படுகிறது. சிவனே, சம்புரிஷி என்ற பெயருடன் ராமருக்கு பூர்வ ராம சரிதத்தைக்கூறி பல லீலைகளைச் செய்த சரிதம் விசித்ரமானது. பாப புண்ய பலனும் இந்த பாதாள கண்டத்தில் விரிவாகக் கூறப்பட்டு முடிகிறது.

## உத்தரகண்டம்.

ஜாலந்தர வதம் : சக்ரன் சங்கரனை நாட்யத்தால் ஸந்தோஷப்படுத்தினன். யாது வரம் வேண்டும் என்றுரவர். என்னுடன் போர்புரிய ஒரு வீரன் வேண்டுமென்றான். ருத்ரனுக்குக் கோபம் உண்டானது. அதனால் பயங்கரமான பூதம் ஒன்று தோன்றி என்ன செய்ய வேண்டுமென்றது. ஸிந்து ஸமுத்ரம் இருவர்க்கும் புத்ரனகி இந்த்ரன் கர்வத்தை அடக்கு என்றார். ஸிந்து ஸமுத்ர ஸங்கத்தில் குழந்தையாகத் தோன்றி அழுதானவன். பதினன்கு உலகிலும் கேட்டது அழுத குரல். பிரும்மா ஓடிவந்தார். கடலரசன் அவர் மடியில் தன் குழந்தையை விட்டு நாமகரணம் செய்து ஆசீர்வதிக்க வேண்டினன். அது பிரும்மாவின் தாடியைக் கரத்தால் இழுத்தது. ஜாலந்தரன் — தாடியைப் பிடித்தவன் என பெயரிட்டுச்சென்றார். சுக்ரர் இவனை ஏற்று கடலிடையே ஜாலந்தரபுரம் அமைத்தார். ஸ்வர்ணை என்ற அப்ஸரஸ்ஸிடம் க்ரௌஞ்சர் அருளால் தோன்றிய பிருந்தையை மணம் செய்வித்தார். தந்தையான கடலைக் கடைந்து ஐராவதம் முதலிய பொருளை அபஹரித்தான் என்று கூறி இந்த்ரன் மீது போர் தொடுத்தான். அமராதிபனுக்கு அச்யுதன் துணை புரிந்தார். கடும்போர் நிகழ்ந்தது. சுக்ரர் ம்ருதஸஞ்ஜீவி வித்யையாலும் தேவகுரு ஸஞ்ஜீவினீ ஒஷதியாலும் இறந்தவரை எழுப்பினர்.

போர் தொடர்ந்து உக்ரமாயிற்று. ஸஞ்ஜீவினியை ஜாலந்தரன் அடித்துப் பாதாளத்திற் கனுப்பினன். இறந்த தேவ ஸேனை பிழைக்க வழி இல்லை. அமராதிப னும் அமரரும் ஸமர்விட்டு ஓடினர். திருமால் தேரிலேறி வந்தார். அரக்கன், தேரை ஒரு தீவிலும் தேரோட்டியை மற்றொரு தீவிலும் தூக்கி எறிந்தான். மாதவன் அவனைக் கொல்ல நினைத்தார். லக்ஷ்மி தனது ஸோதரனைக் கொல்ல வேண்டாமென்றாள். அவன் வீர்யத்தைக் கண்டு வியந்து யாது வரம் வேண்டும்? என்றார். பாற்கட லில் பள்ளி கொள்ளும்படி வரங்கேட்டு முவ்வுலகிலும் அஸுர ஆக்ஷியை நிலைநாட்டினன். ஆசைக் களவேது? பதினான்கு உலகையும் ஜயிக்க எண்ணினன். கைலாஸஞ் சென்றான். பார்வதியின் அழகைக் கண்டு அவளை மனைவியாக்க மநம் கொண்டான். விநாயகரும் முருக னும் ஜாலந்தரனை எதிர்த்தனர். அவர்களை வீழ்த்தி காலாக்நி ருத்ரனுடன் போர் துவக்கினன். மும்மூர்த்தி களது தேஜஸ்ஸால் தோன்றிய சூலத்தைக் கொண்டு தைத்ய ஸேனையைத் தாக்கினார் ருத்ரன்.

ப்ரளயகால ருத்ரனை எவர் வெல்வர்? அரக்கன் படை தளர்ந்தது. அவன் மநமும் முறிந்தது. காமவெறி மாத்ரம் வலுத்தது. சும்பன் என்ற ராக்ஷஸனை ஜாலந்தர வேஷத்துடன் சிவனெதிரில் நிறுத்தினன். தான் சிவ வேடம் பூண்டு பார்வதியிடம் சென்றான். மாயையால் இரு தலைகளைத் தேவியிடம் காட்டி சோகக்கடலில் முழுகி னன். அவை அரக்கனால் அறுபட்ட இரு புதல்வர்களின் தலைகள். இதை அறிந்த மாதவன் அநந்தனுடன் முநி வேஷந் தரித்து ஜாலந்தரன் மனைவியான ப்ருந்தையிடம் சென்றார். அவரது மாயையால் ப்ருந்தை ஒரு துஸ்வப்நம் கண்டாள். அதற்கு பரிஹாரம் செய்ய பெரியோரைத் தேடித்திரிந்தாள். கபட முநி கண்முன்னே தோன்றினர். அவரிடம் அணுகும் ஸமயம் அரக்கன் ஒருவன் வந்து ப்ருந்தையைத் தூக்க முயன்றான். அதுவும் மாயையே. முநிவர் ஹூம் என்றுகூற அவன் எரிந்து சாம்பலானன். துஸ்வப்நத்தின் பலன்போல் தன் கணவன் தலை அறுபட்டு ஆங்கிருப்பதைக் கண்டாள். அடியற்ற மரம்போல் விழுந்தாள். கதறினள். மஹர்ஷே! மணாளனை எழுப்பும்.

மாங்கல்ய பிக்ஷை தாரும் என்ருள். அந்த தலையை எடுத்து கன்னத்தில் ஒரு முத்தம் கொடு. எழுந்திருப்பான் பதி, என்ருர் கபடமுனி.

முனிவர் மறைந்து ஜாலந்தரனுகி ப்ருந்தையுடன் அந்தபுரம் சென்ருர். சிவனை ஜயித்ததாகக் கூறி அளவளாவினுர். படுக்கையிலும் படுத்தார். அவள் கற்பையும் கெடுத்தார். அவள் கற்பழிந்தால்தான் அவளது பதியைச் சிவன் கொல்லமுடியும். நாட்கள் பலகழிந்தன. கற்பும் அழிந்தது. இதனிடையில் அரக்கனைக் கொன்றிருப்பார் சிவன் எனக்கருதி சங்க சக்ர கதாபாணியான நிஜ உருவைக் காட்டினுர். பகவான் என மகிழ்ந்தாலும் தனது கற்பு அழிந்ததே எனக் கதறினுள். காயக்லேசம் செய்து உடலை விட்டாள். அவ்விடமே ப்ருந்தாவநம் ஆயிற்று.

பார்வதிதேவி சிவவேடம் பூண்ட அரக்கனைக் கண்டு ஐயமுற்ருள். வண்டாகித் தாமரையில் தங்கினுள். தோழி ஜயா என்பவளுக்குத் தன் வேஷம் அளித்து கவனித்து வந்தாள். பொய்ச் சிவன், பொய் பார்வதியிடம் காமப் பேச்சுகளைப் பேசினுன். அங்கே ஒரு அஸுரன் ஓடிவந்து ப்ருந்தை இறந்தாள் என்ருன். பொய் சிவன் ஓடினுர். இதனிடையில் மாயையால் ஒரு உமயவள் வந்து சிவனை மயக்கினுள். மாதவன் வந்து சிவனிடம் நடந்தவற்றைக் கூறினுர். விரைவில் ஜாலந்தரனைக் கொல்லும்படி வேண்டினுர். பரமசிவன் மாயாவியான ஜாலந்தரனைப் போருக் கழைத்தார். இருவரும் மிக உக்ரமாக யுத்தம் செய்தனர். முடிவில் சூலத்தால் அரக்கர் படை அனைத்தையும் அழித்தார். ஜாலந்தரனையும் ஒரே அடியால் வீழ்த்தினுர். தேவர் மகிழ்ந்து சிவனைப் போற்றினர்.

**துளஸியின் பெருமை:** ப்ருந்தை இறந்த இடத்திலே திருமால் பித்தனுகி ப்ருந்தே! ப்ருந்தே! என கூத்தாடினுர். தன் ஸஹோதரன் நிலையை அறிந்த பார்வதி வருந்தினுள். அருகே சென்று அவரது வியர்வை ஜலத்தை வழித்து அச்சாம்பல்மீது தளித்தாள். அங்கு துளஸீ வநம் தோன்றிற்று. அதை ஆலிங்கனம் செய்த விஷ்ணுவின் தாபம் அகன்றது. ஆதலால் அது ஒப்பற்றது என்ற காரணப்

பெயரால் துளஸீ எனப்பட்டது. எல்லா புஷ்பங்களையும் விட மிகச் சிறந்தது. பகவானுக்கு ப்ரியமானது. துளஸீ தளமில்லாத பூஜை பயனில்லை. துளஸீ இல்லாத தாநம் தாநமல்ல. அதைப் பெண்கள் எடுக்கலாகாது. உண விற்குப் பின்னும் ஸ்நாநம் செய்யாமலும் மாலையிலும் ஏகாதசி த்வாதசிகளிலும் வெள்ளி செவ்வாய்களிலும் துளஸியை எடுக்கக் கூடாது. துளஸீ பூஜையுள்ள இடத் தில் அபம்ருத்யு பூதப்ரேதங்கள் வராது. கதிர் உண்டா கும்போது துளஸீ தேவி ருதுவானதாகக் கருதி புட்டு சமைக்கவேண்டும். ப்ருந்தாவந த்வாதசியில் துளஸீ விஷ்ணு விவாஹம் செய்விக்கவேண்டும். (இது 4 அணு விலையில் அச்சிடப்பட்டு நம்மிடம் கிடைக்கும்.)

ஒவ்வொரு தாநத்தின் பெருமை ஏகாதசியின் உத் பத்தி மஹிமை 25 ஏகாதசிகளின் பெயர் பூஜாவிதி அநுஷ்டித்து பயனடைந்தவர் கதை (இது தனியாக 4 அணு விற்கு நம்மிடம் கிடைக்கும்.) த்ரிஸ்பர்ஶா என்ற ஏகாதசி மஹிமை ஶ்ரவண த்வாதசி பெருமை ரிஷிபஞ்சமீ வ்ரதம், கதை,- ஸத்யபாமையின் முற்பிறவி ஸாத்விக பக்தியின் சிறப்பு இவைகள் குறிப்பிடத்தக்க மிகருசிகரமானவை.

**ஜய விஜயர் முற்பிறவி:** த்ருணபிந்துவின் கன்யகை தேவஹூதியிடம் கர்த்தமருடைய பார்வையால் ஜய விஜயர் என்றஇருவர் தோன்றினர். மருத்தன் எனும் வேந் தன் ஒரு வேள்வி செய்தான். இவர்களை அழைத்து அபரி மிதமான தக்ஷிணை தந்தான். பங்கிட்டுக் கொள்வதில் இரு வருக்கும் மநத்தாங்கல் தோன்றிற்று. சண்டை முற்றி ஒருவரை ஒருவர் யானையாகவும் முதலையாகவும் சபித் தனர். அப்பிறவியிலும் நீரிலுள்ள முதலை கரையிலுள்ள யானையை இழுத்தது. பல்லாண்டு போர் நடந்தது. களைத்த யானை ஆதிமூலமே என அலறிற்று. சக்ரபாணி முதலையைக் கொன்றார். இருவரும் உடலை விட்டு பகவா னுக்கு த்வாரபாலகர்களானார்கள். தன ஆசை கொடியது!

**ப்ரும்மஹத்தி:** இந்த்ரன் வ்ருத்தாஸுரனைக் கொன்ற தால் ஏற்பட்ட ப்ரும்மஹத்தி அவனைத் தொடர்ந்தது. குருவின் உத்தரவுபடி அதை நால்வரிடம் அளித்து அச்வமேதம் செய்து சுத்தமானான். முதலில் கால்பங்கைப் பெற்ற அக்நி, ஜ்வாலையில்லாத அக்னியில் ஹோமம்

செய்தவரிடம் அந்த தோஷத்தைத் தரும். செடி கொடிகள் தங்களை அநாவச்யமாக வெட்டுபவரிடம் கால்பங்கு தோஷத்தை அளிக்கும். கால்பங்கை ஏற்று அப்ஸரஸ்ஸுகள் பஹிஷ்டா ஸ்த்ரீயுடன் ஸங்கம் செய்வோரிடம் அதை அளிப்பர். நான்காவது கால்பாகத்தை ஏற்ற ஜலம் ஜலத்தில் எச்சில் துப்புபவர் ஜலமலங்கழிப்பவர் ஆகியவரிடம் தன் பாபத்தை ஒதுக்கும். ஹத்தி பாபம் வராதபடி கவனிப்பது நம் கடமை.

*பகவத் கீதை:* 18 அத்யாயங்களுக்கும் 18 கதைகள் பெருமையை வர்ணிக்கின்றன. யார் யார் எப்படி அதனுல் நற்கதி அடைந்தனர் என்று மிக ரஸமாக கூறப்பட்டுளது. கீதா ஸாரமும் பாத்ம கதையும் என்று தனிப் புத்தகமாக இதை வெளியிட்டோம். பாகவத ஸப்தாஹ முறை மஹிமை அதை விளக்கும் ருசியான கதை இங்குளது. அது பாகவத நூலிலும் ஆதியில் அச்சிடப்பட்டுளது ஸப்தாஹத்தைக் கொண்டாடினுலும் பரீக்ஷித் அல்பாயுஸ் ஆனதால் 7 நாளில் கேட்டார். ஓராண்டாவது நாம் விரிவாகக் கேட்கவேண்டும் என்கின்றது புராணம். ஸப்தாஹம் பாகவத பாராயணத்திற்கே சிறந்தது.

*திலீபன்:* பிறப்பு இறப்பு மனிதர்க்கு ஸ்வாதீநமானதல்ல. ஆனுல் நற்கருமங்களால் சிறிதளவு ஸ்வாதீநமாக்கலாம். சிலகர்மாக்கள் புத்ரன் உண்டாகாமல் செய்வன. (இவைகளை நமது ஸ்தோத்ர சிந்தாமணியில் காணலாம். விலை 4 அணு.) அதற்கேற்ற ப்ராயச்சித்தங்களும் உள. ஸூர்ய வம்சத்தில் பிறந்தவர் திலீபன். மிக்க தர்மசீலன். வீரன். அவனுக்குப் புத்ர பாக்யம் உண்டாகவில்லை. குலகுருவான வஸிஷ்டரிடம் சென்ருன். முநிவர் க்ஞானக் கண்ணுல் இவன் தீவினையைக் கண்டார். திலீப! இந்த்ரனுக்குப் போரில் உதவிசெய்ய ஸ்வர்க்கம் சென்று திரும்பினுய். வழியிலிருந்த காமதேனுவை வலம் வராமல் சென்ருய். அந்த பாபத்தினுல் ஸந்ததி தடைபட்டுளது. என்னிடமுள்ள தேனுவை நியமத்துடன் பூஜை செய் என்ருர். திலீபனும் ஸுதக்ஷிணை எனும் அவன் மனைவியும் பக்தியுடனும் நியமத்துடனும் பூஜித்தனர். ஒருநாள் திடீரென ஸிம்மம் பசுவின் மீது பாய்ந்தது. அரசன் அதைக் கொல்ல அம்பை எடுத்தான். கை அசைவற்று

சித்ரம்போல் நின்றான். அரசே! அருகிலுள்ள மரத்தைக் காக்கும் சிவகிங்கரன் யான். அருகில் வரும் ப்ராணிகளே எனக்குணவு. கும்போதரன் என்று என் பெயர் என்றது ஸிம்மம். குருவின் கோவைக் காப்பது என் கடமை. என்னை வேண்டுமானால் புஜி. பசுவை விடு என்றான் திலீபன்.

ஒரு பசுவிற்காக இளம் வயது, அழகிய சரீரம், அகில பூமண்டல ஆக்ஷி, இந்த்ர பதவிக்கீடான இவைகளை விடுவது விவேகமல்ல. வேறு பல பசுக்களைத் தந்து உன் உடலைக் காப்பாற்று என்றது ஸிம்மம். அது தர்ம மல்ல, உயிரை உனக்கு அளிப்பேன். குரு பொருளைக் காப்பேன் என ஸிம்மத்தின் அருகே சென்று குனிந்து நின்றான். கூறிய நகத்துடன் அதன் பாய்ச்சலை எதிர்பார்த் தான். பார்த்திவன் மீது புஷ்பமாரி பொழிந்தது. ஸிம்மம் காணவில்லை. பசு பேசிற்று. ராஜன்! இது எனது மாயை. உன்னைப் பரீக்ஷித்தேன். நீ உத்தமன். புத்ர வரத்தைக்கேள். பாலைக் கறந்து அருந்து என்றது. அன்னையே! கன்றுக்கும் அக்நிஹோத்ரத்திற்கும் மிகுதி யானதை ஆசார்யன் அநுக்ஞை பெற்று பருகுவேன் என் றான் திலீபன். ரகு வெனும் ப்ரஸித்தனை புத்ரன் பிறந் தான் அவனுக்கு. அந்த குலத்தில் தோன்றியதால் ராக வன் என ராமர் பெயர் பெற்றார். ரகுவம்சம் என்ற பெயரால் காளிதாஸகவி இதைக் காவ்யமாக இயற்றினார்.

ரகு புத்ரன் அஜன். அவன் புத்ரன் தசரதன்: ரகு பூமண்டலமனைத்தையும் ஒரு குடைகீழ் ஆண்டான். திக் விஜயம் செய்து விச்வஜித் என்ற வேள்வியை நடத்தினான். ஸகலபொருள்களையும் தானமளித்தான். கௌத்ஸன் எனும் மாணவன் குருதக்ஷிணையை நாடிவந்தார். அவனது குரு பக்தியை மதித்து தக்ஷிணை வேண்டாம் என்றார் அவனது குரு வரந்தந்து. சிஷ்யனோ பிடிவாதம் செய்தான். 14 வித் யை கற்றாய். 14 கோடி கொடு என்றார் குரு. ரகு மண் பாத்திரத்தில் அர்க்யபாத்யமளித்தார். முனிவர் வந்த கார் யம் இங்கு பலிக்காதென அரசனை ஆசீர்வதித்துக் கிளம் பினார். என்னால் என் குலத்திற்கு அவமானம் வேண்டாம். இரும். என்று கூறி குபேரனை ஜயிக்கக்கிளம்பினான். இதை அறிந்த நிதிபதி ஸ்வர்ண வர்ஷம் வர்ஷித்தார். அனைத்தும்

உமக்கென்ருர் ரகு. கௌத்ஸரோ 14 கோடிக்குமேல் சிறி தளவும் வேண்டாமென்ருர். உன்னைப்போன்ற புத்ரனுண்டாகட்டுமென ஆசீர்வதித்தார். அஜன் எனும் புதல்வன் பிறந்தான். அவன் அம்பிகையை உபாஸித்தான். அவளருளால் அரசனுக்கும் குடிகளுக்கும் வேண்டிய பொருள் கிடைத்தது. வரி வாங்காமல் ராஜ்யபாரம் செய்தானஜன். மாறுவேடம் பூண்டு குடிகள் நலத்தைக் கவனித்தான். செல்வமிருந்தும் நோய்வாய் பட்டிருப்பதைக் கண்டான். மறுபடியும் அன்னையை அர்ச்சித்தான். அவள் ஆணையின்படி நோய்களை எல்லாம் அஜம்-ஆடு ஆக்கி காட்டிற்கு ஓட்டினன். ஆதலால் அவனுக்கு அஜன் என காரணப் பெயர் உண்டானது. அஜனது குமாரன் தசரதன். அவரும் குடிகளது நலத்திலே கண்ணும் கருத்துமாக இருந்தார். சனீச்வரனல் ஒரு ஸமயம் துர்பிக்ஷம் ஏற்பட்டது. அவரை வணங்கி துதித்தார். அப்பொழுதும் மழை உண்டாக வில்லை. தேரின்மீதேறி சனைச்சரனைப் பத்து திக்கிலும் துரத்தினர். பத்து திக்கிலும் தேரோடியதால் அவர் தசரதரெனப்பட்டார். பிறகு இருவரும் ஸமாதானம் செய்துகொள்ள மழை பெய்தது. இக் கதையைப் படித்தாலும் அவர் சொன்ன ஸ்தோத்ரத்தைக் கூறிறுலும் மழை உண்டாகும். இத்தகைய உயர்குலத்தில் தோன்றினர் பகவான் ஸ்ரீ ராகவன்.

த்வாரகை புஷ்கரம் ப்ரயாகம் பதரீ கோஸலம் ஹரித்வாரம் முதலிய புண்ய தீர்த்தங்களும் தீர்த்த யாத்ரை பயனும் பல கதைகள் மூலம் வர்ணிக்கப்படுகின்றன. மாகஸ்நாநம் பதிவ்ரதா தர்மம் ஆந்ஹிக தர்மம் சிவராத்ரி மஹிமை விபூதி ருத்ராக்ஷ கோபீசந்தந மஹிமை தசாவதாரம் ராமகிருஷ்ண மஹிமை ஸமாஶ்ரயண விதி குரு ஶிஷ்ய லக்ஷணம் ஆகியவைகளை இதில் காணலாம்.

## ருசிகரமான சில துணுக்குகள்.

**நைமிசாரண்யம்:** ப்ரும்மா முனிவர்களுக்கு ஒரு தர்ப்பத்தை வண்டி சக்ரம் போல் செய்தளித்து நிமி என்ற இது விழும் இடம் பூமியில் பவித்ரமானது என்ருர். நிமி படுத்த இடம் நைமிசாரண்யமாம்.

**ப்ரதக்ஷிணம்:** வலம் வருவதே ப்ரதக்ஷிணம். அது உடலால் ஓங்காரம் எழுதுவது போலாம். காயத்ரியை விரல் ரேகையில் எண்ணுவதும் ப்ரணவ மெழுதுவதாம்.

**மோதகம்:** தேவர்கள் அமிருதத்தால் கொழுக் கட்டை செய்து இரு புதல்வரில் புண்யவானுக்கு இதைத் தாரும் என சிவனிடம் அளித்தனர். குஹன் மயில்மீதேறி புண்ய தீர்த்தம் சென்றார். விநாயகரோ பெற்றோரை வலம்வந்து மோதகத்தைப் பெற்றார். ஆதலால் அவருக்கே முதல் பூஜை. ஆநந்தோ மோத: ப்ரமோத: என்ற முக்தி ஆநந்தத்தின் அறிகுறி மோதகம்.

**தர்மருக்கு சாபம்:** தூர்வாஸர் லக்ஷமாண்டு தர்ம தேவதையை நாடித் தவம் செய்தார். அவர் ப்ரத்யக்ஷமாகாததால் தர்மராஜன் என்ற க்ஷத்ரியனாகவும் விதுரர் என்ற சூத்ரனாகவும் ஹரிச்சந்த்ரனை விலைக்கு வாங்கிய சண்டாளனாகவும் பிறக்கும்படி சபித்தார். க்ருஷ்ணாஷ்டோத்ரம் ராமாஷ்டோத்ரமும் இதில் அமைந்துள.

**ச்ராத்த ப்ராம்மணரிடம் பித்ருக்கள்:** ஸ்ரீ ராமன் ச்ராத்தம் செய்கையில் ப்ராம்மணர்களுக்கு அன்னமிட்ட ஸீதாதேவி தனது மாமனார் தசரதரையும் மற்றிருவர்களையும் கண்டு வெளியே சென்றாள். லக்ஷமணன் பரிமாற ச்ராத்தம் முடிந்தது. ஏன் வெளியே சென்றாய் என்று கேட்க எனது மாமனாரும் மற்றிரு மன்னர்களும் உட்கார்ந்திருந்தனர். போதிய வஸ்த்ரமில்லாததால் வெட்கமடைந்து சென்றேனென்றாளவள்.

**பிண்டத்தை ஏற்பர் பித்ருக்கள்:** ராகவன் பூமியில் பிண்டம் வைக்கும்போது தசரதர் கையை நீட்டி கொடு என்றார். சாஸ்த்ர விதியை மீறலாமோ? "பூ மௌதத் தேந பிண்டேந" என்றபடி பூமியில் வைக்கிறேன் என்றார் ஸ்ரீ ராமன்.

**லக்ஷ்மீ தரன்:** ஸீதையின் ஸோதரன் லாஜஹோமத்தில் பொரியிட்டான்.

**கீதை மஹிமை:** ஸதா ஏன் தூங்குகிறீர்? தூக்கம் தமோகுணமல்லவா? என்றாள் ஸ்ரீ தேவி பகவானை. நானா தூங்குகிறேன்? கண் மூடி கீதா ரஸத்தை அனுபவிக்கிறேன் என்றார் மஹாவிஷ்ணு.

*துளஸியை விட உயர்ந்த புஷ்பம்:* ஹிம்ஸை செய்யாமை புலன்களை அடக்குவது தயை பொறுமை மநதை அடக்கல் த்யாநம் ஸத்யம் இவைகளே பகவானுக்கு மிக ப்ரியமானவை.

*எதனால் துர்பிக்ஷம் மரணம் பயம்:* பூஜிக்கத்தக்கவர்களைப் பூஜிக்காமல் தகாதவர்களைப் பூஜித்தால் இம்மூன்றும் உண்டாகும்.

*ராமநாம ருசி:* ராஜ்யம் என்பது போன்ற ராவில் ஆரம்பிக்கும் சொற்களை ஒருவர் கூற ஆரம்பித்தால் ராமா என்று கூறுவரோ என்று நான் ஆவலுடன் ஸந்தோஷிக்கிறேன் என்கிறார் சிவன்.

*உதய அஸ்தமந மேது?* எப்போதும் ப்ரகாசமாக உள்ள ஸூர்யனுக்கு உதயம் அஸ்தமநம் என்பதேது? காலையில் முதலில் பார்க்கும்போதும் உதயம், தெரியாமல் மறையும்போதும் அஸ்தமனம் என்கிறோம்.

பாத்ம புராண ஸாரம் முற்றிற்று.

---

## விஷ்ணு புராண விஷய ஸூசிகை.

1 மைத்ரேயர் கேட்க பராசரர் விஷ்ணு புராணம் கூறுதல்.

2 ஸ்ருஷ்டிக்கு முந்தியுள்ள நிலை. ப்ரக்ருதி புருஷன். இருபத்துநான்கு தத்துவம். ஜகத் ஸ்ருஷ்டி.

3 ஸ்திதி கர்தாவான விஷ்ணுவே சிறந்தவர்.

4 ப்ரும்ம விஷ்ணு முதலியவர்களின் ஆயுஸ்.

5 கல்ப ஆதியில் விஷ்ணு ஜலத்தில் படுத்திருப்பது. நாபிகமலத்திலிருந்து ப்ரும்மா உண்டானது.

6 அவித்யா ஸ்ருஷ்டி. பித்ரு நாகாதி ஸ்ருஷ்டி. வேதம், தேவர்ஷிகளின் பெயர். பூமியின் அமைப்பு. தான்யாதி ஸ்ருஷ்டி.

7 மரீசி முதலிய மாநஸிக புத்ரர், அவர் மனைவி, கோபம் முதலிய தாமஸ ஸ்ருஷ்டி. தக்ஷன் து இருபத்து நான்கு புத்ரிகளின் விவாஹம், ஸந்ததி.

8 ரௌத்ர ஸ்ருஷ்டி. ஸப்த மருத்துக்களின் ஸ்தாநம். அவர்களது பத்நீ, புத்ரர். லக்ஷ்மீ நாராயணன் ஸர்வ வ்யாபீ.

9 தூர்வாஸர் ஶக்ரனுக்கு ஶாபமளித்தது. ஸமுத்ர மதநம். லக்ஷ்மீ ஸ்துதி. 49 அக்நி ஸ்ருஷ்டி. அக்நிஷ்வாத்தாதி கணம்.

10 உத்தாநபாதர், த்ருவ சரிதம். மரீசி முதலியவர் செய்த ஆசீர்வாதம். த்ருவ பதம். வேநன். ப்ருது.

11 ப்ரசேதஸ் மாரிஷா என்பவளை மணந்து தக்ஷனைப் படைத்தது. கண்டுமுநிவர் விஷ்ணு ஸ்துதியால் முக்தி பெற்றது.

12 ப்ரஹ்லாதனை நரஸிம்மன் அநுக்ரஹித்தது.

## 2-வது அம்சம்.

1 ஸப்த த்வீபம், 7 கடல், 7 மலை, குலாசலம், நதீ, ஜம்பூத்வீபத்தில் தாந தர்மாதி கர்ம பலன், ப்லக்ஷ ஶால்மலீ, க்ரௌஞ்சாதி த்வீபங்கள்.

2 அதலம் முதலிய ஏழு பாதாளலோகம். அநந்த ரூபியான பகவானது மஹிமை. நரகமிருப்பிடம். எந்த பாபத்தால் எந்த நரகம் உண்டாகும்? ப்ராயஶ்சித்த முறை.

3 பகவன்நாம மஹிமை. ஸூர்ய சக்ர ஸ்தாநம். உதயாஸ்தமநம். விஷுவத்தில் தாநபலன். விஷ்ணுபாதத்திலிருந்து வந்த கங்கை, நாலாக வந்தது.

4 த்ருவனைச் சுற்றி ஜ்யோதிஶ் சக்ரங்கள். சிசுமார சக்ரம். த்வாதசாதித்யர், ஒவ்வொரு மாதத்திலும் ஏழுவித ஸூர்ய கணங்களின் நாம.

5 ஸூர்யன் மூன்றுவேத மயமான சக்தி உள்ளவர். நவக்ரஹங்களின் ப்ரதக்ஷிணம். ஸ்திதி.

6 ஜடபரதர் ரஹூகணன் நிதாகருக்கு ரிபு உபதேசம்.

## 3-வது அம்சம்.

1 பதிநான்கு மநுக்கள். கல்பங்கள். ஒவ்வொரு த்வாபர யுகத்திலும் ஒவ்வொருவர் வ்யாஸராக வருதல், ப்ரும்மக்ஞாந மஹிமை.

2 ரிக்வேதப் பிறிவு, கோபத்தால் குரு கூறியபடி யாக்ஞ்ய வல்க்யர் கற்ற யஜுர்வேதத்தைக் கக்கு வது, ஸூர்யனிடமிருந்து ஶுக்ல யஜுர் வேதம் கற்றது.

3 ஜைமினி ஸாமவேதத்தை வகுத்து ஶிஷ்யருக்களித்தது, 18 புராணம், 18 உபபுராணம், மஹாபுராண லக்ஷணம். 14 வித்யைகள்.

4 யமயாதனைகளை அகற்றும் பகவன் நாம, விஷ்ணு ஆராதன விதி. 4 வர்ணம். மோக்ஷாதிகாரி. காமாதி ஜயம். நித்ய நைமித்திக கர்ம, கர்மபலன்.

5 க்ருஹஸ்த தர்மம். ஸதாசாரம், ஸ்நாந ஸந்த்யா, ப்ரும்மயக்ஞ-வைஶ்வதேவம். ஸந்த்யை செய்யாதவர் துன்பம். ரிது கமநம்.

6 ஸதாசாரம் த்ருஷ்டபலம், அத்ருஷ்ட பல மிரண்டு முள்ளது. ஜாத கர்மாதி, ஆௌளசாதி, ஶ்ராத்தம். விஷ்ணு மாயையால் அஸுரர் வைதிக கர்மாவை விட்டது, அதனால் அபஜயம்.

## 4-வது அம்சம்.

1 வேத உத்பவம், அதன் பிரவு. ஸுத்யும்நாதி ஜநநம். ப்ருஷத்ரர், ரேவதர், பெண்ணுடன் ப்ரும்மலோகம் செல்லுதல். நாபாக அம்பரீஷ இக்ஷ்வாகு விகுக்ஷி மாந்தாதா த்ரிஶங்கு ஸகரர் திலீப ரகு அஜ தஶரத ராமர்.

2 நிமி ஜநக வம்ஶம். ஸோம வம்ஶம். உர்வஶீ. புரூரவஸ். ஜந்ஹு கங்கையை அருந்தியது. ரஜி சரிதம். யயாதி. புரு. யது. ஸஹஸ்ரார்ஜுந. யாதவ வம்ஶ ஜ்யாமக. குந்தி.

3 ஸத்ராஜித். ஸ்யமந்தக. காந்தினீ ஶ்வபல்கவிவாஹம். அக்ரூர. தேவக. தேவகி. வஸுதேவ. ஶிஶுபாலர். அவன் முற்பிறவி. த்ருஹ்யு. அநு. அஸ்திநாபுரம். திவோதாஸன்.

4 மாகத. பாண்டவ. அபிமன்யு. கலியில் வரப்போகும் அரசர். சாணக்யர் நவநந்தர்களை சிக்ஷித்தது.

மௌர்ய வம்ஶம். கலியை பரீக்ஷித் ஜயித்தல். கலி லக்ஷணம். கலியில் அதர்மம் வ்ருத்தியாதல். பரிஹாரம்.

## 5-வது அம்சம்.

1 வஸுதேவ தேவகீ விவாஹம். கம்ஸனைப் பார்த்து ஆகாஶவாணீ. பூபாரத்தைக் குறைக்க தேவர் வேண்டுதல். தேவர் கோபர்களாதல். விஷ்ணு க்ருஷ்ணவதாரம் செய்வதாக அருள்புரிதல். வஸுதேவர் தேவகியை சிறைபடுத்தல். ஆறு குழந்தைகளைக் கம்ஸன் கொல்லுதல்.

2 கிருஷ்ணவதாரம், லீலை. பூதனை சகடன் த்ருணவர்த்தன் முதலியவரைச் சிக்ஷித்தல்.

3 இந்த்ர கர்வ பங்கம். கோவர்த்தநதாரணம். பிரும்ம சிக்ஷை. ராஸக்ரீடை. கம்ஸன் க்ருஷ்ணனை மதுரைக்கு அழைத்தல். அக்ரூரர் பக்தி.

4 வண்ணனை சிக்ஷித்தது. மாலாகாரன் சேணியன் த்ரிவக்ரா இவர்களுக்கு அநுக்ரஹம். குவலயா பீட. மல்ல கம்ஸாதி வதம். ஜராஸந்த ஜயம். முசுகுந்தாநுக்ரஹம்.

5 ருக்மிணீ முதல் 8 பத்நீகளை மணந்தது. நரகவதம். பாரிஜாதஹரணம். 16 ஆயிரம் ஸ்த்ரீ விவாஹம், உஷாபரிணயம், பௌண்ட்ரக வதம், க்ருஷ்ண ஸந்ததி.

6 பலராம பராக்ரமம். ஸாம்பன் ஶாபம் பெறுதல். யாதவ வம்ஶம். பரஸ்பர யுத்தம். வைகுண்ட கமநம். க்ருஷ்ண பத்நிகளுக்கு ஶிக்ஷை.

## 6-வது அம்சம்.

1 மஹா ப்ரளயம், கலி தர்மம், கலியின் தோஷமும் குணமும், பகவந்நாம ஸங்கீர்த்தநமே கலிக்கு பரிஹாரம், பக்தியின் பெருமை.

2 நைமித்திக ஆத்யந்திக ப்ராக்ருதிக ப்ரளயம்.

3 பகவான் ஶேஷசாயியாக இருத்தல். ப்ரக்ருதி வ்யக்த; அவ்யக்த ஸ்வரூபம்.

4 ஆத்யாத்மிக ஆதிதைவிக ஆதிபௌதிக, ஶரீர மநஸ் ஸ்வபாவம். ஸ்ருஷ்டி பிரிவு. ஸ்வகர்மாவை விட்டவர் பெறும் நரகம். பகவான் என்ற சொல்லின் பொருள் மஹிமை.

5 ப்ரும்ம ப்ராப்தி யோக. ஸ்வாத்யாய, கேஶித்வஜ காண்டிக்ய ஸம்வாதம். தர்மதேநுவைக் காக்காத பாபத்திற்கு ப்ராயச்சித்தம். கேஶித்வஜன் முக்தி.

6 பகவத்யாநம் பகவத் ஸ்வரூபம். காண்டிக்யனும் பகவத்யாநத்தால் வைகுண்டம் சென்றது. விஷ்ணு புராண பலன்.

### விஷ்ணு தர்மோத்தர கண்டம்.

ப்ராம்ம பர்வா. மத்ய பர்வா. ப்ரதி ஸர்க்க பர்வா. உத்தரபர்வா என 4 பிரிவும், 585 அத்யாயமும் உள்ளது. வ்ரதங்கள். நிம்பார்க்கர் ஸ்ரீதரர் விஷ்ணுஸ்வாமி பட்டோஜி. வராஹமிஹிரர் முதலியவர் கலியில் உண்டாகப்போவது. ஹம்ஸகீதை. நூற்றுக்கணக்கான அத்யாயத்தில் 64கலை. நரஸிம்மனுக்கு மூன்று கண்கள்போன்ற பல அரிய அபூர்வ விஷயங்கள் நிறைந்தது.

---

## ஸ்ரீ விஷ்ணுபுராண ஸாரம்.

---

புராணக்ரமத்தில் இது மூன்ருவது. 23000 ஶ்லோகம் பூர்வபாகம். விஷ்ணு தர்மோத்ரமெனும் உத்தரபாகம் 933 அத்யாயம் உள்ளது. வில்ஸன் எழுதிய ஆங்கில பாஷை பதிப்பும் உளது. விஷ்ணு சித்தி, ஆத்மப்ரகாசமெனும் ஸ்ரீதரீயம் என்ற இரு வ்யாக்யாநங்களுடன் கூடியது. பாம்பே ஸ்ரீ வெங்கடேச ஸ்டீம் ப்ரஸ்ஸில் அச்சிடப்பட்டது.

### அவதாரிகை.

விஷ்ணுபுராணம் பலவகையிலும் சிறப்பானது. மற்றெல்லா புராணங்களைவிட இந்த புராண ஶ்லோகங்களையே ஸ்ரீ சங்கராசார்யாள் தனது பாஷ்யத்தில் மேற்கோளாக எடுத்துக்காட்டுகிருர். பக்தியுடன் வைராக்யமும் வேதாந்தமும் இதில் அதிகம் காணப்படுகிறது. பூர்வ

பாகம் 6 அம்சம் உள்ளது. உத்தரபாகம் 3 கண்டவடிவமானது. பூர்வபாகத்தில் ஸ்ரீ பாகவத தசமஸ்கந்தத்தில் உள்ளபடி ஸ்ரீ க்ருஷ்ணசரிதம் விசேஷமானது. 115 அத்யாயமுள்ள ஹம்ஸகீதை விஷ்ணு தர்மோத்தரத்தில் இருக்கிறது. அதில் பற்பல அரிய விஷயங்கள் அமைந்துள்ளன. வெள்ளியையும் ஸ்வர்ணத்தையும் த்ரவமாக்கி வர்ணத்துடன் சேர்த்து சித்ரம் எழுதினுல் என்றும் அழியாதென்கிருர் வ்யாஸர். இதே பாரததேசத்தில் அஜந்தா சித்தின்னவாசல் தஞ்சை முதலிய இடங்களில் எழுதப்பட்ட சித்ரமழியாதிருக்க காரணம். நாட்யம் ஸங்கீதம் பொம்மலாட்டம் காவ்யம் ப்ராக்ருதபாஷை பசியை அடக்கும் ஓஷதி வ்ரதம் ஸ்ரீஸூக்த ஹோமாதிகள் முதலிய மிக அபூர்வமான விஷயங்களை இதில் காணலாம்.

பராசரர் மைத்ரேயருக்கு இதை உபதேசித்தார். ப்ரசாரம் செய்தார். ஆதலால் பாகவதத்தைப் பரீக்ஷித்துக்குக்கூறிய சுகர்போல் பராசரும் கொண்டாடப்படுகிருர். ஸ்ரீராமாநுஜரது குரு தன்உடலை விட்டபொழுது 3 விரல்கள் மாத்ரம் மடங்கி இருந்ததாம். அவருக்கு ஏதேனும் 3குறைகள் இருக்கலாம் என நினைத்து விஷ்ணு புராண ப்ரசாரகர்த்தாவின் பெயரை ஒருவருக்கு வைப்பேன். விசஷ்டாத்வைதபாஷ்யம் எழுதுவேன். அதைப்ரசாரம்செய்ய மடங்களை ஸ்தாபிப்பேன் என்று ராமாநுஜர் 3 ப்ரதிக்ஞைசெய்தபின் விரல்கள் நீண்டன என்பர்.

## 1-வது அம்சம் ஸ்ருஷ்டி.

ஸ்ருஷ்டியின் ஆதியில் ஜலத்தில் படுத்திருக்கும் விஷ்ணுவினது நாபிக்கமலத்திலிருந்து சதுர்முகன் தோன்றினன். அவரை அறியாமலே அவரிடமிருந்து அவித்யை தோன்றிற்று. அது தமஸ் மோஹம் மஹாமோஹம் தாமிஸ்ரம் அந்ததாமிஸ்ரம் என்ற 5 வகையான பிரிவுள்ளது. அவித்யையை ப்ரக்ருதியாகக் கொண்டு வேதத்தில் கண்டபடி முன்கல்பத்திலிருந்ததை அறிந்து ஸகல வஸ்துக்களையும் படைத்தார் பிரும்மா.

**லக்ஷ்மியின் அவதாரம்:** முதலில் ப்ருகுவின் கன்யகையாக தோன்றினள். பிறகு பாற்கடலிருந்து உதித்தாள். இங்கு தேவர் 17 ஸ்லோகங்களால் லக்ஷ்மியை

ஸ்துதி செய்தனர் பகவான் வாமனராகத் தோன்றிய போது லக்ஷ்மி பத்மத்திலிருந்து தோன்றினாள். பரசுராமராக வந்தபோது தரணி. ராமாவதாரத்தில் ஸீதை. க்ருஷ்ணாவதாரத்தில் ருக்மணீ. இப்படி ஒவ்வொரு அவதாரத்திலும் அது அதற்கேற்றபடி அவதரிக்கிறாள். பகவானை விட்டு என்றும் பிரியாதவள் லக்ஷ்மீ. க்ரது என்ற முனிவர் ஸந்ததி என்பவளிடம் 80 ஆயிரம் வாலகில்ய மஹர்ஷிகளைப் பெற்றார். கட்டவிரல் ப்ரமாணமுள்ள இவர்கள் மஹா தேஜஸ்விகள். ஒவ்வொரு மன்வந்தரத்திற்கும் வெவ்வேறு ஸப்தரிஷிகள். வஸிஷ்டருக்கு ஊர்ஜா என்ற பத்நியினிடம் பிறந்த ரஜஸ், கோத்ரர், ஊர்த்வபாஹு ஸவநர் அநகர், ஸுதபஸ் சுக்ரர் என்பவர்களே மூன்றும் மந்வந்த்ர ஸப்தரிஷிகள்.

பிரும்மாவிடமிருந்து அக்நி உண்டானார். அவரது புத்ரர் பவமாந, பாலக, சுசி என்ற மூவர். இம்மூவரிடமிருந்து 45 அக்நிகள் தோன்றி அவர்களுடன் சேர்ந்து 49 அக்நிகளாகி உலக நன்மை செய்கின்றனர். பித்ரு கண ஸ்ருஷ்டியைக் கூறி த்ருவசரிதம் கூறப்படுகிறது. ஸ்ரீபாகவதத்தில் நாரதர் த்ருவனுக்கு த்வாதசாக்ஷரீ உபதேசித்ததாக கூறப்படுகிறது. இங்கு மரீசி முதலிய ஸப்தரிஷிகள் '' ஓம் நமோ வாஸுதேவாய சுத்தக்ஞான ஸ்வரூபிணே'' என்ற ஷோடசாக்ஷரீ கூறியதாக வர்ணிக்கபடுகிறது. வேநன் ப்ருது ப்ராசீந பர்ஹிஸ் ப்ரசேதஸ் தக்ஷன் முதலியவர் சரிதத்தைச் கூறினார். ப்ரஹ்லாத சரிதம் பாகவதத்தில் உள்ளபடியே இங்குள்ளது. ப்ரஹ்லாத வம்சத்தை வர்ணித்து, ப்ருதுராஜ்யம், ப்ரும்மா எந்தெந்த பொருளுக்கு யார் யாரை அரசனாக அமைத்தார் என்றும் கூறி முதலம்சத்தைப்பூர்த்தி செய்கிறார்.

## 2-வது அம்சம்.

ப்ரியவ்ரதன் புத்ரர்களுக்கு ராஜ்யமளித்தது. பரதன், பரதவம்சம், ஸ்வாயம்புவமநு, ஸப்தத்வீபம், ஸப்த குலாசலம், பரதகண்டம், முதலிய ஒன்பது கண்டங்கள். ஜம்பூத்வீபத்தில் வர்ணாச்ரம தர்மம், புண்ய தீர்த்தம், தாநம், அதலம் முதலிய ஏழு பாதாளம், பலவகையான நரகங்கள், எந்தெந்த பாபிகளுக்கு எந்தெந்த நரகம்,

பாபங்களுக்கு ப்ராயச்சித்தம் செய்து கொள்ளல் பகவன் நாமாவுக்கு ஈடான ப்ராயச்சித்தம் வேறில்லே.

ப்ராயச்சித்தான்யே சேஷாணி தப: கர்மாத்மகாநிவை,
யாநி, தேஷாம் அசேஷாணும் க்ருஷ்ணநு ஸ்மரணம்பரம்.

உபவாஸ ரூபமாகவும் ஹோம ரூபமாகவும் தாநரூப மாகவும் பல ப்ராயச்சித்தங்கள் கூறப்பட்டிருக்கின்றன. அவைகள் எல்லா வற்றையும்விட க்ருஷ்ணஸ்மரணமே சிறந்தப் ப்ரயாச்சித்தம். இதைக் கர்மகாலத்தில் கூறுகி றோம். க்ஞாநமஹிமை மோக்ஷம் பூலோகம் முதலான மேலே உள்ள ஏழு லோகங்கள் இவைகளின் ஸ்ருஷ்டி ஸ்திதிலயம் ஸூர்ய சக்ர ஸ்தாபநம் உதயாஸ்தமநம், நக்ஷத்ர ராசிகள் கால சக்ரம் விஷுவாதி புண்ய காலங் களில் செய்யும் தானமஹிமை கங்கையின் பிரிவு சிம்சு மார சக்ரம் 12 ஆதித்யர்கள். ஒவ்வொரு மாதத்திலும் 7 கணங்கள் ஸூர்யனின் ரதத்தை வஹிப்பது. சூர்யன் காலேயில் ரிக்வேத மாகவும் பகலில் யஜுர்வேதமாகவும் மாலேயில் ஸாமவேதமாகவும் இருப்பது முதலியவைகளே இங்கு வர்ணிக்கிறார்.

ஆதித்யன் அம்ருதத்தைச் சந்த்ரனுக்கு அளிப்பது. சந்த்ரனிடமிருந்து தேவர்கள் அம்ருதம் பருகுவது. அமா வாஸ்யை அன்று சந்த்ரன் ஸூர்யனுடன் சேருவது. நவ க்ரஹங்களது வர்ணனே ஜடபரதர் நிதாகர் ரிபு இவர்களின் சரிதம் முதலியது வர்ணிக்கப்படுகிறது. ஜடபரதர் நிதா கர் இருவர் சரிதமும் வேதாந்தம் நிறைந்தது.

## ஜடபரதர்.

பரதன் எனும் அரசன் மநுநீதி தவருமல் மாநிலத் தை ஆண்டுவந்தான். அவன்நாக்கு ஸதா பகவன் நாமாவையே கூறும். சித்தம் அவர் திருவடியையே நாடும். ராஜ்ய பாரத்தை ஸ்வதர்மம் என எண்ணினன். போகத் தை மநதாலும் மதியான். மகனே மன்னனக்கித் தவம் புரிய வநம்சென்றான். வாநப்ரஸ்தனுக்கு ஏற்ற கர்மாவை விதிவழுவாது செய்தான். ஒருநாள் நதிக்கரைக்குச் சென்றபோது ஸிம்ம கர்ஜனே கேட்டது. நீர ருந்தும் கர்ப் பிணியான மான் திடுக்கிட்டு வீழ்ந்திறந்தது. அதன்

வயிற்றிலிருந்து வெளிவந்த மான்குட்டி நிராதரவாக இருப்பதைக்கண்டார். அதை எடுத்து வளர்த்தார். புத்ரமித்ரர்களைவிட்டமநம் மானினிடம் அன்புகொண்டது. அன்புடன் அதைவளர்த்தார். அதன் விளையாட்டைக்கண்டு களித்தார். அறைக்ஷணமும் அதைவிட்டுப் பிரியாதிருந்தார். தவத்தை மறந்தார். தத்வத்தை விட்டார்.

உயிர் நீங்கும் காலம்வந்தது. மான்கதி என்னுகுமோ என்று நினைத்துக் கொண்டே உடலை விட்டார். மானுகவே மறுஜன்மம் எடுத்தார். முற்பிறவி வாஸனை தொடர்ந்தது. வேதாந்த அறிவும் அகலவில்லை. மான் உடலைவிட்டுப் பூஸுரர் குலத்திலே தோன்றினர். அங்கும் நல்வாஸனை தொடர்ந்தது. உலக வாழ்வில் ஈடுபட்டால் ஸம்ஸாரக் கடலின் கரைகாணமுடியாது என மௌனியாக இருந்தார். பித்தனைப் போலிருந்தார். தந்தை இறந்தபின் ஸஹோதரர் பரதனை வயலுக்குக்காவலாக வைத்தனர். ஸௌவீர அரசனின் வாசற்காப்பான் பரதரைக் காளிக்குப்பலியிட அழைத்துச் சென்ருன். துறவிக்கு உடலில் அபிமானமுண்டோ? அஞ்சாது நின்ருர். மஹாகாளி பலியிட வந்தவனையே வெட்டி ரத்தபாநம் செய்தாள். ஆபத்திலிருந்து மீண்டதற்கு ஆநந்திக்கவுமில்லை. ஒருநாள் பரதரைப் பல்லக்குத் தூக்கும்படி செய்தனர். ஸௌவீர ராஜன் கபிலரிடம் வேதாந்தம் கேட்கச் சென்ருன். பரதர் பல்லக்குத் தூக்கித் தன்பாபத்தைக் கழித்தார். ஆனல் மநதில் வேதாந்த விசாரம் செய்து கொண்டே மெதுவாக நடந்தார். மற்றவர் விரைந்து செல்வதால் பல்லக்கு சரியாக போகவில்லை. அரசன் கவனித்துப் பரதரைப் பார்த்துக்கூறினன்.

மிகப்பெருத்தவனை உனக்கு பல்லக்கு சுமப்பது கஷ்டமாக இருக்கிறதா? என்ருர். அரசே! என்னை நீர் உண்மையாக பார்த்தீரா? பாராமலே பருத்தவன், பல்லக்குச் சுமக்கிறவன் என்றீரே? நானு சுமக்கிறேன். பூமி, அதன்மீது பாதம், அதன்மேல் முழங்கால், அதன்மேல் தொடை, அதன்மேல் வயிறு, அதன்மேல் மார்பு, அதன் மேல் கழுத்து, ஆதலால் சுமப்பது பூமியே. நானல்ல, என்ருர் பரதர். இதைக்கேட்ட அரசன் அவர் திருவடியை வணங்கி தத்துவோபதேசம் பெற்ருன். ஆத்மா எனும் ஒரு

வஸ்து தான் உலகில் உலகாகவும் உலகிலுள்ள பொருள் களாகவும் உளது. அந்தந்த உடலில் உள்ள ஆத்மாவை ஸுரர் நரர் மிருகம் பக்ஷி எனஅழைக்கிறோம். வேணுவில் பலத்வாரங்கள் இருக்கின்றன. அதன் வழியாக வாயுச் செல்லும்போது ஸப்தஸ்வரம் பாடுகிறது. உண்மையில் ஒரே வாயுதான் ஒவ்வொரு சந்திலிருந்தும் ஒவ்வொரு ஸ்வரமாகக் கேட்கிறது என்றுகூறி நிதாகருக்கு ரிபு கூறி யதையும் உபதேசித்தார்.

## 3-வது அம்சம்.

*14* மநுக்கள் பெயர். ஒவ்வொரு மநுவின் ஆக்ஷியில் உள்ள இந்த்ரன். *7* ரிஷிகள். *14* மநுக்களின் காலமான ஆயிரம் யுகம் ஒருகல்பம். பகவான் க்ருதயுகத்தில் கபில ராகவும், த்ரேதையில் ஸ்ரீ ராமனுகவும், த்வாபரத்தில் வ்யாஸராகவும், கலியில் கல்கியாகவுமிருந்து தர்மத்தை ரக்ஷிக்கிறுர். க்ஞாநத்தைப் புகட்டுகிறுர். ஒவ்வொரு த்வா பரயுகத்திலும் ஒவ்வொருவர் வ்யாஸராகத்தோன்றி ஒன் ருன வேதத்தை நான்காகப் பிரிப்பர். ஒன்ருக இருந்த புராணத்தைப் பதினெட்டாகப் பிரிப்பர்.

வ்யாஸாவதாரம் செய்தவர்கள் ஸ்வயம்பூ. ப்ரஜாபதி, உசநஸ், ப்ருஹஸ்பதி, ஸவிதா, ம்ருத்யு, இந்த்ரன், வஸிஷ்டர், ஸாரஸ்வதர், த்ரிதாமா, த்ரிசிகர், பரத்வாஜர், அந்தரிக்ஷர், வர்ணீ, த்ரய்யாருணி, தநஞ்ஜயர், க்ரதுஞ் ஜயர், ஜயர், கௌதமர், ஹர்யாத்மா, வாஜஶ்ரவஸ், ஸோம சுஷ்கரயணர், த்ரிணபிந்து, ரிக்ஷர், வால்மீகி, சக்தி, பராசரர், ஜாதுகர்ணி, (மஹா விஷ்ணுவின் அம் ஶம்) இவர்கள் இதுவரை வேத வ்யாஸராகத் தோன்றிய வர்கள். இனி அடுத்துவரும் த்வாபரத்தில் அச்வத்தாமா வ்யாஸராக அவதரிப்பார். வ்யாஸர் எனில் வேத புரா ணங்களைப் பிரிப்பவர் என்று பொருள். இது ஒரு அதி காரப்பதவி. மஹா விஷ்ணுவைத்தவிர வேறுயார் மஹா பாரதத்தை இயற்றுவீர்?

## வேதப்பிரிவு.

வேதத்திலுள்ள சந்தஸ் வடிவமான பாகங்களை ரிக் வேதமாக வகுத்தார். பைலர் எனும் சிஷ்யன் மூலமாக அதை ப்ரசாரம்செய்தார். தேவதைகளை யாகத்திற்கு

வரும்படி அழைப்பவர் ஹோதா. அவருக்கேற்ற மந்த்ரங்கள் இதில் இருப்பதால் இதை ஹோத்ரு காண்டம் என்பர். யஜமானனுக்காக ஸகலவேலைகளையும் செய்பவர் அத்வர்யு. அவருக்கு ஏற்ற மந்த்ரங்கள் யஜுர்வேதத்தில் இருக்கின்றன. அதை ஆத்வர்யவ காண்டம் என்பர். யஜுர்வேதத்தைப் பிரித்து வைசம்பாயனர் மூலமாக வ்ருத்திசெய்தார். யாகத்தில் ஹவிஸ்ஸை ஏற்றுக்கொள்வதற்காக வந்த தேவர்களைப்பாடி ஸந்தோஷப்படுத்துவது ஸாமவேதம். அதைக் கூறும் உத்காதா என்பவற்கேற்ற காநம் இருப்பதால் ஔத்காத்ரு காண்டம் என்பர் அதை. அதை ஜைமினி மூலமாக விருத்திசெய்தார். இம்மூன்று வேதங்களில் உள்ளதையும் அதர்வவேதத்தையும் அறிந்து ப்ரும்மா என்பவர், கர்மாவைக் கவனிப்பார். யாகத்தில் ஈடுபட்ட அத்வர்யு ஹோதா உத்காதா, ப்ரும்மா, என்ற நால்வருக்கும் சதுர் ஹோதா என்று பெயர். அரசர்க்கு வேண்டிய சாந்திகர்மா, புஷ்டிகர்மா, ஆபிசாரகர்மா முதலிய புரோஹிதர் செய்யவேண்டியதைக் கூறுவது அதர்வ வேதம்.

## சுக்ல யஜுர்வேதமும், யாக்ஞ்ய வல்க்யரும்.

இங்ஙனம் பிரித்து அளித்த வேதத்தை முதல் சிஷ்யர் நால்வரும் தன் தன் சிஷ்யர் மூலமாக பல சாகைகளாகப் பிரித்து எல்லோருக்கும்கற்க எளிதாகும்படிசெய்தார்கள். யஜுர்வேதம் தைத்திரீயக்ருஷ்ணயஜுஸ் என்றும் சுக்ல யஜுஸ் என்றும் இரு பிரிவுள்ளது. யஜுர்வேதத்தின் சாகை நூற்றொன்றும். ப்ரும்மராதரது புத்ரர் யாக்ஞ்ய வல்க்யர். வைசம்பாயனரது சிஷ்யரிவர். ஒரு ஸமயம் முனிவரனைவரும் ஒன்றுகூடி மஹாமேருமலையில் ஏழு நாட்களுக்குள் எல்லோரும் வரவேண்டும். அப்படிவராதவர் ப்ரும்மஹத்தி தோஷத்திற்கு ஆளாவார், என்று ஒரு ஏற்பாடு செய்தனர். வைசம்பாயனர் குறித்த காலத்தில் போகவில்லை. அவரது ஸஹோதரி புத்ரன் அவரைக் காலால் உதைத்துவிட்டான். கோபத்தினால் அவனை முனிவர் அடிக்க அவன் இறந்தான். அவர் தனது பாப மகல தனக்காக சிஷ்யர்களை ப்ராயச்சித்தம் செய்து கொள்ளும்படி கூறினர். யாக்ஞ்ய வல்க்யர், குரோ!

அல்பசக்தியுள்ள மற்றவர்கள் ஏன் கஷ்டப்படவேண்டும்? நான் ஒருவனே செய்கிறேன் இதை என்ருர்.

கோபங்கொண்ட குரு, ப்ராம்மணுவமானம் செய்த நீ எனது சிஷ்யனல்ல. கற்றவித்யைகளைக் கக்கு என்ருர். அவரும் அவைகளைக் கக்கிச்சென்ருர். மற்றவர் தித்திரி என்ற பறவைகளாகி அவைகளைக் கொத்தி எடுத்தனர். ஆதலால் தைத்திரீயம் எனப் பெயர் பெற்றது அந்த வேதம். யாக்ஞ்யவல்க்யர் ஸூர்யனைத் துதித்தார். குதிரைரூபம் எடுத்து ஸூர்யன் அவர் கோரியபடி அயாத யாமம் என்ற யஜுஸ்ஸை உபதேசித்தார். அதனுல் அது வாஜஸநேய சாகை என்றும் சுக்ல யஜுஸ் என்றும் அழைக்கப்படுகிறது. ஜைமினி முனிவர் தன் புத்ரரான ஸுமந்து மூலம் ஆயிரம் சாகை உள்ள ஸாமவேதத்தை ப்ரசாரம் செய்தார். ஸுமந்து அதர்வ வேதத்தை ப்ரசாரம் செய்தார். நாலு லக்ஷம் சுலோகமுள்ள பதினெட்டு புராணங்களைச்செய்து ரோமஹர்ஷண ஸூதரிடம் அளித்தார் வ்யாஸர். நான்கு வேதங்கள் சீக்ஷாவ்யாகரணம் சந்தஸ் நிருக்தம் ஜோதிஷம் கல்பம் என்ற ஆறு அங்கங்கள். மீமாம்ஸை, ந்யாயம் தர்ம சாஸ்த்ரம் புராணம் என்ற நான்கு உப அங்கங்கள் சேர்ந்து பதினான்கு வித்யைகள். ஆயுர்வேதம் கந்தர்வ வேதம் தநுர்வேதம் அர்த்த சாஸ்த்ரம் இவைகளைசேர்த்து பதினெட்டு வித்யைகளாம்.

## யமயாதனையை அகற்றுவது பகவன் நாம:

பகவத்ஆராதநக்ரமம் வர்ணுச்ரமதர்மம் நித்ய நைமித்திக காம்யகர்ம, விவாஹவிதி, ஸந்த்யாவந்தநம், ஶ்ராத்தம் முதலியவைகளை விவரிக்கின்ருர். வேதோக்த தர்மத்தைக்கொண்டு கொழுத்த அஸுரர்கள் லோகத்தை ஹிம்ஸித்தனர். அதை அகற்ற விஷ்ணுவினிடமிருந்து மாயா மோஹம் என்பவர் திகம்பரராகத்தோன்றி நாஸ்திக தர்மத்தை உபதேசித்தார். அதனுல் அஸுரர் வேத கர்மாக்களை விட்டு தாங்களும் அழிந்தார்கள். கர்மாக்களை விட்டவர் பாஷண்டராவர். வைதிக கர்மகாலத்தில் பாஷண்டரைக் கண்ணுல்கூட காணக்கூடாது. சததநுஸ் என்ற வேந்தன் உத்தம பத்நியான ஸைப்யை என்பவளுடன் ஒரு ஸமயம் மஹாவிஷ்ணுவை ஜப ஹோம பூஜை

முதலியவைகளால் ஆராதித்தார். பூஜா காலத்தில் வந்த ஒரு பாஷண்டியைக் கண்டு தன் குருவின் நண்பன் என்று அவனுடன் பேசினான் மன்னன். சாஸ்த்ரமறிந்த ஸைப்யை அவனைக்கண்ட பாபம் அகல ஆதித்யனைப் பார்த்து அவனுடன் பேசாதிருந்தாள். அரசன் இறந்த போது அவளும் உடன்கட்டை ஏறினாள். கர்ம காலத்தில் பாஷண்டியுடன் பேசிய தோஷத்தால் அவன் நாயாகப் பிறந்தான். அவள் காசிராஜ கன்னிகையானாள். முற் பிறவி நினைவும் பெற்றாள். தந்தை அவளுக்கு விவாஹ நிச்சயம் செய்தபோது இவரே என் பதிஎன அந்த நாயை லாலனை செய்தாள். அவர் செய்த அபசாரத்தை நினை வூட்டினாள். அவ்வுடலைவிட்டு நரி ஓநாய் கழுகு காக்கை கொக்கு மயில் என பல பிறவிகளைப் பெற்றார். காசி ராஜகன்யகை அவரைத் தொடர்ந்து நினைவூட்டி முடிவில் ஜநகராஜனது அஶ்வமேத அவப்ருதத்தில் ஸ்நாநம் செய் வித்தாள். அவர் ஜநகன் புத்ரனாகவே பிறந்தார். ஆத லால் பாஷண்டனுடன் பேசாதே என்ற நீதியைப் போதித்து மூன்றும் அம்சத்தை முடிக்கிறார். இதில் பசு, பக்ஷி மிருகங்கள் இறந்தவுடன் லோகாந்தரம் செல்லாமல் உடனே மறு ஜன்மா எடுக்கின்றன. மநிதரே ஸ்வர்க்க, நரகம் சென்று புண்ய பாப பயனை அனுபவித்து பல ஆண்டுகளுக்குப்பின் வேறு பிறவி எடுக்கின்றனர்.

## 4-வது அம்சம்.

ஸூர்ய வம்சத்து அரசர்களை வர்ணிக்கிறார். இவ்வம் சத்தில் தோன்றுபவர் மஹாவீரர். மண்ணுலகில் மாத்திர மின்றி விண்ணுலகிலும் இவர் பெருமை பரவிற்று. அடிக் கடி அரக்கரை வெல்ல இந்த்ரன் இவர்களை அழைப்பான். ரேவதன் என்ற வேந்தன் தன் பெண்ணான ரேவதிக்கு வரம்கேட்க பிரும்மலோகமும் சென்றான். பலராமனுக் குப் பெண்ணைக்கொடு என்று பிரும்மா கூற அதற்குள் பூமியில் க்ருதமும் த்ரேதையும் சென்று த்வாபரம் வந்தது. மற்றொரு மன்னன் ஶக்ரனைக் காளையாக்கி அதன் கொண்டைமீதமர்ந்து ராக்ஷஸர்களைக் கொன்றான். ககுத் என்ற கொண்டைமீதிருந்ததால் ககுத்ஸ்தன் எனப் பெயர் பூண்டான். மற்றொரு மஹீபதி புத்ரன் பிறப்பதற்காக வைத்திருந்த தீர்த்தத்தை அருந்தி கர்ப்பவான் ஆனான்.

வஸிஷ்டர் மந்த்ரசக்தியால் புருஷ கர்ப்பத்திலிருந்த குழந்தையை வெளியில் எடுத்தார். ஆனால் யாரிடம் பால் பருகும்? என்று கேட்டபோது, தேவேந்த்ரன் மாம்தாஸ்யதி என்று தன்விரலைக் காட்டினார். அதை அருந்தி மாந்தாதா என்ற பெயர் பெற்றான். அதிலிருந்து குழந்தைகள் விரலைச் சப்பும் வழக்கம் உண்டானது.

## ஸௌபரி சரிதம்.

வெளியிலிருந்தால் தவத்திற்கு விக்நம் ஏற்படும் என ஸௌபரி ஜலத்திலிருந்து தவம்செய்தார். ஆங்கு தன் புத்ர பௌத்ரர்களுடன் ஸஞ்சரிக்கும் மீனைக் கண்டார். அந்த ஸங்கம் காமத்தை உண்டுபண்ணிற்று. மணம்புரிந்து மக்களைப் பெற்று மகிழ மநம் கொண்டார். மாந்தாதாவுக்கு 50 பெண்கள். ஒரு பெண் கொடுக்கும்படிக் கேட்டார். கிழவரை ஏழை ப்ராம்மணனை விரும்பும் கன்யகையைத் தருகிறேன் என்றானவன். ஸௌபரி இளம் சிங்கமாகி அந்தப்புரம் சென்றார். அனைவரும் அவரையே விரும்ப அரசனும் அவர்களை அளித்தார். முநிவர் தவத்தால் மாளிகைக் கட்டினார். ஐம்பது உடல்களை எடுத்து அனைவரிடமும் ரமித்தார். புத்ர பௌத்ரர்களைப் பெற்றார். பெரும் வாழ்வு வாழ்ந்தார். வாழ்விலே தாழ்வும் உண்டல்லவா? ஒரு குழந்தை இறந்தது. ஒரு பெண் விதவை யானாள். ஒருவள் நோய்வாய்ப் பட்டாள். ஒருவளுக்குப் புத்ரனில்லை. முநிவர் மநதிற்கு நிம்மதி இல்லை. ஸம்ஸார ஸுகத்தைச் சுவைத்தார். வெறுப்புண்டானது. ஸங்கமல்லவோ என்னை இப்பாடு படுத்தியது? யோகியின் மநதையே கொள்ளைகொண்ட காமம் போகியைக் கெடுப்பது ஆச்சர்யமா? என ஸம்ஸாரக் கடலிலிருந்து கரை ஏறினார்.

த்ரிசங்கு, ஸகரன், ஸகர அச்வமேதம், ஸாகரர் கபிலரால் சாம்பலானது, அம்சுமான், திலீபன், பகீரதன், அஜன், தசரதன், ராமன் நிமிஜநகன் முதலியவர் சரிதத்தைக்கூறி சந்த்ர வம்ச அரசர்களையும் வர்ணிக்கிறார். புதன் உர்வசீ புரூரவஸ் ஜமதக்நி விஸ்வாமித்ரர் சுநச்சேபன் மதுக்கந்தஸ் நகுஷன், ரஜி, யயாதி, பூரு யாதவருக்கு யயாதி சாபம், யாதவ வம்சம், வ்ருஷ்ணி வம்சம்,

க்ரோஷ்டுவம்சம், குந்தி, ஜ்யாமகவம்சம், ஸத்வதவம்சம், ஸத்ராஜித், ஸ்யமந்தகமணி, அக்ரூரர், உக்ரஸேநன், தேவகன், கம்ஸன், சிசுபாலன், சிசுபாலன் ஹிரண்யாக்ஷனாகவும் ராவணனாகவும் இருந்தது, துர்வஸு, துஷ்யந்தன், த்ருஹ்யு, அநுவம்சம், அங்கராஜன், ஹஸ்தி, ஹஸ்திநாபுரம், திவோதாஸன், மாகதவம்சம், பாண்டவர், அபிமன்யு, பரீக்ஷித்வரை ராஜ பரம்பரையையும் சில வீரர்களது சரிதத்தையும் வர்ணித்தார்.

அதன்பின் பிறக்கப்போகும் அரசர்களது சரிதத்தையும் க்ஞாந த்ருஷ்டியா லறிந்து கூறினார். ஜநமேஜயன் சதாநீகன் அச்வமேததத்தன் அதிஸீமக்ருஷ்ணன் நிசக்ரு இவர் காலத்தில் கங்கை அஸ்திநாபுரத்தை அழித்தது. பிறகு கௌசாம்பீ நகரத்தில் வஸிப்பார்கள். உஷ்ண- விசித்ரரத, வ்ருஷ்ணிமான், ஸுஷேண, ஸுநீத, ந்ருப, சக்ஷு, ஸுகி, பல, பாரிப்லவ, ஸுநய, மேதாவி, ரிபுஞ்ஜய, சதாநீக, உதயந, விஹிந சண்டபாணி, நிமித்த, க்ஷேமக, இவருடன் இக்ஷ்வாகு குலம் த்வாபரத்தில் முடியும். கலியில் சிலர் அந்த வம்சத்தில் தோன்ற ஸுமித்ரன் என்பவரே கடைசியாவான். மாகத வம்சம் கலியில் ஓராயிரம் ஆண்டுவரை வளரும். பலாகன் விசாகயூபன், ஜநகன், நந்திவர்த்தநன், நந்தி ஆகியவர் 362 ஆண்டு ராஜ்யபாரம் செய்வர். மஹாநந்தி என்ற க்ஷத்ரியன் சூத்ர ஸ்த்ரீ மூலம் தனது வம்சத்தை விருத்தி செய்வான். அதில் மஹாபத்மநந்தன் என்பவன், பூமியையெல்லாம் ஒரு குடையின்கீழ் ஆள்வான். பரசுராமர் போல் வீர்யம் உள்ளவனவன்.

கௌடில்யன் என்ற சாணக்யன் நவநந்தர்களை அழித்து சந்த்ரகுப்தனை அரசனாக்குவார். இவனைச் சார்ந்தவர் மௌர்யர் எனப்படுவர். அவர்களுக்குப் பின் சுங்கர் ஆளுவர். புஷ்யமித்ரனே அவர்களில் முதல்வன். பிறகு ஆந்த்ரர் யவநர் துருஷ்கர் சூத்ரர் ஆகியவர் பூமியை ஆளுவர். பிறகு உலகில் அன்பு அல்பமாகும். அரசரது கோபம் அதிகமாகும். தர்மம் குறையும். அதர்மம் அதிகமாகும். தநமுள்ளவனே அதிகாரி. மநதிற்குப்பிடித்தவளே மனைவி. ஸ்த்ரீபோகமே போகம். பொய்யே வ்யவஹாரத்தில் ஜயிக்கும் ஸாதநம். பூநூலுள்ளவனே ப்ராம்மணன்.

பயமின்றி உரக்கப் பேசுபவனே பண்டிதன். அந்யாயமே ஜீவநஹேது. ஏழையே ஸாது. வேஷதாரியே ஸத்பாத்ரம். பலவானே ராஜா. குளிர் மழை வெய்யில் ராஜாங்க வரி பொருக்கமுடியாமல் குடிகள் நாட்டைவிட்டு ஓடுவர். கந்தமூலம் சிறகுகளே உணவாகும். 23 ஆண்டு கூட ஜீவித்திரார் நரர்.

கலியின் முடிவில் தர்மம் சிதைந்தபோது சம்பள க்ராமம் என்ற ஊரில் விஷ்ணுயசஸ் என்ற ப்ராம்மணோத்தமனுக்குப் புதல்வனுக அவதரிப்பார் பகவான். கல்கி என்ற பெயர் தாங்கி பாபிகளைக் கொன்று தர்மயுகத்தை ஸ்தாபிப்பார். சந்த்ரன் ஸூர்யன் ப்ருஹஸ்பதி என்ற மூவரும் புஷ்யத்தில் ஒரே ராசியில் இருக்கும் பொழுது க்ருதயுகம் பிறக்கும். க்ருஷ்ணன் உடலை விட்டு வைகுண்டம் சென்ற திநமே கலி பிறந்த நாள். "எத்தனை ராஜர் தோன்றினர். எத்தினை பேர் பூமி என்னுடையது என அஹங்காரம் கொண்டவர்? எத்தினை மன்னர் மண்மீது மடிந்தனர்? மண்ணுக்காக மகனைக் கொல்லுபவர் எத்தினை? பெற்ற தந்தையைக் கொல்லும் தநயன் எத்தினை? உடன்பிறந்தானைக் கொல்பவன் எத்தினை? இவர்களைக் கண்டு எனக்குச் சிறிப்பே வருகிறது" என்ற இந்த பூமி கீதியைக் கேட்பவர் நற்கதி பெறுவர்.

## 5-வது அம்சம்.

38 அத்யாயங்களால் பாகவத தசம ஸ்கந்தத்தில் உள்ள ஸ்ரீ க்ருஷ்ண சரிதத்தையே பூர்ணமாக வர்ணிக்கிருர். அதைப் பெரும்பாலும் அனைவரும் அறிவர். விசேஷமானதை மட்டில் இங்கு கூறலாம். பூதேவி பகவானிடம் க்ருஷ்ணன் கொல்லவேண்டிய ஸகல ராக்ஷஸர்கள் பெயர்களையும், பல அக்ஷோஹிணீ ஸேனைகளால் உண்டாகும் துன்பத்தையும் முறையிடுகிருள். பகவான் தனது கேசத்தில் கறுப்பான ஒன்றையும் வெளுப்பான ஒன்றையும் எடுத்து இவை பூமியில் க்ருஷ்ண அர்ஜுநர்களாக அவதரித்து உன் சுமையைக் குறைக்கும் என்ருர். தனது யோக நித்ரையை அழைத்து பாதாளத்திலுள்ள ஷட்கர்ப்பர்களைத் தேவகீ புத்ரராகப் பிறக்கச் சொல். நான் க்ருஷ்ணாஷ்டமியில் ஜநிக்கிறேன். நீ க்ருஷ்ண நவமியில் யசோதையிடம் அவதரி என்ருர்.

பகவ தவதாரம் லீலைகள் பூதனை முதலியவர்களைக் கொல்வது அக்ரூரர் மதுரைக்கு அழைத்துச் செல்வது, கம்ஸவதம், குருகுல வாஸம், ருக்மிணீ முதலிய எட்டு மஹிஷிகளை மணப்பது, த்வாரகா நிர்மாணம், முசுகுந்தனுக்கு அருள்புரிவது, நரகாஸுர வதம், பாரிஜாத ஹரணம், ப்ரத்யும்ந ஜநநம், உஷா பரிணயம், பௌண்ட்ரக வாஸுதேவனைக் கொல்வது, பலராம பராக்ரமம், ஸாம்ப சரிதம், யாதவ ஸம்ஹாரம், ஜரன் என்ற வேடனால் அடிபட்டு பகவான் வைகுண்டம் செல்வது, அர்ஜுனன் யாதவர்களுக்கு ஸம்ஸ்காரம் செய்து வஜ்ரனையும் பரீக்ஷித்தையும் அரசர்களாக்கி தானும் ஸ்வர்க்கம் செல்வது வரை இதில் சுருக்கமாக வர்ணிக்கிறார்.

## 6-வது அம்சம்.

### கலியின் பெருமை.

கலியுகத்தில் தர்மம் குறைந்து அதர்மம் அதிகமாகும். அது பாபயுகம் என்று வர்ணித்தார். ஒரு ஸமயம் மஹர்ஷிகளனைவரும் ஒன்று சேர்ந்து ஸ்வல்ப புண்யத்தால் பெரும் பாக்யம் உண்டாகும் காலம் எது? என வ்யாஸரைக் கேட்பதற்காகச் சென்றார்கள். அவர் கங்கையில் ஸ்நாநம்செய்யக்கண்டு அது முடிந்தபின் பேசுவோம் என காத்திருந்தனர். இதை ஸர்வக்ஞரான வ்யாஸர் அறிந்தார். அவர்கள் கேட்பதற்கு முந்தியே பதில் கூறினார். முதல் ஸ்நாநம் செய்து எழுந்தவுடன் "கலிஸ்ஸாது" என்றார். மறுமுறை முழுகி எழுந்து "சூத்ரஸ் ஸாது" என்றார். மூன்றும் முறை "ஸ்த்ரிய: ஸாதுதன்யா:" என்றார். இவை தங்களுக்காகவே கூறப்பட்டன என்றுணர்ந்து அநுஷ்டாநம் முடிந்தபின் இதை விளக்கிக் கூறும்படி கேட்டனர். மற்ற யுகங்களில் பல்லாண்டு பாடுபட்டுத் தேடும் புண்யத்தைக் கலியில் ஸ்வல்ப காலத்தில் அநாயாஸமாகச் செய்து ஸத்கதி அடையலாம் என்றார். த்யாநம் யாகம் பூஜை இவைகளால் முறையே மூன்று யுகங்களில் கிடைக்கும் புண்யத்தைக் கலியில் கேசவனது நாமாவைக் கூறியே அடையலாம். ஆதலால் கலி ஸாது.

யாதொரு கஷ்டமுமில்லாமல் சூத்ரர் ப்ராம்மணருக்கும், ஸ்த்ரீகள் கணவனுக்கும் பணிவிடைசெய்து விரைவில்

நற்கதி பெறலாம். ஆதலால் அவர்களும் தன்யர் ஸாது என்றார். அவாந்தரப்ரளய, மஹாப்ரளய ரீதியைக்கூறினார்.

## கேசித்வஜ காண்டிக்ய சரிதம்.

காண்டிக்ய ஜநகன் என்ற அரசன் கர்ம மார்க்கத்தில் ஈடுபட்டவன். பற்பலயாகங்களைச் செய்து நன்றாகராஜ்ய பரிபாலநம் செய்துவந்தான். அதே ஸமயத்தில் கேசித்வஜன் என்ற அரசன் வேதாந்த விசாரம் யோகம் இவைகளில் ஈடுபட்டு ஸ்வதர்மத்தை விடாமல் ராஜ்ய பரிபாலநம் செய்துவந்தான். க்ஷத்ரிய தர்மப்படி ஒரு ஸமயம் இருவர்க்கும் யுத்தம் நடந்தது. கேசித்வஜன் வெற்றிபெற்றான். காண்டிக்யன் ராஜ்யத்தை விட்டுவிட்டு மந்த்ரி புரோஹிதர் மனைவி மக்கள் இவர்களுடன் காட்டிற்குச் சென்று காலங்கழித்து வந்தான். கேசித்வஜன் வழக்கப்படி ஒரு யாகம்செய்தான். அதில் ஹவிஸ்ஸைத் தரும் பசுவை ஒரு புலி கொன்றுவிட்டது. அதற்கு ப்ராயச்சித்தம் என்ன? என்று பெரியோர்களை விசாரித்தான். அவர்கள் நாங்கள் அதை அறியோம். கசேரு எனும் முநிவரைக்கேள் என்றார்கள். அவர் நானும் அறியேன். ப்ருகுவம்சத்தில் பிறந்த சுநகரைக்கேளென்றார். அவரிடம் அரசன் சென்றான். அவர் ஒருவரும் இதை அறியார். ஆனால் ராஜ்யத்தைவிட்டு காட்டில் உள்ள காண்டிக்ய ஜநகர் ஒருவரே அறிவார் என்றார். அரசன் க்ருஷ்ணாஜிந மணிந்து ரதத்திலேறி காண்டிக்யரிடம் சென்றார். அவரது மந்த்ரிகள் நம்பகைவன் ஸாதுவேஷம் பூண்டுவருகிறான். ராஜ்யத்தை அபகரித்ததுமல்லாமல் தங்களையும் கொல்லவருகிறான். ஆதலால் அவருடன் போர்புரிவோம், என்றார்கள். காண்டிக்யர் அதைமறுத்து கேசித்வஜனை வரவேற்று அவன் கேட்ட ப்ராயச்சித்தத்தைக் கூறினார். மன்னனும் வேள்வியைமுடித்துத் தனக்கு ப்ராயச்சித்தம் கூறியவர் குருஆவார். அவருக்குத் தக்க தக்ஷிணை தரவேண்டும் என்று மறுபடியும் ராஜ பரிவாரத்துடன் வந்தான். காண்டிக்ய மந்திரிகள் முன்போல் அவனுடன் போர் புரியும்படி கூறினர். காண்டிக்யன் அதை ஏற்காமல் சத்ரு நம்மைக்கொல்வானோ என்ற அச்சத்தைவிட்டு அவரை வரவேற்றார்.

கேசித்வஜன் உமக்குக் குருதக்ஷிணை என்ன வேண்டும்? எதைக்கேட்டாலும் அளிப்பேன் என்றார். மந்திரிகள் ராஜ்யத்தைத் தரும்படி கேட்கச் சொன்னார்கள். காண்டிக்யரோ ஸ்வல்ப ஸுகத்தைத்தரும் ராஜ்யத்தை விரும்பவில்லை. வேதாந்த வித்யையைத்தனக்கு உபதேசிக்கும்படி வேண்டினார். கேசித்வஜன் அதையும் கூறி அவரது ராஜ்யத்தையும் தந்தார். இருவரும் தம் புத்ரரிடத்தில் ராஜ்யத்தை அளித்து யோக மார்க்கத்தால் முக்தி பெற்றனர்.

இங்கு க்ஞான யோகத்தை மிகஅழகாக வர்ணிக்கிறார். இத்துடன் விஷ்ணு புராணம் பூர்வபாகம் முடிகிறது. விஷ்ணு புராணத்தில் கதைகளைவிட பக்திவைராக்யம் க்ஞானம் முதலியவைகளே சிறப்பாகக்கூறப்படுகின்றன. கடைசியிலுள்ள ஹரிஸ்தோத்ரம் மிக ரஸமானது.

**பூர்வ பாகத்திலுள்ள சில ரஸமான துணுக்குகள்.**

ஸௌபரி முனிவர் வாயிலாகவும் ஜடபரதர் ரஹூகணன் மூலமாகவும், ரிபுநிதாகர் மூலமாகவும், கேசத்வஜ காண்டிக்யர் மூலமாகவும், வைராக்யத்தை விளக்குகிறார். ஆசையைக் கண்டிக்கிறார். ஸதாசாரத்தைப் போற்றுகிறார். சுத்த அத்வைதத்தை ஸ்பஷ்டமாக வர்ணிக்கிறார். ஆதலால்தான் அத்வைதாசார்யர் மற்ற புராணங்களைவிட விஷ்ணு புராணத்திலிருந்தே பல ச்லோகங்களை உதாஹரணமாகக் காட்டுகிறார்.

பல்லாயிரம் ஆண்டுகள் ஆனாலும் மநிதனது மனோரதம் முடிவதில்லை. ஒரு மனோரதம் பூர்த்தியானவுடன் மற்றொரு மனோரதம் தோன்றும். அதற்கு முடிவு என்பதே கிடையாது. ஆதலால் ஸங்கல்பமே செய்யாதே.

ஸங்கம் இல்லாமையே முக்திக்குவழி. ஸங்கத்தால் பற்பல தோஷங்கள் உண்டாகும். யோகாருடனே ஸங்கத்தால் கீழே விழுவான் என்றால் த்ருடபுத்தி இல்லாதவரைப்பற்றி கேட்கவேண்டுமா?

பரமாத்மா எங்கும் நிறைந்தவர். சிவன் விஷ்ணு ப்ரும்மா என்ற பேதத்தால் வெவ்வேறாகக் காணப்படுகிறார். என்றாலும் அவர் ஒருவரே ஆவர். எங்கும் இருக்

கிறது வாயு, வேணுவின் த்வாரத்தில் ஒவ்வொரு விரலை வைத்து எடுக்கும்போதும் வெவ்வேறு ஸ்வரம் பேசுகிறது. எல்லாம் ஒரே காற்று அல்லவா?

உலகில் காணப்படுவதெல்லாம் ஒரே அச்யுதனுடைய ரூபமே யாகும். அவனைத்தவிர வேறுவஸ்து கிடையாது. அந்த அச்சுதன் நானே. நீயும் அச்சுதனே. எல்லாம் ஒரே ஆத்மஸ்வரூபமே. பேதத்தையும் மோஹத்தையும் விடு.

ஆசைக்கு யார் அடிமையோ அவர் உலகிற்கெல்லாம் அடிமையாவர். ஆசை யாருக்கு அடிமையோ அவருக்கு உலகெலாம் அடிமையாகும்.

அச்வத்தம் ரவி கங்கை நைமிஷாரண்யம் ப்ரயாகம் ப்ரும்ம தீர்த்தம் தண்டகாரண்யம் இவைகளை நினைத்தாலும் கூறினாலும் துஸ்வப்நம் தோன்ருது. (கலிதோஷங்களுக்கெல்லாம் நிதி. ஆயினும் அதில் ஒருபெரிய குணம் உண்டு. பகவன்நாமாவைப் பக்தியுடன் கூறினால் உடனே பக்தியையும் முக்தியையும் தரும்.

உபவாஸம் வேதபாராயணம் கூஶ்மாண்டஹோமம் முதலியவை பாபத்தைஅகற்றும் ப்ராயச்சித்தங்களாகும். இவை எல்லா வற்றையும்விட க்ருஷ்ணனை நினைப்பது உயர்ந்த ப்ராயச்சித்தமாகும். கூச்மாண்டம் என்ற மந்த்ரங்களைக்கூறி செய்யும் ஹோமம் அது. (பூஷிணிக்காய் என்ற பொருளில்லை இங்கு.)

உபநிஷத் வாக்யங்கள் எல்லாம் இங்கு ஶ்லோகரூபமாகக் கூறப்படுகின்றன.

## விஷ்ணு தர்மோத்தரம்.

ஆறு அம்சங்கொண்ட பூர்வபாகத்தைவிட இது மிகமிகப் பெரியது. 783 அத்யாயம் உள்ளது. 126 அத்யாயங் கொண்ட பூர்வ பாகத்தைவிட ஆறுமடங்கு அதிகமானது. பாரதத்தைப் பட்டாபிஷேகம் வரை படித்து அதற்கு மேலுள்ள அரிய விஷயங்களைப் படிக்காததுபோல் பூர்வ பாகத்தை மாத்ரம் படித்து விஷ்ணு புராணம் படித்தாய் விட்டது என சிலர் கருதுவர். உத்தரபாகத்தில் மிக

மிக அபூர்வமான விஷயங்கள் இருக்கின்றன. சுருங்கச் சொல்லின் ஸகல சாஸ்த்ரங்களுக்கும் மூலமது. மூன்று கண்ட வடிவமாகஅமைந்தது. முதல் கண்டத்தில் பரம சிவன் பரசுராமருக்குப் பதிநான்கு அத்யாயங்களால் பரம ரஹஸ்யமான தத்துவங்களைக் கூறுகிறார். அது சங்கர கீதை எனப்படும். அதேபோல் மஹா விஷ்ணு தர்மம் மறைவதைக்கண்டு ஹம்ஸ ரூபமெடுத்து 115 அத்யாயங்களால் ஸகல தர்மங்களையும் உபதேசிக்கிறார். அது **ஹம்ஸ கீதை** எனப்படும்.

விசேஷமாக வேதாந்தம் ஜோதிஷம் காவ்யம் நாடகம் ஸங்கீதம் வைத்யம், நாட்யம் சில்பம் சித்ரம் அர்த்த சாஸ்த்ரம், வர்ண ஆச்ரம தர்மம் யோகம் தர்ம சாஸ்த்ரம் பக்தி அறுபத்து நான்கு கலைகள் தேவர் அஸுரர் கந்தர்வர் முனிவர் இவர்கள் வஸிக்கும் இடம், இவர்களுக்கு ப்ரியமான ஆஸநம் ஆஹாரம் படுக்கை வேஷம், தேவதா மந்த்ரங்கள் அவர்களை ஆராதிக்கும் வகை, நதிகள் மலைகள் வநங்கள் த்வீபங்கள் கண்டங்கள் சங்கநிதி முதலிய நவநிதிகள் நக்ஷத்ர ராசிகள் நவக்ரஹங்கள் அவர்களை ஆராதிக்கும் வழி ச்ருங்காரம் முதலிய நவ ரஸங்கள், யோகத்தின் அஷ்டாங்கம், காலத்தின் அளவு ஹரிஹர அபேதம் கோத்ர ரிஷிகள் ப்ரவரம் எந்தெந்த கோத்ரம் எந்தெந்த கோத்ரத்துடன் விவாஹம் செய்துக் கொள்ளலாகாது, எத்தனைவகை ச்ராத்தம், அதை அனுஷ்டிக்கும் வகை, பலன், வாஸ்து சாஸ்த்ரம், யானை குதிரை பசு முதலியவைகளுக்கு வைத்யம் வ்ரதாநுஷ்டாநம் தாநம் ஸர்வ பாபங்களையும் போக்கக் கூடிய சாந்த்ராயணம் முதலிய க்ருச்ரங்கள், எந்தெந்த பாபத்தினால் என்னென்ன நோய் உண்டாகிறதென்ற கர்மவிபாகம் தநுர்வேதம் முதலிய எண்ணிறந்த விஷயங்களைக் காணலாம் இதில்.

**அரிய விஷயங்கள்.** பலநூற்றாண்டுகள் அழியாதபடி ஸ்வர்ணம் வெள்ளி இவைகளை த்ரவமாக்கி வர்ணங்களுடன்சேர்த்து சித்ரம் எழுதும்வகை இங்கு வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அஜந்தா சித்தன்னவாசல் முதலிய குகைகளில் இதனால் எழுதப்பட்ட சித்ரம் எத்தனையோ ஆண்டுகள் சென்ற பின்னும் அழியாமலிருக்கின்றன.

நவநாகரீகத்திலும் விக்ஞாநத்திலும் முழுகியுள்ள பல மேனாட்டார் இவைகளைக் கண்டு ஆச்சர்யப்படுவதுடன் எப்படி இதை அமைத்தனர் என்று அறிய முடியாமல் ஆச்சர்யம் அடைகின்றனர். இங்ஙனம் பல விஷயங்கள் உள.

மஹாவிஷ்ணு சிவனைப்போல் நெற்றிக்கண் உள்ளவராக இருக்கிறார் என்பதன் மூலமாக சிவ விஷ்ணு அபேதத்துடன் ஒரே மூர்த்தி பல உருவங்களைக் கைகொள்கிறார் என்ற உபநிஷத் தத்வத்தை விளக்குகிறார்.

மோஹினியின் உடலில் ப்ரஹ்லாதன் விஶ்வரூபத்தைக்கண்டு வியந்தான்.

ஒவ்வொரு மன்வந்தரத்திலும் லக்ஷ்மீ தேவி பூமியில் பல அவதாரம் செய்கிறாள்.

வேநன் நாஸ்திகத்தைப் பலயுக்திகளுடன் ஸாதிக்கிறான். மார்க்கண்டேயர் யுத்திகளைக்கொண்டே நாஸ்திகத்தை அகற்றி ஆஸ்திகத்தை நிலை நாட்டுகிறார். இந்த இடம் படிப்பவருக்கு மிகரஸமானது. ஆணித்தரமான பதில்கள் உள.

பசியில்லாவரம். சிகித்ஸா ப்ரகரணத்தில் அத்யாச்சர்யமான வீஷயங்கள் இருக்கின்றன. சில ஒஷதிகளைக் கொண்டு மாஸக்கணக்காக பசி தாஹம் இல்லாமலிருக்கலாம்.

விஷத்தை அகற்றும் குடிகைகள்.

நெருப்பு வீட்டில் பற்றாதபடி லேப உபாயங்கள்.

ப்ரஸவ காலத்தில் ஆபத்துவராதபடி ஸுகப்ரஸவம். முதலிய விஷயங்களை ஆராய்ச்சிசெய்து அநுஷ்டாநத்திற்குக் கொண்டுவந்தால் விக்ஞாநத்தில் சிறந்த நாடெல்லாம் பாரததேசத்திற்கு அடிபணியும். ஸ்வல்பசெலவில் பெரிய கார்யங்களைச் செய்யலாம்.

பரதநாட்டியம் பாவம் ராகம் தாளம் இவைகளுடன் அந்தந்த தேவதைகளின் நிலையைக்காட்டித் அவர்களை ஸந்தோஷப் படுத்தி அவர்கள் அருளைப்பெற வழிகாட்டுகின்றது. இதே மந்த்ர சாஸ்த்ரங்களில் அபிநயத்துடன் நின்று முத்ரை ந்யாஸம் என்ற பெயர்களால் அனுஷ்டிக்கப்படுகிறது. பக்திக்கு ஸாதநம் கீதம் நாட்டியம்

ஸ்தோத்ரங்கள். புராண நடையில் இல்லாமல் மிக கம்பீரமான பத அமைப்பு. ப்ராஸ அநுப்ராஸம். ஸ்ருக்தரா வஸந்த திலகம் முதலிய பற்பல வ்ருத்தங்களில் உள்ள ஸ்தோத்ரங்கள் உள்ளங்கவர்வதுடன் கவிகள் ஹ்ருதயத்தை உருகும்படி செய்கின்றன. சில ஸ்தோத்ரங்கள் கத்ய வடிவமானவை. இவைகளைக் கொண்டே ச்யாமளாதண்டகம் ரகுவீர கத்யம் முதலியன எழுந்தன எனக்கூறலாம். பத்யம் சுலோகரூபமானது. கத்யம் இசையுடன் கூடிய வசநநடை.

இது பக்தி நூலா விக்ஞாந நூலா? நாம் இதைத் தர்மநூல் பக்திநூல் மஹாபுராணம் என்று கொண்டாடினாலும் வில்ஸன் முதலிய மேனாட்டவர் இதைச் சரித்ரத்திற்கு ஆதாரமானது. ஆராய்ச்சிக்குரிய விக்ஞாந நூல் எனக் கருதி ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தனர்.

**ஓம் நமோபகவதே வாஸுதேவாய.**

---

## கலியில் பிறக்கப்போகும் அரசர்கள்.

### (விஷ்ணு புராணம்.)

வ்யாஸர் தனது திவ்ய க்ஞாநத்தால் கலியுகத்தில் யார் யார் பிறந்து பூமியை ஆள்வர் என்பதையும் வர்ணிக்கிறார். அவர் புராணம் எழுதிய காலம் த்வாபர யுகத்தின் கடைசி பாகம். கலி பிறந்ததைக் கண்டு தர்மர் தம்பிமார்களுடன் ஸ்வர்க்கம் சென்றார். பாண்டவ கௌரவ வம்சம் க்ஷீணமானபொழுது அபிமன்யுவின் மனைவியான உத்திரையிடம் உண்டானவர் பரீக்ஷித்தெனும் அரசன். அவரது புத்ரர் ஜநமேஜயன். அவருடைய பிள்ளை சதாநீகர். இவர் யாக்ஞ்ய வல்க்யரிடம் வேதங்களையும் க்ருபரிடம் வில்வித்யையும் கற்பார். வைராக்ய முள்ள சதாநீகர் சௌநக முநிவரிடம் உபதேசம் பெற்று முக்தி பெறுவார்.

சதாநீகரது புத்ரர் அச்வமேத தத்தர், அவரிடமிருந்து அதிஸீம க்ருஷ்ணன் பிறப்பார். அவரது பிள்ளை நிசக்ரு என்பவர். அவரது காலத்தில் அஸ்திநாபுரத்தை கங்கை அழித்துவிடும். நிசக்ரு ராஜன் கௌசாம்பீ என்ற இடத்தில் வஸிப்பான். அவருக்கு உஷ்ணன்

என்ற குமாரனும் உஷ்ணனுக்கு விசித்ரரதன் என்ற புத்ரனும் விசித்ரரதனுக்கு ஶுசிரதன் என்பவனும், வ்ருஷ்ணிமான் ஸுஷேணன் ஸுநீதன் ந்ருபசக்ஷு: ஸுகிபலன் பாரிப்லவன் ஸுநயன் மேதாவி, ரிபுஞ்ஜயன், ஊர்வன் திக்மன் ப்ருஹத்ரதன் வஸுதாஸன், ஶதாநீகன் உதயநன் விஹீநரன் தண்டபாணி நிமித்தன் க்ஷேமகன் ஆகிய இவனுடன் புத்ர பரம்பரை நின்றுவிடும். இத்துடன் கலியில் சந்த்ரவம்சமும் முடிவு அடையும்.

இக்ஷ்வாகு வம்சத்தில் உண்டாகப்போகும் அரசர்: ப்ருஹத்பலன். ப்ருஹத்க்ஷணன் உருக்ஷயன் வத்ஸவ்யூஹன். ப்ரதி வ்யோமன் திவாகரன் ஸஹதேவன் ப்ருஹதஶ்வன் பாநுரதன் ப்ரதீதன் ஸுப்ரதீகன் மருதேவன் ஸுநக்ஷத்ரன் கின்னரன் அந்தரிக்ஷன் ஸுபர்ணன் அமித்ரஜித் ப்ருஹத்பாஜன் தர்மி க்ருதஞ்ஜயன் ரணஞ்ஜயன் ஸஞ்ஜயன் சாக்யன் ஶுத்தோதநன் ராகுலன் ப்ரஸேநஜித் க்ஷுத்ரகன் குண்டகன் ஸுரதன் ஸுமித்ரன் ஆகியவர் வரை வளர்ந்து வந்த இக்ஷ்வாகு வம்ஶ புத்ர பரம்பரை ஸுமித்ரனுடன் முடியும்.

மகத பார்ஹத்ரத வம்சத்தில் உண்டாகும் அரசர்: ஜராஸந்தன் ஸஹதேவன் ஸோமாபி அநுஶ்ருதஶ்ரவஸ் அயுதாயுதன் நிரமித்ரன் ஸுநேத்ரன் ப்ருஹத் கர்மா ஸோமஜித் ஶ்ருதஞ்ஜயன் விப்ரன் ஶுசி க்ஷேம்யன் ஸுவ்ரதன் தர்மன் ஸுஶ்ரவஸ் த்ருடஸேநன் ஸுபலன் ஸுநீதன் ஸத்யஜித் விஶ்வஜித் ரிபுஞ்ஜயன் என்ற புத்ர பரம்பரை ரிபுஞ்ஜயனுடன் முடியும். இவ்வரசர் கலியில் ஓராயிரமாண்டு அரசு புரிவர்.

இந்த வம்சத்தில் கடைசி மன்னனை ரிபுஞ்ஜயனுக்கு முநிகன் என்பவன் மந்த்ரியாக இருக்கப் போகிறான். அவன் தன் யஜமாநனை ரிபுஞ்ஜயனைக் கொன்று தனது புத்ரனை ப்ரத்யோதன் என்பவனுக்கு முடிசூட்டுவான். அவனது புத்ர பரம்பரை பலாகன், விஶாகயூபன் ஜநகன் நந்திவர்த்தநன் நந்தி ஆகியவர் எண்ணூற்று முப்பத்தெட்டு ஆண்டுகள் ராஜ்யத்தை ஆள்வர். பிறகு ஶிஶுநாபன் காகவர்ணன் க்ஷேமதர்மா க்ஷத்ரௌஜஸ் விதிஸாரன் அஜாதஶத்ரு அர்ப்பகன் உதயநன் நந்தி

வர்த்தநன் மஹாநந்தி முதலியவர் முன்னூற்று அறுபத்திரண்டு ஆண்டுகள் பூமியை ஆள்வர்.

பிறகு மஹா நந்திக்கு ஶூத்ர ஸ்த்ரீயினிடம் மஹா பத்ம நந்தன் என்பவன் உண்டாவான். அவன் மிக்க லோபியாகவும் மஹா பலசாலி யாகவும் இருப்பான். பரசுராமரைப் போல், அவன் அக்காலத்தில் உள்ள ஸகல க்ஷத்ரியர்களையும் கொல்வான். அதுமுதல் க்ஷத்ரிய பரம்பரையை விட்டு ஆக்ஷி சூத்ரரிடம் அமையும். மஹா பத்மநந்தி உலகை எலாம் ஒரு குடையின்கீழ் ஆளுவான். அவனுக்கு ஸுமால்யன் முதலான எட்டு புத்ரர் உண்டாவார்கள். நூறுண்டு அவர்கள் அவனியை ஆளுவார்கள். அவர் வம்ஶத்தில் உண்டான நவநந்தர்களைக் கொன்று கௌடில்யர் எனும் சாணக்யர் மௌர்ய வம்ஶத்தை ப்ரதிஷ்டைசெய்வார். அதில் சந்த்ரகுப்தன் என்பவனை முதலில் பட்டாபிஷேகம் செய்வார். இந்த சரிதத்தையே மஹாகவி ஸ்ரீ விஶாகதத்தன் முத்ரா ராக்ஷஸம் என்ற நாடகமாக இயற்றினர். இது தமிழிலுமிருக்கிறது.

சந்த்ரகுப்தனது வம்ஶம் பிந்துஸாரன் அசோக வர்த்தநன் ஸுயஶஸ் தசரதன் ஸம்யுதன் சாலிசூகன் ஸோம சர்மா சததன்வா அநு ப்ருஹத்ரதன் இந்த பத்து அரசர்மூலம் வளரும். இவர்கள் நூற்று முப்பத்தேழு ஆண்டுகள் பூமியை ஆள்வார். அவர்களுக்குப் பிறகு பத்து சுங்கர்கள் ஆள்வார்கள். சுங்கர்களில் முதல்வனை புஷ்யமித்ரன் மௌர்யரில் கடைசி மன்னனுக்கு ஸேநாதிபதியாக இருப்பான். அவன் தனது யஜமாநனைக்கொன்று தானே ராஜ்யத்தை ஆளுவான். அவனது வம்சம் அக்நிமித்ரன் ஸுஜ்யேஷ்டன் வஸுமித்ரன் உதங்கன் புலிந்தகன் கோஷவஸு, வஜ்ரமித்ரன் பாகவதன் தேவபூதி என்பவர் வரை வளர்ந்து நூற்றுப் பனிரண்டு ஆண்டுகள் பூமியை ஆளும்.

தேவபூதி எனும் சுங்கராஜனை அவனது மந்த்ரியான கண்வ வம்சத்தைச்சார்ந்த வஸுதேவன், கொன்று தான் ராஜ்யத்தை ஆளுவான். பூமிபுத்ரன் நாராயணன், ஸுசர்மா, என்ற கண்வ பரம்பரை நாற்பத்தைந்து ஆண்டுகள் பூமியை ஆளும். ஸுசர்மனது வேலைக்காரன்

புச்சகன் என்ற ஆந்த்ரதேசத்தவன். அவன் தன் யஜமாநனைக்கொன்று பூமியைஆளப்போகிறான். அவனுக்குப்பின் அவனது ஸஹோதரனை க்ருஷ்ணனும் அவன் புத்ரனை சாந்தகர்ணியும் அரசராவார். பூர்ணோத்ஸங்கன் சாதகர்ணி லம்போதரன் பிலகன் மேகஸ்வாதி படுமான் அரிஷ்டகர்மா ஹாலாஹலன் பலலகன் புலிந்தஸேநன் ஸுந்தரன் சாதகர்ணி சிவஸ்வாதி கோமதி அலிமான் சாந்த கர்ணி சிவச்ரிதன் சிவஸ்கந்தன் யக்ஞஸ்ரீ த்வியக்ஞன் சந்த்ரஸ்ரீ புலோமா என்ற ஆந்த்ரர் நானூற்று ஐம்பத்தாறு ஆண்டுகள் அரசாள்வர். ஆந்தரர்களுடைய வேலைக்காரரான ஆபீரவர் முதலியவர்களும் பிறகு எட்டு யவனர்களும் பதினான்கு துருஷ்கர்களும் பதிமூன்று முண்டர்களும் பதினொரு மௌநரும் பூமியாள்வர்.

பிறகு கிங்கில தேசத்தைச்சார்ந்த யவநர் பூமியாள்வர். அவர்கள் பட்டாபிஷேகம் செய்து கொள்வதில்லை. விந்த்ய ஶக்தி புரஞ்ஜயன் முதலியவர் சிலகாலம் பூமியை ஆள்வர். பிறகு ராஜ்யம் பலவாகப் பிரிந்து கோஸலம் நைஷதம் மாகதம் முதலிய இடங்களில் வேடர் சம்படவர், பால்ஹீகர் ப்ராம்மணர் முதலிய பலர் தனித் தனியாக ராஜ்யமாளுவர்.

ஆளுபவருக்கு அன்பு குறைவாகவும் கோபம் அதிகமாகவும் இருக்கும். பாபத்திற்கஞ்சார். தர்மத்தைத் தாங்கள் செய்யாததுடன் பிறரையும் செய்யவிடார். தார்மிகரைச் சிக்ஷிப்பர். ம்லேச்ச ஆசாரத்தை வளர்ப்பர். தனமுள்ளவனே பெரியவன். பலமே தர்மம். இஷ்டமே விவாஹஹேது. பெண் என்பதே போகஹேது. பொய்யே வ்யவஹார ஜயஹேது. பூணலே ப்ராம்மண அடையாளம். அந்யாயமே ஜீவநஹேது. பயமில்லாமல் பேசுவதே பாண்டித்யம். அலங்காரத்திற்காகவே ஸ்நாநம். தாநந்தான் தர்மம். வேஷதாரியே தாநபாத்ரம்.

கலியின் முடிவில் இப்படி உலகம் விபரீதமானபோது பகவான் ஶம்பள க்ராமத்தில் விஷ்ணுயஶஸ் என்பவர் வீட்டிலே கல்கி என்ற பெயருடன் தோன்றி துஷ்டர்களைச் சிக்ஷித்து க்ருதயுக தர்மத்தை நிலை நாட்டுவார். விதை போல் எங்கோ அபூர்வமாக உள்ள ராஜவம்சத்தைத்தேடி

பட்டம் சூட்டுவார். தர்மம் தழைத்தோங்கும். (முன் சுருக்கமாகக் கூறப்பட்டதால்இங்கு சிறிது விரிவாக வர்ணிக்கப் பட்டது.)

**விஷ்ணுஸ்துதி.**

இதிவிவிதம் அஜஸ்ய யஸ்யரூபம்
ப்ரக்ருதி பராத்ம மயம் ஸநாதநஸ்ய.
ப்ரதிஶது பகவான் அஶேஷ பும்ஸாம்
ஹரிரபஜன்ம ஜராதிகாம்ஸ ஸித்திம்.

பிறப்பு இறப்பு இல்லாதவனும் ப்ருக்ருதியாயும் பரனுகவும் உள்ளவனும் ஶாஶ்வதனுயுமுள்ள பகவான் பலரூபமுள்ளவராக இருப்பவர். ஜநந மரண மில்லாததும் ஆநந்த மய்மாயுமுள்ள ஸித்தியை எல்லோருக்கும் அளிக்கட்டும்.

**ஸ்ரீவிஷ்ணவே பரமாத்மநே நம:**
**விஷ்ணு புராணம் ஸம்பூர்ணம்.**

---

# சிவபுராண விஷய ஸூசிகை.

1 வித்யேஶ்வர ஸம்ஹிதா 2 ருத்ர ஸம்ஹிதா (ஸ்ருஷ்டி கண்டம் 2 ஸதீகண்டம் 3 பார்வதீகண்டம் 4 குமார கண்ட 5 யுத்தகண்ட) 3 ஶதருத்ர ஸம்ஹிதா. 4 கோடிருத்ர ஸம்ஹிதா. 5 உமா ஸம்ஹிதா. 6 கைலாஸ ஸம்ஹிதா. 7 வாயவீய ஸம்ஹிதா (1 பூர்வ கண்ட. 2 உத்தர கண்ட)

1 கலி தோஷத்தை அகற்றும் சிவபுராணம். 7 ஸம்ஹிதை. ஸநத்குமாரர் வ்யாஸருக்கு சிவபக்தி கூறல். விஷ்ணுவும் ப்ரும்மாவும் பாசுபதாஸ்த்ர மாஹேஶ்வராஸ்த்ர ப்ரயோகம். ஜ்யோதிர் லிங்கம் தோன்றினது.

2 தாழம்பூ பொய் ஸாக்ஷி சொன்னது. சிவக்ஷேத்ரங்கள். ஸதாசாரம். பார்த்திவ லிங்க பூஜை. பஞ்சாக்ஷர, பஸ்ம, ருத்ராக்ஷ மஹிமை. சிவனருளால் நாரதர் காமத்தை ஜயித்தது. ஸ்ரீமதி விவாஹம்.

நாரதர் விஷ்ணுவை சபித்தது. சிவேச்சையால் விஷ்ணு ராமாவதாரம். ஸீதா வியோகம்.

3 நாராயண சப்தார்த்தம். 25 தத்வம். லிங்கம் ஓங்கார நாதமுள்ளது. சப்த ப்ரும்ம ரூபி சிவன். ஹரிஹர அபேதம். விச்வகர்மா பல தாதுக்களால் சிவலிங்கம் செய்தது. அதன் பயன், எந்தெந்த புஷ்பார்ச்சனை எந்தெந்த பலன் தரும். குணநிதி குபேரனானது.

4 ஸதீ விவாஹம். நிர்குணனை சிவன். தக்ஷன், மன்மதனுக்கு ஏற்பட்ட சாபத்தை மறந்து பெண்ணான ரதியை அளித்தது. ஸந்த்யை உடலைவிட்டு அருந்ததியானது. வஸிஷ்டரை மணந்து சக்தி பெற்றது.

5 தக்ஷபுத்ரர்களை நாரதர் துறவிகளாக்கியது. தக்ஷன் மைதுந தர்மத்தால் 60 கன்யகைகளைப் பெற்றது. அவர்கள் விவாஹம். சிவன் ராமனை வணங்கினது. ஸதீ ஸீதா ரூபங்கொண்டு ராமனைப் பரீக்ஷித்தது. தக்ஷ யக்ஞம். ஸதி உடலை விட்டது.

6 வீரபத்ர மஹாகாளீ சிவஜ்வரம். ததீசி க்ஷுவது யுத்தம். ஸதீ பார்வதியானது. ஶிவன் ஸதீ விவாஹத்தில் தான் நவக்ரஹ பூஜை செய்யாததால் ஸதியை இழந்ததாக வருந்தியது. பார்வதீ விவாஹம். அதில் லௌகிக லீலைகள்.

7 குமார ஜநநம். லீலை. ஆடு வாஹநம். தாரக வதம். தேவியின் உடல் அழுக்கிலிருந்து கணேசன். கணேச சிவ யுத்தம். கணேச சிரஸ்ஸை அறுத்து யானை முகத்தைச் சேர்த்தது. கணேச விவாஹம். ஸ்கந்த கோபம். க்ரௌஞ்சமலை செல்லுதல்.

8 த்ரிபுர யுத்தம். விஷ்ணு ஜிநனைகி ஜைநமதம் கற்பித்தல். சிவனை அவமதித்த சக்ரன் சாம்பலானது. சிவகோபாக்நி கடலில் ஜாலந்தராஸுரனாக ஆனது. தேவ ஜாலந்தர யுத்தம். பாற்கடலில் பகவான் படுத்திருக்கும்படி அவன் வரம் பெற்றது.

9 ஜாலந்த்ரன் பார்வதியை அளிக்கும்படி சிவனோடு போர்புரிந்தது. விஷ்ணு மாயையால் ஜாலந்தரவடிவ

ஞகி ப்ருந்தை கற்பைக் கெடுத்தது. பார்வதீ ப்ருந்தை சாம்பலில் விதை விதைத்தது. அதிலிருந்து நெல்லி துளஸீ மாலதீ செடிகள் உண்டானது.

10 தம்பாஸுரனுக்கு சங்கசூடன் புத்ரஞனது. துளஸியை அவன் மணந்தது. அவனைக் கொல்லும்படி தேவர் சிவனை வேண்டியது. நந்தி அஷ்டபைரவர் வீரபத்ர காளீ முதலிய ஶிவ கணங்கள் ராக்ஷஸ ஸேனையுடன் யுத்தம் செய்தது.

11 சிவ சங்கசூட யுத்தம். விஷ்ணு ப்ராம்மணஞகி அவனிடமிருந்து நாராயண கவசத்தை யாசித்தல். துளஸீ விஷ்ணுவை சிலையாக சபித்தது. பார்வதீ வேர்வையால் அந்தகாஸுர ஜநநம். ஹிரண்யாக்ஷன் அவனைப் புத்ரஞக வளர்த்தல்.

12 அந்தகன் பார்வதியை தனக்களிக்கும்படி சிவனேடு போர். இறந்த அஸுரரைப் பிழைப்பிக்கும் சுக்ரரை சிவன் விழுங்கி முடிவில் சுக்ரமாக விடுதல். அந்தகன் சிவனை வணங்கி சிவ கணத்தில் சேர்ந்தது.

13 உஷா பரிணயம். பாணன் சிவகணமானது. மஹிஷாஸுர புத்ரனை கஜாஸுரனை சிவன் சிக்ஷித்தது. துந்துபி, நிர்ஹ்ராதாதி அஸுரரைக் கொல்ல சிவன் புலியாகி முநிவர் கோரியபடி சிவலிங்கத்தில் நுழைந்து வ்யாக்ரேஶரானது.

14 கௌரி மூலமாக விதல உத்பல என்ற ராக்ஷஸரைக் கொன்றது. ஸத்யோஜாதாதி 5 சிவாவதாரமஹிமை. சர்வ பவ முதலிய அஷ்ட மூர்த்தி ஸ்வரூபம். அர்த்த நாரீஶ்வரராகி லோகஸ்ருஷ்டிக்கு உதவி.
தேவியை தக்ஷ புத்ரியாகச் செய்து ஸ்ருஷ்டி ஶக்தி யளித்தது.

15 ஶ்வேதமுநி முதலிய பல ரிஷி ரூபமாக சிவாவதாரம். பத்ராயு. நந்தி. காலபைரவர். ஶரபாவதாரம். ந்ருஸிம்ம சிக்ஷை. ஏகாதஶ ருத்ர ஸ்வரூபம். க்ருஹபதி அவதாரம். சிவாம்சமான ஹநுமான். ஸூர்யனிடம் வித்யாப்யாஸம் செய்தது.

16 பாதாலத்தில் விஷய சுகத்தில் ஈடுபட்ட விஷ்ணு வுக்கு சிவன் வ்ருஷப ரூபமெடுத்து தத்வம் உபதே சித்தல். ததீசி புத்ரனை பிப்பலாதராக தோன்றி யது. உபமன்யுவுக்கு அநுக்ரஹம்.

17 பார்வதியைப் பெற சிவன் நர்த்தக வேஷந்தரித்தல். த்ரோணரிடம் அஶ்வத்தாமாவாக அவதரித்தல். அர் ஜுநன் பாஶுபதத்திற்காக தவம். வேடனாக வந்து யுத்தம்.

18 பனிரண்டு ஜ்யோதிர் லிங்கங்கள். அஸுரர்களை சிக்ஷிக்க விஷ்ணு சிவனிடம் ஸுதர்ஶந சக்ரம் பெற் றது. சிவ ஸஹஸ்ர நாமம். சிவராத்ரி வ்ரத தத்வ மறியாத வேடனும் சிவராத்ரியால் நற்கதி பெற்றது.

19 க்ருஷ்ணன் உபமன்யுவிடம் பஞ்சாக்ஷரீ பெற்று சிவாராதநத்தால் புத்ரபாக்யம் பெற்றது. யம லோக வழி. யமகிங்கரர் செயல். தாந மஹிமை. புராண மகிமை. பாப ப்ராயச்சித்தம். எப்பொழுது மரணம் என அறியவழி.

20 ஸ்திரமான இடமின்றி கலஹம் செய்யும்படி நாரத ருக்கு தக்ஷஶாபம். காசியில் வ்யாஸர் 18 புராணம் இயற்றியது. காலீ ஸ்வரூபம். மஹிஷாஸுர வதம். ஸரஸ்வதீ சும்ப நிசும்ப ஸேனையைக் கொன்றது. 10 மஹாவித்யைகள்.

21 ப்ரணவதீக்ஷை. விரஜா ஹோமம். பஞ்சாவரண பூஜா விதி. ஸ்கந்தன் வாமதேவ ரிஷுக்கு ப்ரணவார்த்த முரைத்தல். துறவிகளே ப்ரணவ ஜபாதிகாரி. சிவ சக்தி ஸ்வரூபம். சிவ அத்வைதம். மஹா வாக் யார்த்தம். யதி ஸம்ஸ்கார விதி.

22 14 வித்யைகள். ஶிவனே சிறந்த தேவன். அவனரு ளால்தான் வேதாந்த க்ஞாநம். ப்ரும்மாவினிட மிருந்து மத மோஹாதிகளின் ஸ்ருஷ்டி. ததீசிமுநிவர் தக்ஷனை சபித்தது. உமையைக் கொண்டு அஸுர வதம் செய்ய சிவன் உமையை காளீ என்றழைத்தது. கோபங்கொண்ட தேவியின் தபஸ்.

23 உமாதேவி கௌஶிகி யானது. கௌரியாகவு மானது. ஷட் அத்வாக்களின் ஸ்வரூபம். சைவாநுஷ்டாநமே முக்தி ஸாதநம். பாஶுபத வ்ரதம். உபமன்யுவின் தபஸ். இந்த்ரனாக வந்து சிவன் பரீக்ஷித்தது. வரமளித்தது.

24 சிவனிடமிருந்து சக்திகள் உண்டாகி அங்கே லயமாவது. வேதாந்திகளுக்கே சிவ தத்வ க்ஞாநம் உண்டாகும். ஒவ்வொரு யுகத்திலும் சிவனது யோகாவதாரம்.

25 கலியில் சிவபஞ்சாக்ஷரியே சிறந்தது. ஆசார்ய அபிஷேகம். ந்யாஸம். மாத்ருகாந்யாஸம். ஷடங்கந்யாஸம். சைவர் செய்ய லிங்க பூஜாவிதி. பஞ்சாவரண பூஜா பலன்.

26 லிங்கப்ரதிஷ்டா விதி. சிவத்யாந யோகம். காஶியில் வந்து நைமிஶாரண்ய முநிவர் தேஜோராஶியில் ஐக்யமானது. ஸ்கந்த ஸரஸ்ஸிற்கு வந்து ஸ்நாநம் செய்த ரிஷிகளுக்கு சைவ க்ஞாநத்தைத் தந்து நந்தி சிவ ஸன்னதி சென்றது. சிவபுராண படந பலன்.

---

# ஸ்ரீ சிவ புராணம்.

ஸ்ரீ மஹா தேவனால் லக்ஷ சுலோகமும் 12 ஸம்ஹிதா ரூபமாகவும் இயற்றப்பட்ட சிவ மஹா புராணம் ஒன்றுண்டு. அது பூர்ணமாகக் கிடைப்பதில்லை. அதிலிருந்து ஸ்ரீ வேதவ்யாஸர் 24000 சுலோகமும் 7 ஸம்ஹிதா ரூபமுமாக இயற்றினர். இதை அநுஸரித்தே இங்கு எழுதுகிறோம். கல்கத்தா ஏஷ்யாடிக் ஸொஸைடி வாயுபுராணம் என்ற பெயரால் சிவபுராணம் ஒன்றை பிரசுரித்துள்ளது. அதற்கும் பாம்பே புஸ்தகத்திற்கும் பலவிடங்களில் மாறுதல் இருக்கின்றது. சிவன் கூறியதாலும் சிவமஹிமையைக் கூறுவதாலும் சிவபுராணமாம். சிவபெருமையை வாயு வர்ணித்ததால் வாயு புராணம் என்றும் கூறப்படுகிறது. 12 புராணங்களில் 18 புரா

ணம் பற்றி கூறப்படுகிறது. அதில் 9 புராணம் சிவ புராணம் என்றும், 3 புராணம் வாயு புராணம் என்றும் கூறுகிறது.

## அவதாரிகை.

பொதுவாக சிவமஹிமை கூறப்படினும் ஸ்ரீ ராமன் மஹாவிஷ்ணு முதலிய தேவர்களைப் பற்றியும் சிறப்பாகக்கூறுகிறார். இதில் பற்பல இடங்கள், நமது வாழ்க்கைக்கு வழிகாட்டிகளாக இருக்கின்றன. சிவனே சிறந்த தெய்வம். அவரே பரமாத்மா என்பதைப் பலவழிகளால் விளக்குகிறார். ஆயினும் ஹரிஹர அபேதத்தை எடுத்துக்காட்டி வற்புறுத்துகிறார். உபமாந உபமேயங்கள் மிக ரஸமாக இருக்கின்றன. உபமாநத்தில் பெயர் பெற்ற காளிதாஸன் தைர்யமாக சிவபுராண சுலோகங்களைத் தாராளமாக கையாளுகிறார்.

வாகர்த்தாவிவஸம் ப்ருக்தௌ—
காப்ய பிக்யா தயோராஸீத் சித்ரா சந்த்ரமஸோரிவ—
ஸதஸத்வ்யக்திகாரணம்—அஸ்த்யுத் தரஸ்யாம் திசி—
பூர்வாபரௌதோய நிதீ விகாஹ்ய —
மாநதண்ட இவக்ஷிதே:
ததாநநம் ம்ருத்ஸுரபி நாயம் த்ருப்திம் கிரீச்வர:
முநேரஹ்ஸ்யு பாக்ராய—ஸ்ப்ருஹாவதீகேஷு.

இவை போன்ற எண்ணிறந்த சிவபுராண உபமாநங்களும் பதவரிசைகளும் ரகுவம்சத்திலும் குமாரஸம்பவத்திலும் கையாளப்படுகின்றன. விஷவ்ருக்ஷோபி என்ற சுலோகம் ஒரு எழுத்தைக்கூட மாற்றாமல் குமார சம்பவத்தில் அமைக்கப்பட்டது. உதயதி யதி பாநு: — என்ற சிவ புராண ச்லோகத்தை பர்த்ருஹரி நீதி சதகத்தில் இப்படியே எடுத்துக்கொண்டார். இங்குள்ள சுலோகங்கள் பல பகவத் கீதையில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. கிம் கர்ம கிமகர்ம — ஆர்த்தோ ஜிக்ஞாஸு: முதலியன உதாஹரணமாம்.

## சிவன் மாத்ரம் லிங்கமானதேன்?

உபநிஷத் கூறியபடி சிவன் பரமாத்மா. அவர் நிர்குண மாகவும் ஸகுணமாகவும் இருக்கிறார். மற்ற மூர்த்திகள் ஸகுணவடிவமே யாகும். அடிமுடியில்லாமல் ஏகாகார மாக உள்ளது சிவலிங்கம். அது ஸகுண நிர்க்குணங் களுக்கு அடையாளமாம். அதில் முகம் கைகால் இல் லாததால் நிர்க்குணம் அல்லது அரூபம். குழவிபோன்ற ஓர் உருவிருப்பதால் ஸரூபம் அல்லது ஸகுணமுமாகும். பிரும்மாவும் விஷ்ணுவும் ரஜோ குணத்தால் நானே உலக கர்த்தா என வாதமிட்டனர். இதைக்கண்டு சிவன் சிரஸை அசைக்கிச் சிறித்தார். அவர் தலையிலிருந்து ஒரு தாழம்பூ கிழே விழுந்தது. இவர்களுடைய அஹங் தையை அகற்ற அசரீரியாக இருந்து "அடி அல்லது முடியைக்கண்டு முன்னே வருபவர் உங்களில் சிறந்தவர்" என்றார் சிவன். வராஹமாகி திருவடியைத் தேடிச்சென் றார் திருமால். மறைக்கும் எட்டாத மாதேவன் திருவடி நமக்கோ எட்டும்? எனத்திரும்பிவிட்டார். சதுர் முகனே ஹம்ஸவடிவனாகி வானில் பறந்தார் திருமுடி யைக்காண. பல்லாண்டு பறந்தும் பயனில்லை. பரமன் திருமுடியிலிருந்து வந்த தாழம்பூவைத் "தான் தலையைக் கண்டதாகக்" கூறும்படி வேண்டினார். அப் புஷ்பமும் பொய்யனுக்குப் பொய் ஸாக்ஷி கூறிற்று. ருத்ரனது இருபுருவங்களுக் கிடையிலிருந்து தோன்றிய பைரவர் பொய் கூறிய பிரும்மனது ஐந்தாம் சிரத்தை அறுத்தெரிந் தார்.

யாகம் தவிர வேறிடத்தில் உன்னை எவரும் பூஜிக்கக் கூடாது. உனக்கு உடைந்தையான தாழம்பூவும் இனி முதல் என் பூஜைக்கு ஏற்றதல்ல என்று கூறினார். தன் னைப் போலவே பூஜிக்கத்தக்கவன் மாதவன் என்று வர மளித்தார் விஷ்ணுவுக்கு. அன்று உலகம் ஒடுங்கிய காலம். உலகில்லை. ஒளியில்லை. நாடில்லை. நகரில்லை. அச்சமயம் இருள் சூழ்ந்த இரவாக இருந்தது. அச்யுதன் சிவனைப் பூஜித்தார். அதே சிவராத்திரியாம். ஜோதிர் மயமான லிங்கம் தோன்றிய இடமே திரு அருணசலம். அந்த லிங்கத்தை நினைத்தாலே முக்தி. சம்பு உலக

நன்மைக்காக ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயம், திரோபாவம், அநுக்ரஹம் என்ற ஐந்து கார்யங்களைச் செய்கிறார். ஸத்யோஜாதம் தத்புருஷம் அகோரம் வாமதேவம் ஈசாநம் என்ற ஐந்து முகங்களை ஏற்றுக் கொண்டார். லிங்கமாக இருக்கும்போது ப்ரணவத்தால் அறியத் தக்கவன். பேரமாக இருக்கும்போது ஐந்து எழுத்துக்கள் அமைந்த பஞ்சாக்ஷரீ என்ற மந்த்ரத்தால் பூஜிக்கத் தக்கவன்.

## பார்த்திவ லிங்க பூஜை.

சுத்த மண்ணினால் லிங்கத்தைச் செய்து பூஜிப்பது சிறந்தது. இஷ்டத்தை அளிக்க வல்லது. வித்யையை விரும்பினால் 1000 பார்த்திவலிங்க பூஜை செய். செல்வத்தை விரும்பினால் 500. புத்ர காமனை விரும்புவோர் 1500. மோக்ஷ ஆசை உள்ளவர் கோடிலிங்க பூஜை செய்து வந்தால் உடனே பலனைப் பெறலாம். பிரணவ பஞ்சாக்ஷரி விபூதி ருத்ராக்ஷம் சிவநாம மஹிமை பில்வ மஹிமை சிவ நிர்மால்யம் முதலியவைகளைக் கூறி 25 அத்யாயத்துடன் வித்யேச்வர ஸம்ஹிதையைப் பூர்த்தி செய்கிறார்.

## நாரதர் குரங்கானார்.

நாரதர் பரமனை நாடி பல்லாண்டு தவம் புரிந்தார். அதைக் கலைக்க அமராதிபன் அப்ஸரஸ்ஸுகளை அனுப்பினார். சிவனைச் சித்தத்தில் நிறுத்தி மிக உறுதியுடன் தவம்செய்தார். அப்ஸரஸ்ஸுகள் தங்களால் முடியாதென திரும்பினர். நாரதர் ஆநந்தமடைந்து ப்ரும்ம லோகஞ் சென்று தான் காமத்தை ஜயித்ததாகக் கூறினார். சிவனருளே காரணம் என்றார் சதுர்முகன். தன் முயற்சியே காரணம் எனக் கருதி அவரை விட்டு வைகுண்டம் சென்றார். மாதவனிடம் தன் பெருமையைக் கூறினார். அவரும் பெண்ணாசை பொருளாசைகளை ஜயித்தவன் பரம சிவனே. அவனருளால் நீ காமனை ஜயித்திருக்கலாம் என்றார். நாரதர் அதை மறுத்துத் தனது சொந்த முயற்சியினால் ஜயித்ததாகக் கூறினார். அந்த தவறை ப்ரத்யக்ஷ அநுபவத்தால் காட்டவேண்டும் என எண்ணினார் விஷ்ணு. மேலே பேசாமல் நாரதரை விடை கொடுத்தனுப்பி

விட்டார். அவர் போகும் வழியில் ஸ்ரீபுரம் என்ற நரகத்தில் ஸ்ரீமதி என்ற அழகிய கன்யகைக்கு ஸ்வயம்வரம் நடப்பதைக் கண்டார். அவளழகில் நாரதர் மோஹமடைந்தார். பெண்ணின் தந்தையை அணுகி அவளைத் தனக்குத் தரும்படி கேட்டார்.

அரசன், தன் பெண் ஹரியையே மணக்க விரும்புவதாகக் கூறினர். நாரதர் தான் ஹரியைப்போன்ற முகம் பெற்று ஸ்ரீமதியை மணக்க எண்ணினர். விரைந்து வைகுண்டம் சென்றூர். தனக்கு ஹரிமுகம் அளிக்கும்படி வரம் கேட்டார். ஸர்வக்ஞனும் கபட நாடக கர்த்தனும் ரஸிகனுமான பகவான் நீ விரும்பியபோது ஹரிமுகம் வருமென்றூர். ஹரி என்ற சொல் விஷ்ணு, குரங்கு, ஸிம்மம் முதலிய பல பொருள் உள்ளது. நாரதர் வேண்டியது விஷ்ணு முகம். அவர் அளித்தது குரங்கு முகம். விரைந்தார் ஸ்ரீமதியிடம், ஹரிமுகமாக வேண்டுமென நினைத்தார். குரங்கு முகமானர். முனிவரைக் கண்டு ஸ்ரீமதி பயந்து ஓடினள். மற்றோர் நகைத்தனர். இதனிடையே நாராயணன் வந்து தனது மாயையால் உண்டான ஸ்ரீமதியைத் தூக்கிச்சென்றூர். காமியின் காமம் கெடின் கோபம் உண்டாவது ஸஹஜமல்லவா? நாரதருக்குக் கடும் கோபம் உண்டாயிற்று. "நீ மனிதனுவாய். உன் மனைவியை ஒருவன் தூக்கிச் செல்வான். வாநரங்களையே உதவிக்கு நாடுவாய்" என ஹரிக்குச் சாபம் அளித்தார். அச்சுதனே அதுவும் சிவன் செயல் எனக் கூறி ஸ்ரீராமனுகப் பிறந்தார். ராவணன் ஸீதையை அபஹரிக்க ஸுக்ரீவன் முதலிய வாநரர்களைத் துணைகொண்டு ஸீதையை மீட்டார். காமத்தை ஜயிப்பது கடினம். காமாரியின் அருள் பெற்றால் எல்லாம் ஸுலபம். உண்மை உணர்ந்தார் நாரதர்.

## ஸ்ரீ ராம நாம மஹிமை.

தீயில் சூடுபோலும் சொல்லில் பொருள் போலும் சிவனிடம் என்றும் பிரியாதிருப்பவள் சக்தி. தக்ஷனது ப்ரார்த்தனைக் கிணங்கி அவன் மகளாகி சங்கரனை மணந்தாள். தாக்ஷாயணி அல்லது ஸதீ என்பது அவள் பெயர். ஸர்வேச்வரனும் உலகிற்கு வழிகாட்ட கர்மா செய்கிறூர்.

ஸந்த்யாவந்தநம் செய்கிறுர். விஷ்ணு ஸஹஸ்ர நாம பாராயணம் செய்கிறுர். தன் துணைவியான தாக்ஷாயணிக்கும் இதை உபதேசித்தார். ஒரு நாள் பக்த ஞெருவன் சிவையும் சிவனும் சேர்ந்து தர்சநம் தந்தருள வேண்டினுன். அம்பிகாபதி அம்பிகையை அழைத்தார். விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் முடியவில்லையே. இடையில் எழுந்திருப்பது தகுமோ? என்றுள் தேவி. லகுவான பாராயணம் செய்து வா என்றுர் ஈசன். லகுவான உபாயம் யாது? என வினவினுள் தேவி.

கேந உபாயேந லகுநா விஷ்ணோர் நாம ஸஹஸ்ரகம் ।
பட்யதே பண்டிதைர் நித்யம் க்ஞாதும் இச்சாமி அஹம் ப்ரபோ ॥

ஸ்ரீராமராம ராமேதி ரமேராமே மநோரமே ஸஹஸ்ரநாம தத்துல்யம் ராமநாம வராநநே. ॥ ஸ்ரீராம ராம ராம என்பதே விஷ்ணு ஸஹஸ்ர நாமாவில் லகு உபாயம் என்றுர் பகவான். தேவியும் அங்ஙனமே கூறிமுடித்தாள். இருவரும் விருஷபம் ஏறி பக்தனுக்கு அருள்புரியச் சென்றனர். வழியிலே தண்டகாரண்யத்திலே ஸீதையை விட்டுப் பிரிந்த ராமன் ஸீதே! ஸீதே! என தேடித் திரிந்து அழுவதைக் கண்டாள் தேவி. பித்தனைப் போல் கதறும் இவர் நாமாவோ ஸஹஸ்ரநாம ஸமம்? என ஐயமுற்றுக் கேட்டாள். குரு சொல்லில் ஐயம் கொள்ளலாமோ? தக்ஷனைப் போல் தாக்ஷாயணி என நினைத்து ருத்ரன் தன் கோபத்தை அடக்கி நேரில் நீயே அதைப் பரீக்ஷித்து வா என்றுர். ஸதீ தேவி ஸீதா தேவியாகி ராமர் எதிரில் சென்றுள். அதை அறிந்த ராமன் "சிவ! சிவ! சிவனை விட்டுப் பிரியவா இந்த வேஷம் பூண்டாய்?" என்றுர். ஏமாந்த தாக்ஷாயணி அதன் க்ருத்தை உணராமல் வெட்கத்துடன் தன் பதியிடம் சென்று ஏனப்படிக் கூறினுர்? என்று வினவினுள். வேதஸாரமானது ராமநாம. காசியில் நான் ராம தாரக மந்த்ரத்தைக் கூறியே இறப்பவர்க்கு முக்தி தருகிறேன். மாதாவான ஸீதா ரூபத்தைத் தரித்த உன்னை மனைவியாக மதிக்க முடியுமோ? என்றுர். தக்ஷன் அச்சமயம் சிவனை விலக்கி ஒரு வேள்வி செய்தான். அவரைத் திருத்தச் சென்று அவர் ஸம்பந்தம் உள்ள உடலை விட்டாள் ஸதீ தேவி.

## பார்வதீ பரிணயம்.

பல்லாண்டு தவம் புரியும் பர்வத ராஜன் குமாரியாகத் தோன்றினள் தேவி. பரமனையே பதியாகப் பெற தவம் புரிந்தாள். காளிதாஸனது குமாரஸம்பவ காவ்யம் இந்த பார்வதீ கண்டத்தில் கண்டபடி கதையையும் வர்ணனைகளையும் பூர்ணமாகத் தழுவியதாகும். உ-குழந்தாய் மா-தவம் வேண்டாம் என்று தாய் கூறியதால் பார்வதி உமா என்ற பெயரைப் பெற்றாள். நரகாஸுரனால் ஹிம்ஸிக்கப்பட்ட தேவர் ஒன்று கூடி பார்வதீ பரமேச்வரர்களை ஒன்று சேர்த்து அவர்களிடமிருந்து உண்டாகும் ஸ்கந்தனைக் கொண்டு தாரகனைக்கொல்ல திட்டமிட்டனர். இமயத்தில் தக்ஷிணாமூர்த்தியாகத் தவம்புரியும் சிவனுக்குப் பணிவிடை செய்ய பார்வதி முன்வந்தாள். இருவர் மீதும் மன்மதன் புஷ்பபாணத்தை வீசினன். காமனைத் தஹித்து சிவன் மறுபடியும் தவம் செய்தார். தேவியும் ஒருபுறம் தவம் செய்தாள். கருணையுள்ள கைலாஸநாதன் கிழவேஷம்பூண்டு உமயவள் உள்ளத்தை உணர்ந்தார். ஸப்த ரிஷிகளை அனுப்பி பெண் கேட்டார். விதிப்படி ஸத்பாத்திரத்தில் கன்னியாதானம் செய்தால் 21 தலைமுறை முக்தி பெறுவர். இமயம் முக்தி பெற்றால் தேவர்க்குப் பலவகையிலும் நஷ்டம். ஆதலின் அவர் மனைவியான மேனையைச் சிவனுக்குப் பெண் தராதபடி கலஹம் செய்தனர். சிவன் ஏழை. யோகி, பித்தன், திகம்பரன், மனைவியுடன் வாழமாட்டான். அவருக்கோ நம்குன்யகை? என்று கூறும்படிச் செய்தனர்.

அருந்ததி மேனையிடம் வந்து ஈசன் பெருமையைக் கூறினள். விவாஹம் நிச்சய மாயிற்று. பரமசிவன் "தான் தாக்ஷாயணியை மணந்தபோது நவக்ரஹ பூஜை பாலிகை முதலியவைகளைச் செய்யாததால் தாக்ஷாயணியை இழக்க நேர்ந்தது. ஆதலால் விதிப்படி விவாஹத்தை நடத்துங்கள்" என்றார். கல்யாண புருஷனை லக்ஷ்மீபதி தான் முன் நின்று திருமணம் செய்விப்பதாகவும் அதுவரைத் தான் சொன்னபடி அனைவரும் நடக்க வேண்டும் என்றும் கூறினர். சிவனையும், கணங்களையும் அழகாக அலங்கரித்தார். ஜடையை அகற்றி கூந்தலைத்

தார். எலும்பு மாலைகளை நீக்கி முக்தாஹாரம் பூட்டினர். புலித்தோலைக் களைந்து பொன்னுடை சாற்றினர். உலகெல்லாம் திரண்டுவர இமயமலையில் இடம் உண்டோ பார்த்துவர என நாரதரை அனுப்பினர். விச்வகர்மா விசித்ரமான மண்டபங்களை அமைத்திருந்தார். வானவர் அனைவர்க்கும் தனித்தனி இடம். ஆங்காங்கு அவரவர் பெயருக்குப் பதிலாக அவரவர் உருவங்களே காணப்பட்டன. வந்தவானவரனைவரும் வியந்தனர். மோஹித்தனர். மாயையோ? அசுரர் சூக்ஷியோ? கனவோ? எனத் திகைத்தனர்.

பந்துக்களுடன் பூர்ண மரியாதையுடன் மருமகனை வரவேற்றான் மலை அரசன். கைலையிலும் வைகுண்டத்திலும் காணாத சிறப்பு! அலங்காரம்! அமிருதத்தினும் இனிய அறுசுவை அன்ன பாநம்! கல்யாண சுந்தரனைக் கண்டு மேனை இவரா திகம்பரர்? என்று வியந்தாள். மலை அரசன் மலை பந்துக்களுடன் வந்து வரவேற்றார். மதுபர்க்க மளித்துப் பூஜித்தார்.

கிரிராஜ புத்ரி மங்கள ஸ்நாநம் செய்து இஷ்ட தேவதையைப் பூஜித்தாள். புது தம்பதிகள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர். தீபாராதனை நடந்தது. வேதியில் அமர்ந்த தம்பதிகளை அனைவரும் துதித்தனர். கர்க்காசார்யர் விவாஹத்திற்கு வேண்டிய பூர்வ அங்கங்களைச் செய்து முடித்தார். வரனது கோத்திரம் என்ன? என்று வினவினர். அநாதியான சிவனுக்குக் குலமேது? கோத்திரமேது? வரப்ரவரம் கூறாமல் மேலே விவாஹம் நடத்தமுடியாதென்றார் கர்க்கர். ஸபையில் உள்ளோர் அனைவரும் திடுக்கிட்டு மேலே என்ன செய்வதென்று தெரியாமல் தவித்தனர். என்ன ஆகும்? என்ன ஆகும்? என எங்கும் பல சொற்கள் கிளம்பின. நாரதர் உடனே எழுந்து வீணாகாநம் செய்தார். சப்தம் அடங்கிற்று. சித்திரம்போல் ஒருவரும் பேசாமல் இருந்தனர். நாரதர் கர்க்கரை நோக்கி விவாஹம் செய்துவையும் என்றார். பிரவரம் தெரிந்தாலல்லது எப்படிச்செய்வதென்றாரவர்; நாதகோத்ரம் நாதபிரவரம் என்று கூற விதிப்படி விவாஹம் நடந்தது. நாரதர் கூறியதைக் கொண்டே 'நாததநும் அநிசம்' என்ற தியாகராஜ கீர்த்தநமும், நாதபிந்துகலாதி என்ற திருப்புகழும் தோன்றிற்று எனலாம். நாலுநாள்

விவாஹம் நடந்தது தம்பதிகள் உண்ணும் பொழுது லக்ஷ்மியும் ஸரஸ்வதியும் பல லீலைகளைச் செய்தனர். தம்பதிகளில் ஒருவரையொருவர் எச்சில் போடச் சொன்னார்கள். வெட்கப்படும் தம்பதிகளை ஒருவரோடு ஒருவர் பேசும்படி கோரினர். நவநாகரிகம் முற்றுவதற்கு முன் இத்தகைய லீலைகள் பண்டைய விவாஹங்களில் நடந்தன. அவை பார்வதீ பரிணயத்திலிருந்தே தோன்றினபோலும்? மேனை மகள் பார்வதிக்குக் கூறிய பதிவ்ரதா தர்மம் மிக விசேஷமானது. மிகச் சுருக்கி அதைக் கூறுகிறோம். லோக மாதாவான பார்வதிக்குங் கூறியதாக வியாஸர் வர்ணிப்பதை அனைவரும் பெண்களும் அறியவேண்டும்.

---

## பதிவிரதா தர்மம்.

மேனையும் வியாஸரும் முக்காலத்தையும் உணர்ந்தவர் ஆனதால் பார்வதியை வியாஜமாகக்கொண்டு தற்காலத்தவருக்கு ஷை தர்மத்தை வற்புறுத்துவது மிக ரஸமாக இருக்கிறது. பெற்றோரும் மற்றோரும் கொடுக்காத கொடுக்கமுடியாத இன்பத்தைத் தருபவன்பதி. அவனைத் தெய்வமாகவும் குருவாகவும் உற்ற துணைவனாகவும் நண்பனாகவும் கருது. பதிநிற்கும்போழுது நீ உட்காராதே. உண்பதற்கு முன் உண்ணாதே. உறங்குவதற்கு முன் உறங்காதே. பின்படுத்து முன்னே எழு. அவரை ப்ரதக்ஷிணம் செய்து காலைத்தொட்டு கண்ணில் ஒத்திக் கொள். கங்காஸ்நாந பலன் உண்டாகும். கபடமாக நடக்காதே. மங்களவேஷமில்லாமல் பதி எதிரே செல்லாதே. அவர் ஊரிலில்லாதபோது அலங்காரம் செய்து கொள்ளாதே. காரணமின்றி கடிந்தாலும் கோபித்துக் கொள்ளாதே. பதிக்கும் அவரைச்சார்ந்தவர்க்கும் பணி செய்வதே தவம். அழைத்தவுடன் மற்ற வேலையை விட்டு உடனே செல். இட்டவேலை கடினமாயினும் முணு முணுக்காமல் செய். வாசற்படியில் வெகு நேரம் நிற்காதே. பிறர் வீட்டிற்குக் காரணமின்றி செல்லாதே. பதி அறியாமல் யாருக்கும் எதையும் தராதே. அவர் உத்தரவின்றி உபவாஸம் இராதே. எந்த பூஜையையும் செய்யாதே.

பதி உண்ட எச்சில் இலையில் உண்பது ப்ராண அக்நி ஹோத்ர சேஷம் உண்பதாகும். பத்தாயிரம் காயத்ரீ செய்த புண்யம் உண்டாகும். பதி இல்லாமல் கோவில் குளம் செல்லாதே. ஏழையாயினும், ரோகி யாயினும் பதியை அவமதிக்காதே. பஹிஷ்டா காலத் தில் பதியுடன் பேசாதே. வியபசாரிகளுடன் பேசாதே. தனியாக எங்கும் செல்லாதே. புத்திரனாயினும் ஸோதரனா யினும் வேறெந்த புருஷருடனும் ஸமமாக ஓராஸநத்தில் உட்காராதே. சிருங்கார காலந்தவிர மற்றபோது தைர்யமாக பேசாதே. அவருக்குப் பிடித்த பொருள் களையே புஜி. அவரது ப்கைவரிடம் நட்பு கொள்ளாதே. பதியின் நண்பர்களை பகைக்காதே. உரக்கச்சிரிக்காதே. ஆயாஸகரமான வேலை செய்யும்படி பாராதே, கூறாதே. வருந்தும்போது நீயும் வருந்து. எதையும் இல்லை என்று கூறாதே. வேண்டியபொருள் கையில் இருக்கும்போதே அதுவேண்டுமென்றும் கூறு. முற்றிலும் ஆனபின்பு உண்ணவரும்போது எலை இல்லை என்பதுபோல் கூறாதே. வெளியிலிருந்து பதி வந்தவுடன் முதலில் அவரைக் கவனி. அவருக்குத் தெரியாமல் ஒரு வேலை செய்தால் கோட்டா னாகப் பிறப்பாய். முறைத்துப் பார்த்தால் குருடாவாய். அவருக்கு முன்னே உண்டால் பன்றியாவாய். நீங்கள் என்று கூறுமால் நீ என்றால் ஊமையாவாய். பதியை அவமதித்தால் விதவையாவாய்.

திரிகரணங்களாலும் பதியை ஸேவிப்பவள் கங்கை போல் சுத்தமானவள். சூர்ய சந்த்ரர் புண்ய நதிகள் ஆகிய அனைவரும் தனது பாபத்தை அகற்றிக்கொள்ள பதிவிரதையை நாடுகிறார்கள். கனவிலும் அன்ய புருஷனைக் காணாதவளே உத்தம பதிவிரதை ஆவாள். மஞ்சள் குங்குமத்தை ஒரு நிமிஷமும் மறவாதே. விரித்த தலையுடன் வெளியில் செல்லாதே. திடுக்கிடும்படி பேசாதே. அயர்ந்து உறங்கும்போது பதியை எழுப் பாதே. வீட்டைச் சுத்தமாகவைத்திரு. பதிதரும் பொருளை மிதமாக செலவுசெய். 55 அத்யாயங்களால் பார்வதீ பரிணயத்தை முடித்தார்.

---

## குமார கண்டம்.

சரவணபவனது அவதாரம் லீலை தாரகா ஸுரவதம் முதலியவை வடநாட்டிலுள்ள ஸ்காந்தத்தில் உள்ளபடி சுருக்கமாக இருக்கிறது. தாரகா ஸுரனையும் பாணன் ப்ரலம்பன் முதலிய அரக்கர்களைக் கொன்றதாக இங்கு கூறப்பட்டது. நமது தேசஸ்காந்தத்திலோ சூரபத்மன் தாரகன் ஸிம்ஹவக்த்ரன் ஆகியவர்களைக் கொன்றதாக வும் வல்லி தேவயானிகளை மணந்ததாகவும் கதை கூறப் படுகிறது. தாரகவதமான பின் ப்ரதிக்ஞேச்வரம், கபா லேச்வரம் குமாரேச்வரம் என்ற மூன்று லிங்கங்களை பிரதிஷ்டை செய்தார். ஒரு ஸமயம் பார்வதீ தேவி கணேசனைக் காவல்வைத்துவிட்டு உள்ளே ஏகாந்தமாக ஸ்நாநம் செய்தாள். சிவகணங்களில் சிலர் சிவாக்ஞை படி பார்வதியைக் காணச்சென்றனர். கணேசன் அவர் களைத் தடுத்தார். சிவன் உத்தரவுபடி கணங்கள் கணேசனுடன் கடுமையாகப் போர் புரிந்தனர். கணே சன் அனைவரையும் அடித்து வீழ்த்தினன். நாரதர் கோரியபடி நாரணனும் ஸமர்செய்து தோற்றார். மிகக் கோபங்கொண்ட ருத்ரன் வர அவரையும் வழிமறித்து கணநாதன் யுத்தம் செய்தான். ப்ரளயகால ருத்ரனை ஜயிக்க எவரால் முடியும்? சூலத்தினல் கணநாதனது கழுத்தை அறுத்துத் தள்ளினர். மாத்ரு பக்தியால் மாலை யும் ஜயித்த கணபதி பிதாவின் சூலத்திற்கு இரையா னன். இதைக்கேட்ட தேவி கோபங்கொண்டாள். கராளீ குப்ஜகா கஞ்சா லம்பசீர்ஷா முதலிய சக்தி கணங்கள் தோன்றி தேவர்களைப் புஜிக்க ஆரம்பித்தன. கணேசனை எழுப்பினல்தான் தேவியின் கோபம் அகலும். இந்த சக்தி கள், தேவர்களைக் கொல்லாதொழியும் என நினைத்தார் பரமசிவன். வடதிக்கில் முதலில் கண்ணில் படும் ப்ராணி யின் சிரத்தைக் கொண்டுவா என்றார். யானை தலையைக் கொண்டுவர கணேசனது கழுத்தில் அதை அமைத்து அவனை எழுப்பினர். யானையின் முகத்தில் ஸிந்தூரம் காணப்பட்டதால் தேவி, இனி எல்லோரும் எல்லா தேவர் களுக்கும் முந்தி கணேசனைப் பூஜிக்கவேண்டும். ஸிந்தூரத் தால் அர்ச்சிக்கவேண்டுமென ஆக்ஞையிட்டாள்.

கணேசன் சரவணபவன் ஆகிய இருபுதல்வர்களுடன் பார்வதி பரமேச்வரர் ஸம்ஸாரஸுகத்தை அனுபவித்தனர். தேவீ புத்ரர்களுக்கு விவாஹம் செய்ய விரும்பினுள். பூமியை ப்ரதக்ஷிணம் செய்து முதலில் வருபவருக்கே முதலில் விவாஹம் என்றார் மாதேவன். இருவரும் கிளம்பிச்சென்றனர். சிறிது தூரம் சென்று கணேசன் திரும்பவந்து தாய் தந்தைகளை ப்ரதக்ஷிணம் செய்து ஏழு நமஸ்காரம் செய்தார். இதனுல் பூப்ரதக்ஷிணம் செய்த பயன் உண்டானதென்று ப்ரும்மாவின், பெண்ணுன ஸித்தி புத்திகளைக் கணேசனுக்கு அளித்து விவாஹம் செய்வித்தனர். பூமிவலம் வந்த கார்த்திகேயன் இதைக் கண்டு கோபம் கொண்டார். பெற்றோரைப் பணிந்து க்ரௌஞ்ச மலைக்குச் சென்றார். அன்றுமுதல் ஸுப்ரஹ்மண்யன் குமாரராக ஆனுர். பார்வதியுடன் பரமேச்வரர் குமரன் உள்ள மலைக்குச் சென்று மல்லிகார்ஜுனன் என்ற ஜ்யோதிர் லிங்கமாக ப்ரகாசிக்கின்றார். அவர் களைக்கண்டு குமரன் வேறொரு மலைக்குச் சென்றார்.

## யுத்த காண்டம்.

தாரகன் கமலாக்ஷன் வித்யுன்மாலீ என்ற த்ரிபுரர் தவம் செய்து, ஆயிரம் ஆண்டிற்கோர் முறை மூவரும் பகலில் ஒரு நிமிஷம் கூடும்போது பரமசிவன் இது வரையில்லாத அபூர்வமான ரதத்திலேறி அபூர்வமான ஆயுதத்தால் அடித்தால் தான் தங்களுக்கு மரணம் உண்டாகலாம் என வரம் பெற்றனர். வர பலத்தினுலும் அவர்கள் செய்த வேத அத்யயநத்தாலும் சிவ பூஜையாலும் அவர்களை வெல்ல எவராலும் முடியவில்லை. அவர் தொல்லை பொருக்க முடியவில்லை. மகாவிஷ்ணு தனது மாயையால் அரிஹன் என்ற ஒருவரைப் படைத்து 16000 சுலோகமுள்ள ஆர்ஹத நூலை இயற்றும்படி செய்தார். நாரதருக்கு முதலில் ஆர்ஹததீக்ஷை தந்து, அவருடன் அரிஹன் த்ரிபுரரிடம் சென்று நாஸ்திக மத ப்ரசாரம் செய்தார். த்ரிபுரர் வேத வழியையும், சிவ பூஜையையும் விட்டனர். அச்சமயம் கைலாஸமே ரதமாயிற்று. மேரு வில், வேதம் குதிரை. சந்த்ர ஸூர்யர் சக்ரம். ப்ரும்மா ஸாரதி. காயத்ரி கடிவாளம். ப்ரணவம்

சாட்டை. எல்லாம் ஸந்நத்தமாயின. லக்ஷவர்ஷம் லக்ஷ்யத்தை நாடி நிற்கின்றார் ருத்ரன். முப்புரம் ஒன்று கக்கூடவில்லை. விநாயகனை அர்ச்சிக்காததால் கார்யம் கை கூடவில்லை என ஒரு ஆகாசவாக்கு தோன்றிற்று. பத்ரகாளி விக்நேசனை அர்ச்சித்தாள். அடுத்த க்ஷணத்தில் முப்புரர் ஒன்றுகூடி தேவர் முன் தோன்றினர். ஒருவரது உதவியுமின்றி அரக்கரைக்கொல்லக் கருதினார் கால ருத்ரன்.

தங்களுக்கும் கீர்த்திவேண்டுமென்று விஷ்ணு முதலிய தேவர் வேண்ட சரத்தைவிட்டு முப்புரத்தையும் எரித்தார் சிவன். சிவனைச் சரணம் அடைந்து சில ராக்ஷஸர் சிவ கணமானார்கள். அமரர் அனைவரும் அரனைப்போற்றினர். இந்த கதை வேதத்தில் இருக்கின்றது. முப்புரமென்பது மும்மலம் என்பர். முப்புரமெரித்த ஐதிஹ்யம் எட்டு வீரட்டாணத்தில் ஒன்றான திருவதிகையில் நடந்ததென்பர்.

## ஜாலந்தர சரிதம்.

தேவராஜன் சிவனைத் தர்சிக்க கைலாஸம் சென்றான். சிவன் உக்ரமாகவும் திகம்பரனாகவும் தென்பட்டார். நீ யார்? சிவன் எங்கே என்றான். அவர் பதில் கூறவில்லை. மும்முறை கேட்டும் கூறாததால் சினங்கொண்டு வஜ்ரத்தை அவர்மீது ஏவினான். சிவ கோபத்தினால் வஜ்ரத்துடன் வஜ்ரபாணி எரிந்து சாம்பலானான். கோபத்தைக் கடலில் எரிந்து இந்த்ரனைப் பிழைப்பிக்கும்படி ப்ருஹஸ்பதி வேண்டினார். அங்ஙனமே அவர்செய்ய சிவ கோபம் கடலில் சென்றவுடன் ஒரு அஸுரக் குழந்தையாகி உரக்க அழுதது. இதைக்கேட்டு ப்ரும்மா அங்குவர கடலரசன் அவரை வணங்கி குழந்தைக்கு வேண்டிய வரந்தந்து நாமகரணம் செய்யும்படி அவர் மடியில் விட்டார். அது ப்ரும்மாவின் கழுத்தை இறுகக் கட்டியதால் அவர் கண்களில் ஜலம் ததும்பிற்று. அந்த பொருளையே கொண்டு ஜாலந்த்ரன் எனப் பெயரிட்டார். ருத்ரன் ஒருவனால் தான் அவனுக்கு மரணம் என்று வரம் தந்து சதுர்முகன் சென்றார். ஜாலந்தரன் காலநேமியின் மகளான ப்ருந்தையை மணந்தான்.

தன் தந்தையான கடலைக் கடைந்ததும் அவர் பொருளான அம்ருதம் கல்பதரு முதலியவைகளை அபஹரித்ததும் அநியாயம். ஆதலால் அவைகளை ஸ்வர்க்கத்துடன் தன்னிடமளித்து மன்னிப்புகேட்கவேண்டும் என தேவராஜனைச் சண்டைக்கழைத்தான். நந்தநவநத்தை நாசமாக்கினன். தேவஸேனையைக்கொன்று குவித்தான். த்ரோணசைலத்தில் உள்ள ஓஷதிகளைக்கொண்டு தேவ குரு இறந்த தேவரை எழுப்பினர். இதைக்கண்டு ஜாலந்தரன் அம்மலையைத் தூக்கிக் கடலில் எறிந்தான். தேவர் அனைவரும் அஸுரனிடம் பயந்து ஓடினர். வைகுண்டம் சென்று விஷ்ணுவை ஸஹாயத்திற்கு அழைத்தனர். லக்ஷ்மீதேவி என் உடன் பிறந்தானைக் கொல்லாதீர் என வேண்டினள். மாதவனும் ஜாலந்தரனுடன் போர்புரிந்து தோல்வியுற்றார். ஆனல் சாதுர்யமாக, "அஸுரேந்த்ர மஹா வீரனை உன் பலத்தைக்கண்டு மகிழ்ந்தேன். யாது வரம் வேண்டும் உனக்கு என்றார். அவன் அவரைக் கடலிலேயே படுத்திருக்கும்படி வரம் கேட்டான்.

நாரதர் கைலாஸநாதனிடம் இதைக்கூறி அவனைத் தாங்கள்தான் கொல்லவேண்டுமென் வேண்டினர். ஜாலந்தரனிடம் சென்று ஸர்வ ரத்நங்களும் உன்னிடமிருக்கிறது. கைலாஸத்தில் உள்ள உமாரத்நம் ஒன்று தான் குறைவு என்றார். பிக்ஷுகனை உனக்கேன் ஸ்த்ரீரத்நம்? உன்னைவென்று அதை யான் கொண்டு செல்வேனென தூதனை அனுப்பி போருக்குக் கிளம்பினன். எதிரில் சுக்ரனும் தலையில்லாத கேதுவும் தோன்றினர். கால் தடுமாறி இவன் கிரீடமும் கீழே விழுந்தது. அதைப்பொருட்படுத்தாமல் கிளம்பி சிவகணங்களைச்சரத்தால் அடித்தான். சிவகணங்கள் அரக்கர் படையை அரை க்ஷணத்தில் அழித்தனர். சுக்ரர் ஸஞ்ஜீவிநீ வித்யையால் இறந்தவரை எழுப்பினர். இதைக்கண்ட ருத்ரனது முகத்திலிருந்து ஒரு பெண் கிளம்பி சுக்ரரைத் தன் துடைகளிடையே அடக்கிச் சென்றாள். கணபதி ஸ்கந்தன் வீரபத்ரன் நந்தி முதலிய அனைவரும் அடிபட்டு வீழ்ந்தனர்.

கோபத்துடன் சிவன் அஸுரனது தேரை முறித்துத் தள்ளி அவனையும் அடித்து வீழ்த்தினர். எழுந்து மாயையால் ஒருமோஹினியைப் படைத்து சிவனை மயக்கும்படி

செய்துவிட்டு அவன் சிவ வேஷம் பூண்டு உமையிடம் சென்றுன். அன்னையைக் கண்டவுடன் அவன் வீர்யத்தைச் சிந்தினன். அவன் சிவனல்லவென்று தேவி மறைந்தாள். விஷ்ணுவை நினைத்தாள். உடனே அவர் வர ஜாலந்தரன் மனைவியின் கற்பே இவனுக்கு பலம். அவள் கற்பிற்கு பங்கம் செய்தாவது உலகைக் காக்க வேண்டும்'' என்றுள் தேவி. மாதவன் பிருந்தைக்குத் துஸ்வப்நம் தோற்றிவைத்தார். முனிவேடம் பூண்டு அவளது உத்யாநஞ் சென்றுர். பிருந்தை மநம் நொந்து முனிவரிடம் பரிஹாரம் கேட்கவந்தாள். இரு அரக்கர் அவளைத் தூக்கிச்செல்ல, அவள் கதறினள். முனிவர் அவர்களை ஹுங்காரத்தால் சாம்பலாக்கினர். பிருந்தை அவரை வணங்கி போரில் என் பதி கதி என்ன? என்றுள். அவர் கண்களை மூட, இரு குரங்குகள் ஜாலந்த்ரனது வெட்டுப்பட்டு இறந்த உடலைக்கொண்டுவந்தனர். அதைக் கண்டு கதறி முனிவரே என்பதியை எழுப்பும் என வேண்டினள். கபடமுநி அப்படியே ஆகட்டும் எனக்கூறி தானே ஜாலந்தரவேடம் பூண்டு அவள் கற்பை அழித்தார். உண்மை அறிந்த ப்ருந்தை ''நீ மநிதனுகப்பிற. உன் மனைவியை ராக்ஷஸன் தூக்கிச்செல்வான். உனக்கு உதவிபுரிய குரங்கே வரும்.'' என சபித்து தீயில் தன் உடலை விட்டாள். கோவிந்தன் அச்சாம்பலில் புரண்டு பிருந்தே! பிருந்தே! என பித்தனைப்போல் சுற்றினர். இது இங்ஙனமிருக்க.

ஶிவனை மயக்கிய மாயா மோஹிநி மறைந்தாள். ஜாலந்தரன் மாயையால் ஒரு பார்வதியைப் படைத்தான். மாயா பார்வதியைத் தேரில் கட்டி சும்ப நிசும்பர் சிவன் எதிரே நிறுத்தி அவளை அடித்தனர். சிவன், உங்களைப் பார்வதியே கொல்வாள் எனசாபமளித்து ஜாலந்தரனுடன் யுத்தம் செய்தார். தனது கால் கட்டை விரலால் ஒரு சக்கிரத்தை எழுதி நீ வீரனுனல் இதை எடு என்றுர். அவனுல் அதை அசைக்கவும் முடியவில்லை. பகவான் அநாயாஸமாக அதை எடுத்து அவன்மீது விடுத்தார். அடியற்ற மரம்போல் வீழ்ந்து இறந்தான் ஜாலந்தரன். தேவரனைவரும் மாதேவனைப் போற்றிப் புகழ்ந்தனர். உமயவள் தனது ஸோதரன் நிலையைக்கேட்டு வருந்தி

ப்ருந்தையின் சாம்பலைத் துளஸியாக்கினாள். திருமால் துளஸி மாலையைத் தரித்து மயக்கம் நீங்கினார். சிவ கோபத்தின் வலிமை! அரக்கரின் மாயை! படைப்பவனும் பாலிப்பவனும் அழிப்பவனும் ஒருவனே. அவனே சிவன் என்ற பல தத்வங்களை இக்கதைமூலம் கூறினார்.

## சங்கசூடன் வதம்.

அவனது எலும்பால் சங்கம் உண்டானது. சிவனைத் தவிர மற்றவர்க்கு சங்க ஜலாபிஷேகம் சிறந்தது. அந்தகாஸுர சரிதம் ஹிரண்யாக்ஷ ஹிரண்யகசிபு வதம். சுக்ரனைச் சிவன் விழுங்கியது. 108 நமாக்களால் அவர் 3000 ஆண்டுகள் சென்றபின் வெளியில் வந்தது. அந்தகாஸுரன் ஒரு 108 நாமா கூறி சிவகணமானது. உஷாபரிணயம், கஜாஸுரனைக் கொன்று அவன்தோலை அணிந்து க்ருத்திவாஸன் என பெயர் பெறுதல். இது வழுவூர் என்ற க்ஷேத்ரத்தின் ஐதிஹ்யமாகும். சிவராத்ரி முதலிய பல கதைகளைக் கூறி சிவபுராண பூர்வ பாகத்தை முடிக்கிறார்.

பூர்வ பாகம் முற்றிற்று.

---

# உத்தர பாகம்.

## சிவ அவதாரம்.

ஈச்வரனுக்கு 5 முகம் 8 சரீரம் உண்டல்லவா? ஸத்யோஜாதம் தத்புருஷம் வாமதேவம் அகோரம் ஈசானம் என்ற ஐந்தும் தனித்தனி சிவன் எடுத்த அவதாரங்களாம். ஒவ்வொன்றும் வெவ்வேறு வர்ணமுள்ளது. பல புத்ரர்களை உண்டுபண்ணிற்று. பவ, சர்வ, ருத்ர, உக்ர, பீம, பசுபதி, ஈசானன், மஹாதேவன் என்ற 8 அவதாரங்களும் பஞ்சபூதங்களையும் சந்த்ர ஸூர்யர் யயாகம் செய்தவர் இவர்களை உடலாகக் கொண்டாலும் தனித்தனி தேவசரீரத்துடன் பத்நிகளையும் மணந்தவைகள். சந்த்ரசேகரர் உமாகாந்தர் விருஷபாரூடர் நடராஜர் விவாஹமூர்த்தி பிக்ஷாடநர் காமாரி காலாரி த்ரிபுராரி ஜாலந்தரவத

மூர்த்தி கஜாரி வீரபத்ரர் சங்கரநாராயணர் அர்த்த நாரீச்வர கிராத கங்காள சண்டேசாநுக்ரஹ விஷ அப ஹரண சக்ரதாந விக்ந ப்ரஸாத, ஸோமாஸ்கந்த சரப ஏகபாத தக்ஷிணாமூர்த்தி லிங்கோத்பவ மூர்த்தி ஆகிய 25 மூர்த்திகளாகத் தோன்றினார் சிவன். சில்ப ஆகம சாஸ்த்ரப்படி அமைந்த ஆலயங்களில் பெரும்பாலும் இம் மூர்த்திகளைக் காணலாம். சிற்சில மூர்த்திகளுக்கு ப்ரத்யேகமான க்ஷேத்ரங்களும் உண்டு. அரக்கரைக் கொல்வதற்காக மற்றும் சில உருவம் எடுத்து தனி க்ஷேத் ரங்களில் விளங்குவதைக் காணலாம். சென்ற 28 த்வா பரயுகங்களில் வ்யாஸராக வந்த 28 தேவ ரிஷிகளின் பெயர் இங்குளது.

## நந்தி அவதாரமும், விவாஹமும்.

சிலாதர் எனும் முனிவர் ஜநந மரணம் இல்லாத புதல் வன் வேண்டுமென கடுந்தவம் செய்தார். தேவராஜன் அவர் முன்னே தோன்றி அத்தகைய புத்ரனைப்பெற ஜநந மரணமில்லா சிவனை நாடித் தவம் செய் என்றார். சிலாதர் பல்லாண்டு தவம்புரிய அவர் மீது புற்றும் உண்டா யிற்று. சிவன் தோன்றி அந்த வரனைத் தந்தார். யாகம் செய்ய சிலாதர் பூமியை உழுதார். ஆங்கிருந்து ஆண் குழந்தை ஒன்று தோன்றிற்று. எடுத்து அணைத்து ஆநந்தம் அளித்ததால் நந்தி எனப் பெயரிட்டார். ஏழாவ தாண்டில் மித்ராவருணர் சிலாத முனிவரிடம் வந்து இனி ஓராண்டுதான் நந்தி ஜீவித்திருப்பான் எனக்கூறி மறைந் தனர். புத்ர வாஞ்சையால் சிவ வரத்தையும் மறந்து கதறினார். நந்தி தந்தைக்குத் தேர்தல் கூறி சிவனைச் சித்தத்தில் இருத்தி ஸ்ரீ ருத்ர ஜபம் செய்தான். கைலாஸ நாதன் எதிரே தோன்றி தன் சிரஸிலிருந்த கங்கா ஜலத் தால் நீ சிவ கணங்களுக்குத் தலைவன் என அபிஷேகம் செய்தார். அது 5 நதியாக ஓட அவ்விடம் பஞ்சநதம் என்றும் ஜபம்செய்தவிடத்தில் ஜப்யேசர் என்றும் கூறப் படும். இதே தென்னாட்டில் திருஐஆறு என்ற க்ஷேத்ரமாம். சிவன் நந்தியைப் புத்ரனாகக்கருதி மருத்தின் பெண்ணான ஸுயசஸ் என்பவளை நந்திக்கு மணம் செய்வித்தார். திருமழைப்பாடி என்ற க்ஷேத்ரத்தில் நந்தி விவாஹம் நடந்ததென ஐதிஹ்யம்.

## சரப அவதாரம்.

ப்ரஹ்லாதனைக் காக்க ஸ்ரீபதி நரஸிம்மனாகத் தோன்றினார். வீராட்டஹாஸத்துடன் ஹிரண்யன் மார்பைக் கிழித்து வதம் செய்தார். அவரது வீராவேசம் அடங்கவில்லை. அவரது கர்ஜனை பதினான்கு உலகையும் பயப்படும்படிச் செய்தது. யார் வேண்டியும் உக்ரம் அடங்கவில்லை. ப்ரும்மாதி தேவர் மாதேவனை வேண்டினர். வந்த வேலை முடிந்ததால் சாந்தமாகி வைகுண்டம் செல்லும்படி வீரபத்ரனிடம் சொல்லி யனுப்பினார். நரஸிம்மன் அட்டஹாஸம் முன்னிலும் அதிகமானது. சிவாக்ஞையை மீறி என்னிடமிருந்து தோன்றிய சிவனா என்னை அடக்குவது? என்று கர்ஜித்தார். சிவாக்ஞையால் வீரபத்ரன் சரபமானார். உக்ரமான மூக்குகளாலும் இறக்கைகளாலும் பக்ஷிபோலுமானார். நான்கு கால்களாலும் வாலாலும் மிருகமாகவும் ஆனார். விழிகள் தீத்தணல்போலிருந்தன. ஒரே பாய்ச்சலாக அவர்மீது பாய்ந்து வாலால் அவரைக் கட்டி இறக்கைகளால் தூக்கி நரஸிம்மனது உடலைக் கிழித்து அந்த தோலைச் சிவனிடம் சேர்த்தார். நரஸிம்மனது ஆத்மா சிவனைத் துதித்துத் தன் தோலையும் அவர் அணியவேண்டுமென வேண்டி சிவனிடம் லயமானது. ஜலமும் ஜலமும் பாலும் பாலும் போல் ஹரியும் ஹரனும் ஒருவரே ஆவர். திருவிடமருதூருக்குச் சமீபத்திலுள்ள திருபுவநம் என்ற திவ்ய க்ஷேத்ரத்தில் சரப ஸன்னிதியும் உத்ஸவ விக்கிரஹமும் உண்டு. தனியாக உத்ஸவமும் நடப்பதைக் காணலாம்.

## க்ரஹபதி வைச்வாநரர்.

நர்மதாதீரத்தில் சாண்டில்ய கோத்ரத்தில் தோன்றிய விச்வாநரர் என்ற வேதியர் புத்ரபாக்யமின்றி சக்ஷுஷ்மதீ எனும் பத்நியுடன் காசி விச்வநாதனைப் பூஜித்து வந்தார். பரமனின் பெருமையை நன்கு உணர்ந்து சுத்த அத்வைத ஸ்வரூபியாக அபிலாஷாஷ்டகம் என்ற 8 சுலோகங்களால் சிவனை ஸ்துதித்தார். இதைக் கேட்டு மகிழ்ந்து மாதேவன் நானே உன் புத்ரனாவேன் என்றார். இதனால் என்னைத் துதிப்பவர் அபிலாஷையை-ஆசையைப் பூர்த்தி

செய்வேன் என்றார். அன்றுமுதல் அது அபிலாஷாஷ்டகம் எனப்படும். (5 அணு விலையுள்ள நமது ஸ்துதி குஸும அஞ்ஜலியில் இதைக் காணலாம்.) ஈசனே புத்ரனுனார். வைச்வாநரன் அல்லது க்ருஹபதி எனப் பெயரிட்டு அன்புடன் வளர்த்தார். ஆறுவது வயதில் மின்னல் இடி யால் இவன் இறப்பான் என்றார் நாரதர். சிவனருளால் காலனை ஜயிப்பேன் என காசிக்குச் சென்றான். ஒரு லிங்க ப்ரதிஷ்டை செய்து அதனருகே கடுந்தவம் புரிந் தான். இந்திர உருவமேந்தி சிவன் யாது வரம் வேண்டு மென்றார். உன்னை யான் அழைக்கவில்லை. நான் கோரும் வரம் அளிக்க உனக்கு சக்தியுமில்லை என்றான் சிறுவன். வரம் கேளாவிடில் வஜ்ரத்தாலடிப்பே னென்றான் கபட இந்திரன். சிவபக்தனிடம் உன் வஜ்ரம் செல்லாதென சிவனை நாடி மறுபடியும் தவம் செய்தான் சிறுவன். இறைவன் அவன் எதிரே தோன்றி நீ எனது சரீரமான அக்நியாக இருப்பாய். இந்திரனுக்கும் யமனுக்கும் இடை யில் உள்ள திக்கிற்கு நீ தலைவன். வேதியர் உன்னை க்ருஹபதி என்று கார்ஹபத்யத்தில் பூஜிப்பார் என்று மறைந்தார். அவரே அக்நி திக்கின் தலைவன். க்ருஹ பதியுமாவான்.

## அவனன்றி அணுவும் அசையா.

தேவாஸுர யுத்தத்தில் வெற்றி பெற்ற தேவருக்கு அளவு கடந்த அஹங்காரம் தோன்றிற்று. விஷ்ணு முதலிய அனைவரும் நானே ஜயித்தேன் என வாத மிட்டனர். அவர்கள் எதிரிலே அடி முடி அறிய முடியாத ஒரு யக்ஷம் தோன்றிற்று. ஒவ்வொருவராக அதை அறிய அருகே சென்றனர். நீ யார் என்று கேட்கும் தேவரை அது நீ யார்? என்றது. உடனே அவரவர் தன் பெரு மையைக் கூறினர். ஆனால் இந்த த்ருணத்தை எடு என் றது. ஒருவராலும் முடியவில்லை. தீ அதைக் கொளுத்த வில்லை. நீர் நனைக்கவில்லை. காற்று அசைக்க வில்லை. கர்வம் அகன்ற அனைவரும் நந்தியை வணங்கி இவர் யார் என வினவினர். இவரே எல்லாம் வல்ல ஈசன். உங்க ளுக்கு பலமளித்த பரமன் என்றார். ஒன்றோடொன்றைச் சேர்ப்பவனும் பிரிப்பவனும் சிவனே என உணர்ந்தனர்.

## தூர்வாஸர் மஹிமை.

அத்ரி முனிவர் பகவானை நாடி தவம் செய்யும்போது மும்மூர்த்திகளும் எதிரில் தோன்றினர். நான் ஒருவரை வேண்ட மூவரும் வந்ததேன்? என்றார். மூவரும் ஒருவரே. ஆயினும் சிவனருளால் தூர்வாஸரும் விஷ்ணுவால் தத்தாத்ரேயரும் பிரும்மனருளால் சந்த்ரனும் உனக்குக் குழந்தைகளாகப் பிறப்பர் என்றார்கள். சிவாம்சமான தூர்வாஸர் தூர்வையால் ரஸத்தை—அருகம் புல்லால் ஜலத்தை—அருந்தி காரணப் பெயர் பெற்றார். சிவனருளால் சாபம் அளிக்க அளிக்க அவர் தவம் பெருகும். ராமனை க்ருஷ்ணனை மற்றவர்களையும் பரீக்ஷித்து நன்மை புரிந்தார். ஒரு ஸமயம் நதியில் அவர் ஸ்நானம் செய்ய ப்ரவாஹம் அவரது வஸ்த்ரத்தை இழுத்துச் சென்றது. இடுப்பில் வஸ்த்ர மில்லாமல் வெளியே வர வெட்கத்துடன் ஜலத்திலேயே வெகுநேரம் நின்றார். இதை அறிந்தாள் திரௌபதி. தனது பட்டு வஸ்த்ரத்தைக் கிழித்து அவரிடம் செல்லும்படி ஜலத்தில் விட்டாள். இங்கிதமறிந்து பேசாமல் செயலால் உதவிபுரிந்த உத்தமியைக் கொண்டாடினார். என் மானத்தைக் காத்தாய். ஸமயத்தில் உன் மானத்தைக் காக்க இது ஆயிரம் வஸ்த்ரமாக வரும் என்றார். துச்சாஸநன் துயில் உரியும் போது எண்ணிறந்த வஸ்த்ரம் உண்டாக கை அயர்ந்து அவன் கீழே விழுந்தான்.

## கிராதார் ஜுனீயம்.

இந்த வடமொழி காவ்யத்திற்கு சிவபுராணம் சத ருத்ர ஸம்மிதை பிரமாணமாகும். பாசுபத அஸ்த்ரத்தை நாடி அர்ஜுநன் தவம் செய்தான். இதை அறிந்த துர்யோதநன் அவன் நண்பனைத் தூண்ட அவன் பன்றியாகி அர்ஜுநனைக் கொல்ல முயற்சித்தான். பசுபதி, வேட வேஷம் பூண்டு பன்றிமீது சரம் விட்டார். அதே சமயம் அர்ஜுநனும் அதன்மீது அம்பெய்தினன். இதைக்காரணமாகக் கொண்டு அர்ஜுநன் பாசுபதம் பெற பலமுள்ளவனு என்று பார்க்க கிராத பகவான் அவனுடன் போர் செய்தார். முடிவில் அவன் சக்தியை உணர்ந்து பாசுபதமெனும் திவ்யாஸ்த்ரத்தை அளித்து அதை ஸாமான்ய

மான ஸமயத்தில் ப்ரயோகிக்காதே என்ருர். இத்தகைய உக்ரமான அஸ்த்ரம் ஒரே ஸமயத்தில் லக்ஷக் கணக்கான வரைக் கொல்லும் என்பது மாத்ரமல்ல. அதன் பின்னும் அதன் கடுமையால் உலக க்ஷேமம் குறையும் என்று கூறினர். இதை வெளியிடும் வ்யாஸர் அணுசக்தியால் உலகை அழிப்பவரை எச்சரிக்கிருர் எனலாம். திருவேடகம் எனும் திவ்ய க்ஷேத்ரத்தில் இந்த ஐதிஹ்யம் காட்டப் படுகிறது. அது சிதம்பரத்திற்குக் கிழக்கே அண்ணுமலை நகர் என்றவிடத்தில் இருக்கிறது. காண்டீவத்தின் நாணை அறுத்த சிவனது சிரஸில் வில்தண்டால் காண்டீவன் அடித்தான். அதை பார்த்த ப்ரஹ்ாரம் என சிவன் பரிவுடன் லக்ஷணமாகக் கொண்டார். பக்த பராதீனன் பகவான்.

## பனிரண்டு ஜோதிர் லிங்கம்.

சிவன் சிறப்பிற்குச் சின்னம் சிவலிங்கமே. தானே தோன்றியது ஸ்வயம்பூ லிங்கம் எனப்படும். தேவராலும் அஸுரராலும் முனிவராலும் ப்ரதிஷ்டைசெய்யப்பட்டவை சில. ஜோதிர் வடிவனுன சிவன் ஸ்வயம்பூ லிங்கத்தில் அதிகமாக ஸான்னித்யத்துடன் இருக்கிருர். அவை ஜோதிர் லிங்கமெனப்படும். அதில் 12 ப்ரஸித்தமானவை. அதன் பெயரையும் இடத்தையும் வர்ணிக்கிருர் புராண முனி.

1. ஸெளராஷ்ட்ரத்தில் ஸோமநாதம் என்ற பெயருடன் இருக்கிருர். அதை மஹம்மதியர் அழித்தனர். வடநாட்டவர் அதைத் தற்சமயம் உத்தரணம் செய்து வருகின்றனர். 2. ஸ்ரீ சைலத்தில் மல்லிகேச்வரர். 3. உஜ்ஜனியில் மஹாகாலர். 4. ஓங்காரத்தில் அமரேச்வரர். 5. ஹிமயமலையில் கேதாரேச்வரர். 6. டாகினியில் பீமேச்வரர். 7. வாராணஸியில் விச்வேச்வரர். 8. கெளதமீ தீரத்தில் திரியம்பகர். 9. ருத்ர பூமியில் வைத்யநாதர். 10. தாருகாவநத்தில் நாகேசர். 11. ஸேதுக்கரையில் ராமேசர். 12. சிவாலயம் என்னுமிடத்தில் குஸ்மேசர். இப் பனிரண்டு ஜோதிர்லிங்கங்களும் பக்தருக்காகத் தோன்றியன. தனித்தனி கதைகள் ரஸமாக இருக்கின்றன.

பற்பல லிங்கங்களின் மஹிமை கோகர்ணம் கங்கை கங்கையில், இறந்தவர் அஸ்தியைப் போடுதல். ப்ராம் மண விதவை ஸௌமினீ சூத்ரனை மணந்து குடிவெறியில் பசுங்கன்றைக் கொன்று அதனுல் பலநரகங்களை அனுப வித்து கண்ணில்லாத சண்டாளியாகி நோய்வாய்ப்பட்டு கோகர்ண க்ஷேத்ரத்தில் சிவராத்ரியன்று பிச்சையெடுத் தும் அகப்படாததால் உபவாசமிருந்து கண்விழித்த புண்யத்தால் கைலாஸஞ் சென்றது. 12 ஜோதிர் லிங்க பூஜையால் யார் யார் என்ன நற்கதி பெற்றனர்? காசி கங்கை மஹிமை. த்ரிவேணீ மஹிமை. கௌதமர் கங்கை கொண்டு வந்தது. பாபிகளைக் கௌதமர் சிவபக்தியும் வைதிக கர்மாவும் இல்லாமல் தப்த்முத்ரை தரிக்கும்படி சபித்தது. மற்றும் பல லிங்கங்களின் கதைகளைக் கூறி கோடிருத்ர ஸம்ஹிதையை முடிக்கிருர்.

## உமா ஸம்ஹிதை.

சூலமஹிமை, கிருஷ்ணன் பார்வதீ பரமேச்வரர்களை ஆராதித்து புத்ரன் முதலிய 8 வரங்களைப் பெற்றது. பாபங்கள், நரகங்கள், யமபுரி, யாதனை, சிவபக்தியே ப்ராயச்சித்தம், தானம் கலியில் புராண சிரவணமே முக்தி ஸாதனம். 18 புராணங்களில் ஒன்றையேனும் பூர்ண மாகக் கேள். உணவு உடலில் எப்படி மாறுகிறது? கர்ப்பம் எப்படித் தோன்றி வளருகிறது? உடலில் 5360 நாடிகள், 1000 பலம் மாம்ஸம், 100 பலம் ரக்தம், ஜல மல எடை, எலும்புகள், ரோமம் எவ்வளவு? மரணம், மரணத்தை அறியும் அடையாளம், பரகாயப்ரவேசவழி. யோகம், ச்ராத்தம், 18 புராணம் செய்தது, தேவி மஹிஷாஸுர சும்ப நிசும்பாஸுராதிகளைக் கொன்றது, எங்கெங்கே தேவி ஆலயம் உளது? முக்ய க்ஷேத்ரம் எவை? தேவீ பூஜா விதி, நவராத்ரி பூஜை முதலியவை களுடன் உமா ஸம்ஹிதை முடிகிறது.

## கைலாஸ ஸம்ஹிதை.

ப்ரணவ மஹிமை, அகாரத்தில் 8 அம்சம், உகாரத் தில் 13 அம்சம், மகாரத்தில் 8 அம்சம், ஸந்யாஸம். ஆன்ஹிக தர்மம். சிவயந்திர ஆவரண பூஜை [சிவோ

மஹேச்வர ஸ்சைவ ருத்ரோ விஷ்ணு: பிதாமஹ: ஸம்ஸார வைத்ய: ஸர்வக்ஞ: பரமாத்மேதி முக்யத:] என்ற 8 நாமாக்களின் மஹிமை, இதனுல் சிவ ஸஹஸ்ரநாம ஜப பலன் கிடைப்பது, காயத்ரீ ப்ரணவத்தில் லயமானது, சிவ தீக்ஷை, ஆசார்யாபிஷேகம், ப்ரக்ஞானம ப்ரம்ம முதல் 22 மஹாவாக்யங்களின் பொருள், உபதேசக்ரமம், யதி ஸம்ஸ்காரம் முதலியவைகளைக் கூறி கைலாஸ ஸம்ஹிதையை முடிக்கிருர்.

## வாயு ஸம்ஹிதை.

4 வேதம், 6 அங்கம், மீமாம்ஸா, நியாயம், புராணம், தர்ம சாஸ்திரம் என்ற 14 வித்யை, ஆயுர்வேதம், தநுர் வேதம், காந்தர்வ வேதம், அர்த்த சாஸ்த்ரம் என 4 சேர்ந்து 18 வித்யை. முதலில் ஒன்ருகயிருந்த புராணத்தை 4 லக்ஷம் சுலோகமுள்ள 18 புராணங்களாக வ்யாஸர் வகுத்தார். ஆத்மா, கால அளவு, ஸ்ருஷ்டி லயம், தக்ஷன் தேவியைக் கன்யகையாகப் பெற்றது, தக்ஷனுக்கும் தாக்ஷாயணிக்கும் ஸம்வாதம், தக்ஷ யக்ஞம் அழிந்தது, பார்வதியை மாதேவர் காளீ என்றழைத்தது, தன் கறுப்பு உடலைக் கௌசிகீ என்ற சக்தியாகச் செய்து தேவி கௌரியானது, வாக்கும் அர்த்தமுமாக பார்வதீ பரமேச்வரர் இருப்பது, வாக்கில் ஸ்தூலமானது காதில் விழுவது. ஸூக்ஷ்மமானது சிந்தாமயமானது. பரா என்பது, சிந்தைக்கு மேலானது, எல்லாவற்றிற்கும் காரணமான ப்ரக்ருதியே குண்டலினீ மாயா சுத்தாத்வா என்படுவாள். 1. மந்த்ராத்வா, 2. பதாத்வா, 3. வர்ணுத்வா, 4. புவனாத்வா, 5. தத்வாத்வா, 6. கலாத்வா என ஆறு வகைப்படுவது. பாசுபதவ்ரதம். 7 கோடி மந்த்ரங்கள். பஞ்சாக்ஷரியில் லயம், பாலுக்கழுது பசுபதியின் அருளில்லாற்குப் பாலேது? என தாய்கூற உபமன்யு பரமசிவனை நாடித் தவம் செய்து பால் கடலும் பக்ஷ்ய பர்வதமும் நினைத்தபோது தன் அருகே வரும்படி வரம்பெற்ருன். என்பதோடு வாயு ஸம்ஹிதை பூர்வக்ண்டம் பூர்ணமாகிறது.

ஸ்ரீக்ருஷ்ணன் உபமன்யுவிடம் சிவதீக்ஷை பெற்றது, சிவபூஜை 100 கோடி சுலோகமயமானது, ஸ்வேதான் முதலிய 26 சிவயோகாசார்யர்கள் சிவாம்சத்தால்

தோன்றி சிவதர்மத்தை ஒவ்வொருவரும் நான்கு சிஷ்யர் மூலமாக விருத்தி செய்த்து. பார்வதிக்கு சிவன் பக்தி க்ஞாநம் முதலியவைகளை உபதேசித்தது. சிறிய விதையி லிருந்து ஆலமரம் தோன்றுவதுபோல் சிவ பஞ்சாக்ஷரியி லிருந்து வேதம் உலகம் எல்லாம் தோன்றியது, ஜபம் செய்யும் வகை, ஜபமாலை, ஜப ஸங்க்யை, சிவனே குரு. த்வாத் சாந்தம், மூர்த்தா நெற்றி, புருவங்களிடை முதலிய இடங்களில் சிவனை த்யாநம் செய்து மாநஸிக பூஜை, பூஜாபலன், நைமிசாரண்ய முநிவர் யாகத்தை முடித்து காசி சென்று சிவபூஜையால் முக்திபெற்றதுடன் வாயு ஸம்ஹிதையையும் சிவபுராணத்தையும் பூர்த்திசெய்கிறார் வ்யாஸமுநிவர்.

சிவபுராண சுருக்கம் முற்றிற்று.

---

## சிவபுராணத்தில் ஸாரமான சில அம்சங்கள்.

அருந்ததி சதுர்முகனது கன்யகை. பஹிஷ்டை காலத்தில் சிவபூஜை செய்ததால் சக்கிலி குலத்தில் பிறந்தாள். வஸிஷ்டர் அவளை அக்நி ப்ரவேசம் செய்வித்து மணந்துகொண்டார். கல்யாணத்தன்று இரவு நக்ஷத்ர வடிவமான அருந்ததியைத் தர்சிக்கும் பெண் தீர்க்க ஸுமங்கலியாகவும் பதிவ்ரதையாகவும் இருப்பாள்.

கிம்கர்ம கிமகர்மேதி—ஆர்த்தோஜி க்ஞாஸு: முதலிய பல கீதா ச்லோகங்கள் இங்கு இருக்கின்றன.

ம்ருத ஸஞ்ஜீவிநீ மந்த்ரம் தியாநம் முதலியவைகளை விதிப்படி உபதேசம் பெற்று ஜபித்தால் அகால மரண மாக இறந்தவரை எழுப்பலாம்.

பூஜா—பூ என்றால் போகம் ஸித்தி முதலியவைகளின் ஸித்தி—ஜா என்றால் இதனால் உண்டாகிறது என்று பொருள். பூஜையினால் பலவித போகங்களைப் பெற லாம் என்று பொருள். பூஜா என்ற சப்தத்திலே இருக் கிறது. ப்ரதக்ஷிணம், உடலால் ப்ரணவஜபம் செய்வதாம். சிவாலயத்தை 108 ப்ரதக்ஷிணம் நித்யம் செய்துவந்தால் ஸகல பாபங்களும் அகலும். ஸர்வ காமனைகளும் பூர்த்தி யாகும். அடிமேல் அடிவைத்து பூர்ண கர்ப்பிணிபோல் நடக்கவேண்டும். வேகமாக ப்ரதக்ஷிணம் செய்யக்கூடாது.

பலிபீடம். சிவமாயையே சக்ரம்போல் பலிபீடமாக அமர்ந்துளது. த்வஜஸ்தம்பத்தின் அருகே அது இருக்கும். அங்கு ஸாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து அஹங்காரத்தைப் பலிபீடத்தில் பலியாகவிட்டுவிட்டு சிவதர்சநத்திற்குச் செல்லவேண்டும்.

சிவலிங்கத்திற்கு மாத்ரம் நிவேதநம் செய்த பொருள் அதற்காகவே பரம சுத்தனுகக் காத்திருக்கும் சண்டிகேச்வரனுக்கே ஏற்றதாகும். நாம் அதைப்புஜிக்கலாகாது.

அபிஷேகம் ஆத்மஸித்தியைத் தரும். க்ஷீரதாராபிஷேகம் புத்தியை விருத்தி செய்யும். குடும்ப கலஹத்தை அகற்றும். வாஸனைத் தைலம் போகம் தரும். எள்ளு எண்ணெய் சத்ருவை அழிக்கும், சக்கரையுடன் கூடிய க்ஷீரதாரை சத்ருவால் உண்டான உச்சாடநத்தை நீக்கும். தேன் தநத்தையும் சாரீரத்தையும் தரும். கரும்பு ரஸம் ஆநந்தத்தை அளிக்கும்.

மரணம் எப்போது உண்டாகும் ? என்பதை அறிந்து காசிக்குச் செல். அதைவிட்டு வெளியில் வராமல் அங்கு மரணம் அடை. மறுபிறவி இராது.

ஸஹஸ்ரநாமாவும் இரு சிவநாம அஷ்டோத்தர சத நாமாவும் இங்கே இருக்கின்றன.

பரகாய ப்ரவேசம் கூடுவிட்டு கூடுபாய்வதற்கேற்ற மந்த்ரத்தை இதில் காணலாம்.

காணுததைக் கேநத்தில் தேடு என்ற பழமொழிப்படி உமாதேவி ஸ்வர்ணமயமாகத் தோன்றி தேவர்களுக்கு தத்வம் கூறுகிருள்.

விஷ்ணுக்ராந்தி துளஸி இவைகளால் அம்பிகையைப் பூஜிக்காதே. துளஸியால் விக்நேசனே அர்ச்சிக்காதே. அக்ஷதையால் விஷ்ணுவை, தாழம்பூவால் சிவனைப் பூஜிக்காதே.

வீட்டிலேயே தங்கும் தநம். சுடுகாட்டிலே பந்து மித்ரர் திரும்புவர். புண்ய பாபமே உன்னுடன் கூடவரும்.

கல்வி கற்பிக்காதவனும் கடன் வைத்தவனுமான தந்தைப் புத்ரனுக்கு சத்ரு ஆவான்.

க்ஞாந ஜலத்தால் வைராக்யமெனும் மண் இட்டு அக்ஞாநமெனும் ஜல மல நாற்றத்தை நீக்கு. ஸ்வகர்மாவால் பக்தி. பக்தியால் க்ஞாநம், க்ஞாநத்தால் முக்தி உண்டாகும்.

கட்டையில் பிடித்துக்கொண்ட பின்தான் அக்நியைக் கண்ணுல் காணலாம். லிங்கம் அல்லது மூர்த்தியைப் பிடித்துக்கொண்டால்தான் சிவனைக் காணலாம்.

கருணமூர்த்திதான் கடவுள். உன்னை அவர் அருளுக்குப் பக்குவமாகச் செய்து கொண்டால்தான் அவர் அருளை நீ பெறலாம். ஸ்வர்ணத்தைதான் அக்நி உருக்குகிறது. கரியை உருக்குவதில்லை.

ஸரஸ: விரஸ: சாபி—ஸரஸத்வம் நமுஞ்சதி |
ஸாக்ஷரா விபரீதா: சேத்—ராக்ஷஸர நாத்ர ஸம்சய: ||

ரஸமுள்ளவன் விபரீதனுக ஆனுலும், ஸரஸமாகவேஇருப்பான். அக்ஷரமுள்ளவன் (படித்தவன்) விபரீதமானுல் ராக்ஷஸனுவான் ஸந்தேஹமில்லை. என்ற இதில் சப்த விசித்ரத்தையும் பகவான் வ்யாஸர் காட்டுகிருர். விபரீதா என்ருல் திருப்பி என்று பொருள்.

ஸரஸ. இதை திருப்பிப் படித்தாலும் ஸரஸ—தான். மாறுதலில்லை. ஸாக்ஷரா. இதைத் திருப்பிப் படித்தால் ராக்ஷஸா என்ருகும்.

**சிவபுராண ஸாரம் முற்றிற்று.**



## கைவசமுள்ள நமது பிரசுரங்கள்.

| | | ரூ. | அ |
|---|---|---|---|
| 1. | 40 ஸம்ஸ்காரம் .... .... | 1 | 4 |
| 2. | ஸ்துதி குஸுமாஞ்ஜலி 7வது பதிப்பு .... | 0 | 4 |
| 3. | ஸ்தோத்திர சிந்தாமணி 3 ,, ,, | 0 | 4 |
| 4. | வேதமும் வேதாங்கமும் 3 ,, ,, .... | 0 | 3 |
| 5. | ஸ்ரீ சங்கரசரிதம் பூஜாகல்பத்துடன் .... | 0 | 3 |
| 6. | ஸ்ரீ வ்யாஸ சரிதம் .... .... | 0 | 2 |
| 7. | அஷ்டபதி தத்வார்த்த ஸாரம் .... | 0 | 2 |
| 8. | ஸ்ரீகோபிகாகீதமும் ஸ்ரீபஜகோவிந்தமும் (2ம் ப.) | 0 | 3 |
| 9. | ஆதித்ய ஹ்ருதயமும் கனகதாராஸ்தவமும் .... | 0 | 3 |
| 10. | துளஸீ சரிதமும்-பூஜா கல்பமும் .... | 0 | 4 |
| 11. | காவேரி பூஜை .... ... .... | 0 | 2 |
| 12. | சங்கராந்தி பூஜையும், கோ பூஜையும் .... | 0 | 2 |
| 13. | ஸரஸ்வதி பூஜை .... .... .... | 0 | 4 |
| 14. | ஸ்ரீ சிவராத்ரி பூஜையும் கதையும் .... | 0 | 4 |
| 15. | ஸ்ரீ சித்ரகுப்த, காமாக்ஷி, (காரடை நோன்பு) ஸ்ரீ ராமநவமி பூஜாகல்பங்கள் .... | 0 | 4 |
| 16. | ஸதாசாரம் .... .... .... | 0 | 10 |
| 17. | ஸ்ரீ வரலக்ஷ்மீ வ்ருதமும் பூஜாகல்பமும் .... | 0 | 4 |
| 18. | நவராத்ரிபூஜை .... .... | 0 | 4 |
| 19. | ஸ்ரீ விநாயகசதுர்த்தியும் பூஜா கல்பமும் .... | 0 | 4 |
| 20. | வேங்கடேச வ்ரதமும், அஷ்டோத்தரமும் .... | 0 | 2 |
| 21. | ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாஷ்யம் .... | 2 | 8 |
| 22. | ப்ரதோஷ பூஜை .... .... | 0 | 2 |

**அச்சிலுள்ளவை.**

1. ஆபஸ்தம்ப தர்ப்பணம் ஸ்வரத்துடன்.
2. 25 ஏகாதசிகளின் மஹிமை, கதை.

குறிப்பு:- எல்லாவற்றிற்கும் தபால் சார்ஜ் வேறு.

கிடைக்குமிடம் :—

**ஆசிரியர், ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவசர்மா**, சாந்தாச்ரமம்
குருகுலம், 2, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம்,
T. நகர் போஸ்ட், சென்னை-17.

---

**வைதிக தர்மவர்த்தனீ**-(மாதப்பத்திரிகை) வருட சந்தா ரூ. 4